# நல்ல நாடு

[ இலக்கியத் தமிழ்க் கட்டுரைகள் ]

மு. கோவிந்தசாமி B. O. L. (Hons)
முதல்வர், கணேசர் செந்தமிழ்க் கல்லூரி,
மேலைச்சிவபுரி (புதுக்கோட்டை)

விற்பனை யுரிமை :
மலர் நிலையம்
பிராட்வே, சென்னை.

முதற் பதிப்பு : ஏப்ரல், 1955.



இளமையிலேயே எனக்காவனவெல்லாம் இயற்றி,
ஆனால் என்னால் ஒருதவியையும் கருதாமல்,
எதிர் நன்றி கருதாத இன்-தமிழ் வாழ்வு
வாழ்ந்து சென்ற

அம்மையப்பர்க்கு இந்நூலை அளிக்கிறேன்.

விலை ரூ. 2/-

கலைமகள் — காரைக்குடி

## உள்ளுறை.

## சிறப்புரை


# ஆசிரியர் மு. அருணசலம் பிள்ளையவர்கள்,

தமிழ்ப் பேருரையாளர்,
அண்ணமலைப் பல்கலைக்கழகம்.


பழந்தமிழ் நூல்களிற் பொதிந்து கிடக்கும் பரந்த நோக்கமும் சிறந்த கருத்துக்களும் படிப்பவர் அறிவிற்கு நல்விருந்தாய்ப் பயிலுந்தொறும் அளவில் இன்பம் பயப்பனவாகும். ஆதலின் அந்நூல்களைத் துணைக்கொண்டு பண்டைத் தமிழரின் அரசியல் முறை ஆராய்ச்சித்திறன் இன்ப வாழ்வு ஈகை வீரம் ஒப்புரவு முதலான அரும்பெரும் பண்புகளை எளிய இனிய உரைநடையிலாக்கி அறிவுப்பசி யுடையார்க்கு அளவறிந்தூட்டி இனபுறுத்தல் புலமைச் செல்வம் படைத்தோர் கடமையாம். இதனை நன்குணர்ந்த மேலைச்சிவபுரிக் கணேசர் செந்தமிழ்க் கல்லூரி முதல்வர் திரு. மு. கோவிந்தசாமி (பி. ஓ. எல். ஹானர்ஸ்) அவர்கள 'நல்லநாடு' என்னும் இந்நூலை இயற்றி வெளிப்படுத்தி யிருப்பது பாராட்டற்குரியதாகும்.

ஒரு நாடு நல்ல நாடாதற்கு இன்னின்ன இயல்பு களைப் பெற்றிருத்தல்வேண்டுமெனக்கண்டு, அவை பலவும் உடைத்தாதலின் 'நம் பாரத நாடு பாருக்குள்ளே நல்லநாடு' எனப் பாராட்டிப் பாடினர் தேசியகவி சுப்பிரமணிய பாரதியார். ஏறத்தாழ இற்றைக்கு ஆயிரத் தெண்ணூறு ஆண்டுகளுக்கு முன்னர்த் தோன்றி அறிவுத் துறையிற் சிறப்புற்று விளங்கிய கவியரசி ஔவைப்பிராட்டியாரும் நல்ல நாடாவது யாது என்னும ஆராய்ச்சியிற்றலைப்பட்டு, நாடு காடு மேடு பள்ளம் எனு மிவற்றுள் யாதாயினும ஆகுக, அது பற்றி ஒரு நாடு உயர்வு தாழ்வு எய்துதல் இல்லை; யாண்டு நனமக்கள் உளரோ அந்நாடே நன்னாடாம் எனச் சிறியதொரு செய் யுளில் அறுதியிட்டுக் கூறுவாராயினர். அச் செய்யுளின் விளக்கமே முதற்கட்டுரையாகும்; அதன் பெயரே நூற் பெயருமாயிற்று.

இனி, தனக்கேயுரிய எழுத்தாகிய ழகரத்தையுடையது தமிழ்மொழி. அது இன்பம என்னும் பொருள் தருவது. மேலும் அம்மொழி, உலகியலின்பத்தையும் உரையுணர் விறந்து நின்ற ஒப்பற்ற பரம்பொருளாற் பெறும் பேரின்பத்தையும் உள்ளியுள்ளி ஓதியோதி அவ்வின்பமே வடிவாய்த்திகழ்வது. ஆதலின் தமிழும் இன்பமும் வேறு வேறன்று; ஒன்றேயெனக் கூறுவது இரண்டாம் பகுதி.

புறநானூறு முதலான முன்னைத் தமிழிலக்கியங்களிற் சிதர்ந்து கிடந்த சில கருத்துக்களைத் தொகுத்தே பிற்காலத்துப் பாட்டியல் நூலார் பிள்ளைத் தமிழென்னும் பிரபந்தத்திற்கு விதிவகுப்பாராயினர் எனப் பிள்ளைத் தமிழன் என்னும் பிரிவு சான்று காட்டி நிறுவுகின்றது. இது நினைவு கூரத்தக்கது.

அடுத்துவரும் வளமும் உளமும் என்ற பகுதி பூம்புகாரின் இயற்கை வளத்தையும் அக் கடற்கரையிற் சிற்றிலிழைத்து விளையாடும் சிறுமியரின் உளப்பாங்கையும் வடித்தெடுத்துக் காட்டுகின்றது. பின்னர், தண்டியலங்காரத்தில் நுட்ப அணிக்கு இலக்கியமாயாளப்பட்ட செய்யுளொன்றன் வாயிலாகச் செய்யுட்கு உயிராவது இன்னதென ஆராயப்பெற்றுளது. இவ்விரு பகுதியும் கவிச்சுவை நுகர்வார்க்குக் கழிபேருவகை யூட்டுவதுடன், நூலாசிரியரின் நுண்மாணுழைபுலத்தையும் புலப்படுத்துகின்றன. இவற்றை இந் நல்லநாட்டின் உயிர்நாடிகளென்னலாம்.

வெண்ணெயும் சுண்ணும்பும் நிறத்தாலொன்றுபட்டிருப்பினும் சிறப்பியல்பால் வேறுபடுதல் போல, மேனாட்டு வெள்ளையரனைவரும் நிறத்தாலொற்றுமை யுடையராயினும் மக்கட் பண்பால் இருவேறியல்பினராவரென்பதும், அதிகமான் கனித்தொண்டும் அமெரிக்கரின் அணுக்குண்டும், பழந்தமிழரின் வீரம் கொடை அறிவு நீதி முதலாயினவும், உடல் பொருளாவி யெல்லாம் உலக நலத்தின் பொருட்டு உவந்தளித்தலே உண்மையான ஒப்புரவென்பதும் பிறவும் ஆராயப்பெற்றுள்ளமையால் இந் நூல் பல்லாற்றானும் மக்கட்குப் பயன்படுமென நம்புகிறேன்.

இந் ‘நல்ல நாடு’ நாட்டின் பல பாகங்களினுஞ் சென்று ஆங்காங்குள்ள மக்களுடைய கையினும் மெய்யினும் கருத்தினும் நின்று களிநடம்புரியின் நந்நாடு நன்னாடாகத் திகழுமென்று கூறலாம்.

இந்நூலை ஆக்கி உதவிய நண்பர் மு. கோவிந்தசாமி அவர்கள் தம புலமை நலத்தை மேலும் மேலும் பல நூல்களின் வாயிலாக உலகிற்குதவுதற் பொருட்டு எல்லாம் வல்ல தில்லைக் கூத்தப் பெருமான் திருவருள் புரிவாராக என வேண்டுகிறேன்.

**மு. அருணாசலம் பிள்ளை**

# அணிந்துரை

## திரு. வி. ஐ. சுப்ரமணியம், M. A.,

**தமிழ் ஆராய்ச்சித்துறைத் தலைவர்,**
**திருவாங்கூர் பல்கலைக் கழகம்,**

நல்லநாடு ஆசிரியர் திரு. கோவிந்தசாமி எனது நண்பர். அண்ணமலையில் நான் பயின்ற பொழுதும் டெல்லியில் வேலை பார்த்த பொழுதும் அவர்களுடன் நெருங்கிப் பழகியிருக்கிறேன். அவர்கள் மேடையில் எவ்வளவு திறம்படப் பேசுவார்களோ அவ்வளவு திறம்பட எழுதும் ஆற்றல் படைத்தவர்கள். தெளிந்த சிந்தையும பல நூற்பயிற்சியும், பிறமொழி நூற்களில் பழக்கமும் அவர்களுக்கு நிறைய உண்டு. அவற்றை, இங்கு வெளியான கட்டுரை ஒவ்வொன்றும் எடுத்துக்காட்டும். இக்கட்டுரைகளிற் சில அவ்வப்போது பத்திரிகைகளில் வெளியானவை. கால நிலைக்கேற்ப சில உதாரணங்களும் தலைப்புக்களும் இக்கட்டுரைகள் கொண்டிருப்பதற்கு இதுவே காரணம்.

தாய்மொழித்தமிழுக்குப் பணி புரிந்து மாள்வோம் என்று கங்கணம் கட்டி நிற்கும் ஒருசில இளைஞர்களில் இவ்வாசிரியரும் ஒருவர். அவர்களுடைய முதல் முயற்சியாகிய இந்நூல் மேலும் பல இலக்கியநற்பணிகள் செய்வதற்கு வழியமைத்துத் தருவதாகுக.

**வி. ஐ. சுப்ரமணியம்.**
*16-4-'55*

# முன்னுரை

செய்யுளில் வெறுப்புற்ற தமிழ் இன்று வேண்டுமளவு உரை நடையையும் பெற்றின்புறுகிறது; மீண்டும் நல்ல செய்யுள் கிடைக்குமோவென விழையும் காலமும் வந்து விட்டது.

கட்டி உரைக்கப்படுவதெல்லாம் கட்டுரையே. இப்படிப் பார்த்தால் கதை, நாவல், நாடகம், வருணனை யாவும் கட்டுரையேயாம். எனினும் இலக்கியத்துள் கட்டுரை என்ற தனிப் பிரிவொன்றே ஏற்பட்டுவிட்டது; ஒரு குறிப்பிட்ட பொருளைப்பற்றி உரை நடையில் எழுதுவதே அது. நம் நாட்டில் இத்துறைத் தேர்ச்சியைப் பெரிதாகக் கருதாவிடினும்-சிறுகதை, நாவலில் கருதுகின்றனர்-மேனாட்டார் இத்துறையையும் போற்றிப் பாராட்டி வளர்க்கின்றனர். இவ்வகையில் வல்லோரை கட்டுரையாளர் ( Essayist ) எனப் பிரிக்கின்றனர். 'கட்டுரை வன்மையும்' என மணிமேகலை இதனைக் கலைகளுள் ஒன்றாகக் கணிக்கின்றது.

முன்பு செய்யுளால் எழுதியதை யெல்லாம் இப்போது உரைநடையிலாக்குகின்றனர். செய்யுளினும் உரைநடை சிறிது எளிதென இயம்புவர் பலர். ஆனால் இதனிலும் அருமையொன்றுண்டு. செய்யுளில் விடுபட்டதை அடங்கியிருக்கிறதெனவும் தெரியாததை மறைந்திருக்கிறதெனவும் கூறி மதிப்படைந்து விடலாம். ஆனால் உரைநடையில் முழுமையும், தெளிவும் வேண்டும். இதனாலேயே உலகில் சட்டங்களும் உடன்படிக்கைகளும் உரையிலேயே அமைகின்றன. வரலாறும் தத்துவமும் உரையிலாகின்றன. இன்று உலகின் எத்துறையும் உரைநடைத்துறையாலேயே இயங்குகின்றன.

ஒன்றைப் பார்த்து அதேமாதிரி காப்பியடித்தால் நாடு அதே நிலையில் அசையாமல் இருக்கும். அம்மாதிரியில் வேறொன்றைப் படைத்தால் நாடு பெருகும். ஆனால் தானே நினைத்துப் புதிதாக ஒன்றை யெழுதினால் நாடு வளரும். வளர்ச்சிக்குழைப்பவனே நாட்டுக்கு நன்மை செய்வோருள் சிறந்தவன்.

சொந்தமாக (Original) நினைத்தெழுதிய கட்டுரைகளும் பிறவிலக்கியங்களும் நமக்கு மிகமிகத் தேவையானவை.

நல்ல நாடு என்ற இக்கட்டுரை நூல் இன்னும் ஒரு பகுதியை எதிர்நோக்கி வருகிறது. இன்னும் பல நூல்களுக்கும் முதல்வெளியீடாகவும் நிற்கிறது. அவையெல்லாம் வெளிவருவது ஆண்டவன் அருட்டிறத்தையும் கற்றோர் அன்புத் திறத்தையும் இந்நூலின் உள்திறத்தையும் பொறுத்திருக்கிறது.

நல்ல நாட்டிற்கு நுண்மாண் நுழைபுலமும் சிந்தனையும் வேண்டுமென்பதற்கடையாளமாக அட்டைப் படம் அமைக்கப்பட்டுளது. ஐந்தாறு எழுத்துப் பிழைகளும் ஐந்தாறு ஆண்டுகளாக எழுதிய கட்டுரைகளும் இதில் அடங்கியவை என்பதனை மனத்துட்கொண்டு இதனைப் படிக்கவேண்டும்.

என்னையும் இந்நூலையும் நடுநிலையுடன் அறிந்து அணிந்துரையும் சிறப்புரையுமெழுதிய அருமை நண்பர் திரு. வி. ஐ. சுப்ரமணியம M. A. அவர்கட்கும் எனது ஆசிரியரும் தமிழ் நாட்டின் தலைசிறந்த தமிழ்ப் புலமைசான்றோருள் ஒருவரும் ஆகிய வித்வான். திரு. அருணைசலம் பிள்ளை யவர்கட்கும் எனது நன்றி யுரியதாகும்.

இதன் விற்பனையுரிமையை ஏற்றுக்கொண்ட மலர் நிலையத்தார்க்கு யான் பெரிதும் கடமைப் பட்டிருக்கிறேன். இந்நூல் வெளியீட்டிற்குப் பேருதவியாயிருந்த கணேசர் செந்தமிழ்க் கல்லூரி ஆசிரியர் வித்வான் திரு. நாகசண்முகத்திற்கும் மற்ற ஆசிரியர்க்கும் எனது நன்றி.

மு. கோவிந்தசாமி.

# நல்ல நாடு

**நாடா கொன்றோ காடா கொன்றோ**
**அவலா கொன்றோ மிசையா கொன்றோ**
**எவ்வழி நல்லவர் ஆடவர்**
**அவ்வழி நல்லை வாழிய நிலனே.**

இது ஔவையாரால் பாடப்பெற்ற புறநானூற்றுப் பாடல். சுருக்கமும் ஆழ்ந்த உண்மையும் பொதிந்த பாடல். மக்கள் வாழ்ந்த நாடாகட்டும், மக்கள வாழாத காடாகட்டும், செழுமையும் நீர்வளமுமுள்ள பள்ள(நஞ்சை)மாகட்டும், வெறுமையும், வறட்சியுமுள்ள மேட்டு நில (பீடபூமி, புஞ்சை) மாகட்டும், எவ்விடத்தில் மக்கள் நல்லவராக இருக்கின்றனரோ அவ்விடத்தேதான் நிலமும் நல்லதாகின்றது என்பதே இப் பாடலின் கருத்தாகும்.

"ஆடவர்" என்பது இங்கே பொதுவாக மக்களையே குறிக்கின்றது. ஆடவர் என்றால் வினையை ஆளுந்திறன் (ஆடல்) உடையவர். ஆண், பெண் இரு பகுதியினரிடத்தும் வினைத்திறம் உண்மையால் இதனை இருவர்க்கும் பொதுவாகக் கொள்வதே சிறந்ததாகும்.

நல்லவர் என்றால் பண்புடையவர், மனித ஒழுக்கமுடையவர் எனப் பொருளாம். அறிவுடையோரே

நல்லொழுக்கப் பண்புடையோராவர். அறிவு, நன்மையை அறிவது. உலகத்தோடொட்ட ஒழுகும் ஒழுக்கம் அறிவு; அதுவே பண்பு (நாகரிகம்) என வள்ளுவர் குறிக்கிறார். எனவே அறிவினால் வினைத் திறமுடையோர் வாழும் நாடு (நிலம்) நல்ல நாடாம். செழிப்பான செல்வமுயர்ந்த நாட்டை மட்டும் நாம் நல்ல நாடு என்பதில்லை. அங்குள்ள மக்கள் நல்லவர்களா என்பதைக்கொண்டே 'நல்ல நாடு' என்கிறோம். இது உலக வழக்கு.

மனிதனின் அறிவு (வினைத்திறம்) அரும்பத் தொடங்கிய பின்னரே நிலங்கள் (நாடுகள்) நல்ல நிலங்களாயின. இப்பொழுது உலகில் இருக்கும் வயல்நிலம், மலைகள், பீடபூமிகள், சதுப்பு நிலங்கள், காடுகள், பாலைவனங்கள் யாவும் உலகில் பல கோடி ஆண்டுகளாகவே இருக்கின்றன. ஆனால் மனிதன் அறிவு வளர்ச்சியின்றி விலங்கோடு விலங்காய் - காட்டுமிராண்டியாய் - நாடோடியாய் மரக்கிளைகளிலும், மலைக் குகைகளிலும், புதர்களிலும், பனி வீடுகளிலும் வாழ்ந்த காலத்தில் நிலங்கள் இன்றுள்ளன போல நல்ல நிலங்களாகப் போற்றப்படவில்லை.

மனிதன் மலை, பீடபூமிகளில் மணிகளையும், பொன், இரும்பு, நிலக்கரிகளையும் காண்கிறான். காடுகளில், தேக்கு, சந்தனம், தேன், பலன்மரங்கள் இவற்றைக் காண்கிறான்.

இவை மட்டுமின்றி "விஞ்ஞானத்தால் மின்சாரத்தைக்" கண்ட பிறகு உலகத்தையே - இயற்கையையே மனிதன் மாற்றியமைத்தான். 'லூதர் பர்பாங்க்' போன்ற விஞ்ஞானிகள் தாவரப் புதுமைகளைக் காட்டிச் சென்றனர். பனிச் சதுப்பில் பசு வயல், நஞ்சைப்பயிர் ஆக்குகிறான். நஞ்சையில் தேயிலையை விளைக்கும் ஆற்றல் படைக்கிறான்.

அத்துணையும்மனிதனிடம் அறிவும் பின்னர் விஞ்ஞான அறிவும் முளைத்த பின் ஏற்பட்ட விளைவுகளாம்.

இவை மட்டுமின்றி மனிதன் தத்துவங்களைப் (கோட்பாடுகள்) படைத்துக் கொண்டான். மக்களிடம் சிறப்பும் அமைதியும் வளர பொருட்கொள்கைகள், மனதைத் தூய்மைப்படுத்தும் சமயக் கொள்கைகள், தனியானவரை ஒன்றுபடுத்தும் சமூகக் கொளகைகள் இவைகளை வகுத்தான்.

இவை யாவும் அறிவன்றோ? இவ்வறிவினால் உற்ற வினைத்திறனால் அனைவருடனும் இசைந்து பழகும் பண்பாட்டை (ஒழுக்கத்தை) அடைந்தான்; எனவே நல்லவனானான். இந்த நல்லவன் சேர்க்கையால், மதிப்பற்று நல்லவாய்க் கருதப்படாத சிந்து, கங்கை நாடுகள் சிறப்புற்றன. உலகின் காட்டுப் (காங்கோ, மத்திய ஆப்பிரிக்கா, அமேஸான்) பிரதேசங்கள் செழுமையுற்றன. தென்-ஆப்பிரிக்க, ஆஸ்திரேலிய பீடபூமிகள் பொன் கொழிக்கின்றன; ரஷ்யப் பனிவெளிகள் பயன் கொழிக்கின்றன. அமெரிக்கப் பள்ள நிலங்கள் பரமபத இன்பந் தருகின்றன.

இங்ஙனம், கெட்டுக் கிடந்த நிலங்கள் நல்ல ஆடவர் அடைந்த பின் நல்லவையாயின. நாகரிக நிலங்கள் (நாடுகள்) ஆயின.

மக்கள் அறிவுடையராலன்றி நாட்டை நாகரிகமுடையதாகச் செய்ய முடியாதென்று உணர்த்தும் 'வழிகாட்டி'யாகின்றது இப்பாடல். "அநாகரிக மனிதன் நாகரிக மனிதனைக் காணத் தாண்டிய பாலம்" அறிவென்பதை இப்பாடல் குறிக்கின்றது.

எனவே, மனிதன் எந்த இடத்தில் 'மனிதன்' ஆகிறான், மனித இனத்தின் வரலாறு எங்கு தொடங்குகிறது என்ற உயர்ந்த உண்மையை ஆழத்தில் கொண்டுள்ள 'மறைப் பாடலாகும்' இச்சிறு பாடல்.

* * *

# தமிழ் ‘இன்பம்’

தமிழே இன்பம், தமிழ் என்ற சொல்லின் பொருளும் இன்பம். ‘இயற்கையிலே கருத்தாங்கி இனிமையிலே வடிவெடுத்து’ எனப் பெரியார் திரு வி. க. அவர்கள் அன்னைத் தமிழை வாழ்த்துகிறார். அமிழ்தம், பழம் என்ற சொற்களிலுள்ள ழகரத்தை, மழலை, குழல் என்ற சொற்களின் ழகரத்தை, செழுமை, அழகு ஆய காட்சியின் ழகரத்தைச் சிறப்பெழுத்தாகக் கொண்ட தமிழ் ‘இனிமை யாகத்’ தானே இருக்க முடியும்.

நினைத்தபடி, பேசுகிறபடி மனிதன் ஆகிறான் என்பது உண்மை. இன்ப வடிவினனை இறைவனை நினைப்போர் இன்பம் ஆகின்றனர். நல்லோர் குணங்களை உரைப்பவர் நன்மையுறுகின்றனர். இன்பத்தைப் பற்றிப் பேசிப் பேசித் தமிழ் இன்பமாயது. ‘இன்பமே என்னுடைய அன்பே’ என இறைவனை நாயன்மார் கூறுவர். அன்பு இன்றி இன்பமில்லை. அன்பும் சிவமும் (நன்மை) ஒன்றே. வாழ்வில் ஆண் பெண் காதல் அன்பினைப் பாடிப் பாடி, நினைந்து நினைந்து நுகர்ந்து நுகர்ந்து தமிழ் இன்பமாயிற்று; தமிழர் இன்ப மாயினர்.

பழம்பெரும் நாகரிக காலத்தில், உலகம் அறிவறியாப் பச்சிளங்குழவியாயிருந்த காலத்தில் தமிழன் ‘கடவுளை’க் கண்டான், வணங்கினான், பாடினான், ஆடினான். எந்தக் கடவுளை? காதற் கடவுளை. கடந்து நிற்பதுதானே கடவுள்

அன்று தமிழன் உள்ளத்தில் கடந்து நின்று அவனைக் கவர்ந்தது காதல். இறைவனும் காதல் வடிவினன் தானே. கடவுள் இன்பத்தையும் காதலின்பத்திற்குப் பின்னர் தான் வைத்தான்.

'தாம் வீழ்வார் மென்றோள் துயிலின் இனிதுகொல்
தாமரைக் கண்ணான் உலகு'

எனக் கேட்கிறான் தமிழன். தேவருலக இன்பமோ வைகுந்த இன்பமோ எல்லாம் காதலின்பத்தினிடம் தோற், கின்றன. ஆம், அவை ஐம்புலன் மறைந்து, அறிவொன்றி நின்று உணர்வு கடவுள் வடிவான இன்பம் கிடைத்தற் கருமையான இன்பம். ஏதோ அற்புதமாக ஓரிருவரால் காணும், கண்டும் விண்டின்புற இயலாது தனித்து நின்றின்புறுது ஒன்றி நின்றே உணரத்தக்கதாய இன்பம். ஆனால் காதலின்பமோ 'கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்றறியும்' ஐம்புலனும் ஒரே பொழுதில் நுகரும் இன்பம். மற்ற உலக இன்பத்திலும் உயர்ந்தது. அவற் றில் ஏதோ ஓரிரண்டு மூன்று புலன்களே ஒன்றும். உண் மையாக மக்கள் யார்க்கும் உயிரனைத்திற்கும் உரிய இன்பம் காதலின்பம். இதனைப் பாடிய தமிழ் உண்மையாக மக்கள் மனத்தை அறிந்து மக்களை யுயர்த்தியது. 'வாழ்க்கைக் கலையை' வளர்த்தது. காணாத கடவுளை, கொள்கை வடி வாய கடவுளைப் பாடிய தமிழ் இடைக்காலத் தமிழ். காணும் கடவுளரை, காதலின்பத்தைப் பாடிற்று பண்டைத் தமிழ். என்ன குற்றம்? மக்கள் உள்ளத்தைக் கவர்ந்த ஒன்றனைப் பாடுவது, அவர்தம் உண்மையைப் பாடுவது, அவர் உயிர் வாழ்வைப் பாடுவது குற்றமா? பின் எதைத்தான் பாடுவது? அன்று கடவுளையும் பாடினான், ஆனால் காதலுடன் இணைத்து; அதனால் வாழ்வு செழித் தது. இடைக்காலத்தே, கடவுளைப்பாடி கற்பனையை மட்டும் வளர்த்துக் காதலை மறந்தான்; அதன் வழி வாழ்வை

மறந்தான். நாட்டில் உரிமையும் அறிவும் உணர்வும் அழிந்து உண்மையின்பமும் ஓடி மறைந்தது.

'காதலையே' கண்ணாக மதித்துப் பாடிய தனிச்சிறப்பு தமிழுக்கே. மற்ற உலக மொழிகளில் காணப் பெறுமை யதுவே. இடைக்காலப் பித்தன் ஒருவன், காதலையும் காணாது, கடவுளையும் காணாது, ஆனால் சில நூல்களையும் தத்துவங்களையும் புறச் செயல்களையும் கற்று இயற்று வதையே கண்டதாக, ஏமாந்திடறிய தமிழனும் மற்றோரும் எள்ளிநகையாடுகின்றனர். என்னவென்று? பெண்களின் உருவ அழகைப் பாடுவதுதான் தமிழ், அதுவா ஓர் இலக் கியத்தின் வேலை? எப்பொழுதும் பெண்களையே புகழ்ந்து கொண்டு பாடித்திரிகிறதே! இதுவா நாகரிகம்? என்வெல் லாம் கேட்கின்றனர் ஏழை மக்கள். மற்ற மொழிகளில் இல்லையாம்!

அதுதானே சிறப்பென்பது. மற்றவரைப் பார்த்தே நடப்பதுதானா மாண்பு? சொந்தமாக ஆனால் உயர்ந்ததைக் கண்டது தமிழ். சோர்வுகண்ட உள்ளத்தே சுறு சுறுப்பும் உணர்வுமூட்டுவது தமிழ். காதலைத் தவிர உயிர்களைத் தழுவி தட்டி யெழுப்புவது வேறு யாதுதான் கூறுங் களேன்! தாங்கள் மனதிற்குள்ளே மனமாற விழைவ தொன்றனை, உயிர்களெல்லாம் ஓடி யலைந்து தேடும் ஒன்றனை, உண்மையான உலக இன்பத்தை முழுதும் அருளுமொன்றனைப் பாடியவன் அறியாதவனா? உயிர்கள் உள்ளத்தை உருவி உருவி ஆராய்ந்து அறிவிக்க விழைந் தானே அவன் பேரறிஞன்; கலைஞன்; அவன் வாழ்க! அவன் நாடு வாழ்க!

உலகில் பொருள், வலிமை, புகழ், அறிவு இவற்றா லான இன்பம் எண்ணில்லாதன உள. ஆனால் உண்மை யான (மிருகத்தனமானதன்று) பெண்ணின்பத்தின் (காதல்) முன் யாவும் மறைகின்றன. இராமலிங்கசுவாமிகள்

இதனைத் தெளிய வற்புறுத்துகிறார் 'ஜீவகாருண்ய ஒழுக்கத்தில்!' இளைஞன் (வாலிபன்) எண்ணமே காதல். சிறுவர் பொம்மைக் கலியாணம் செய்து, கணவன மனைவி சிறு வீடுகட்டி சிறு சோறாக்கி விளையாடுகின்றனர். கிழவனும் மனதிற்குள்ளேயே காதலை மறைத்து நல்லவனாக நடிக்கிறான். பொங்கினால் அறுபதாங் கலியாணம், இரண்டாந்தாரம், இளம் பெண்ணை மணம் செய்கிறான். பேசுவதென்றால் கிழவருக்குப் பெருமகிழ்வு பூரிப்பதேன்? ஞானியையும் கலக்கும் ஒன்று உலகில் காதலைத் தவிர வேறில்லையெனக் கண்டறிந்து கூறினர் ஞானிகள். துறவிகள் (மணிவாசகர், நம்மாழ்வார், ஆண்டாள், சிவஞான சுவாமி) காதலைப் பாடினால் துய்த்தோரும், அவ்வகையில் நுகர்ந்திருப்பாரென்று சொல்லமுடியாது. திருக்கோவையும், திருப்பாவையும், திருவிருத்தமும் காதலின் கனிவுகள் அல்லவா!

இங்ஙனம், எல்லோரையும் இழுத்து, உயர்வையளித்து உயரின்பத்தினை ஊற்றாகப் பெருக்கும் காதலைப் பாடினால் அதைக் கசக்கும் ஒருவனை மனிதனென்று சொல்வது? மனிதச் சிலையது! போலிக்கோலம் பூண்ட பொய்யன்! கூடா வொழுக்கங்கொண்ட கொடியவன!

சில இளைஞர் (வாலிபர்) கருத்து நிறையக் காதல் கொண்டிருப்பர். நண்பரும் அம்மையப்பனும் திருமணம் பற்றிப் பேசினால் அழுவர், வெறுப்பர், அகன்றோடுவர், அது வேண்டாம் தொல்லையென்பர். ஆனால் உள்ளம் மட்டும் தனியே காதற் கடிதங்கள் எழுதும், கனவுகள் காணும், இந்த இளம் பிள்ளைகள் இனத்தில்தான் இவர்களைச் சேர்க்க வேண்டும்.

'நீ சொல்வது பொய். உன் உண்மையான உள்ளமிது. இதோ கண்டு மகிழ்' என ஓதி வைத்த உயர்

பணியை, இலக்கியத்தை உதவாதது என்பவன் இவ்வுலக வாழ்க்கைக்கு உதவாதவன் அன்றோ!

கலையழகு கனியப் பாடிய அப்பழந்தமிழ் இலக்கியச் சோலை அளிக்காத தன்மையை, இன்பத்தை வேறு எங்கு தான் இவ்வேழை பெறப்போகிறான்?

வேண்டுமானால், இடைக்காலக் காதல் இலக்கியத்தில் சிறிது வெறுப்பிற் கிடமுண்டு. அதுகொண்டு எல்லாவற்றையும் வெறுப்பதா? பெண்ணைப் பாடுகிற இலக்கியம் என்னும்போதே வெறுப்பது, 'கலியாணம்என்றால் அழும் கருத்தறியாச் சிறுபிள்ளைத்தனமல்லவா? கலியாணம் ஆன பின்னல்லவோ தெரியும் தம்பியின் வெறுப்பு?

பண்டைத் தமிழ் இலக்கியங்கள் இயற்கையை, அளவறிந்து, உண்மைக் காதலை, கடவுட் காதலைப் பாடின. இடையில் வழி தவறிய தமிழ்ப் புலவர் இயற்கை மறந்து வெறியுங்கொண்டு, காமத்தைப் (காதலையல்ல) பாடிவிட்டனர். வந்தது பழி. காதல் வேறு; காமம் வேறு! காதல் கடவுள் தன்மையது. காமம் விலங்குணர்வினது. அகநானூறு,குறுந்தொகைப் பாடல்கள் அழகிய கலைக்கோயில்கள். இதனைக் கற்றுணர்ந்து, மற்றதை மறந்து மகிழுங்கள் கலித்தொகையில் குறிஞ்சித்திணை முதற்பாட்டு உலகில் ஓர் உயர் தனிப்பாடல் என்பேன். உலகில் சிறந்த கலைவளமுற்ற பாடல்களுள் இது சிறந்ததாகுமெனக் கூறலாம். அத்தகைய அழகை தமிழன் இழப்பதா!

தமிழன் எண்ணுவதைவிட, பேசுவதைவிட செயலை முதலில் வைத்தான், கடவுளை மறக்கவில்லை. ஆனால் அவரில் மயங்கி வாழ்க்கையை மறவாத பெருமை அவனுக்குண்டு. பண்டு முழுதும் வாழ்வையே விளைத்தான். கடவுட் கொள்கையும் வாழ்வின் வளத்திற்கும் இன்பத்திற்குந் தானே? வாழ்வையே அகம்புறமாகப் பாடினான். அரசியல்,

காதலாகப் பகுத்து வாழ்ந்தான். உள்ளும் புறமும் ஒன்றிய தல்லவா? ஒன்றின்றி மற்றதில்லை; உடலும் உயிரும்போல. அரசியலே அவன் உடல்! காதல் அதன் உயிர். உயிரின்றி உடல் வாழாது. ஆதலின் உயரிய காதலை உயிரினும் காத்தான்; உயிரைக் கொடுத்தும் காத்தான். நாட்டின் காதல் வாழ்வு கலக்கமுறுமல் காத்த உயிரை எள்ளாக மதித்த வீரப்போர்கள்தான் தமிழன் புறவாழ்வு. அவன் வணங்கிய கடவுள் காதல்; அவன் உயர்த்திய செங்கோல் காதல். கண்ணகியின் காதல் வாழ்வு மடிந்ததைக் கண்டு கதறி உயிர்விட்டது தமிழன் செங்கோல். அவன் வீரத்திலும் உயர்ந்தது காதல்.

"ஒண்ணுதற் கோஒ உடைந்ததே ஞாட்பினுள்
நண்ணாரும் உட்குமென் பீடு"

என ஒரு வீரவேந்தன் தலைகுனிகிருன். போர்க்களத்தில் பகைவர் வாட்படையும் வளைக்கவொண்ணுத இவன் வீரத்தை, ஓர் இளம் பெண்ணின் அழகிய சிறுநெற்றி உடைத்துவிட்டதென்ருல் 'காதல்' தமிழன் உயிரை எப்படிப் பற்றிவிட்டது! அங்கு உடலை (புறத்தில் வீரம்) வென்றும்உயிர் (காதல்) உயர்கிறது. ஆம், உயிர் விளக்கத்திற்குத்தானே மனித வாழ்வு. அதுவே உண்மைக் காதல் விளக்கம். அவ்வொளிகண்ட தமிழன் உலகில் உயர்ந்தவன்!

கல்வி, உயிர், ஒழுக்கம், அறிவு, இவை எழுபிறப்பும் அழியாது தொடரும். காதலும் அப்படியே என்று கண்டான். இதனுல் என்றும் அழியாத அவன் வாழ்வில் அறிவொழுக்கம் காதலாகவே மலர்ந்து எப்படி உயிராக நிற்கிறது என அறிகிறேம். ஆம், ஒரு நாட்டின் உயிர் காதல்தானே!

காதலின்றி (கறபு) காவலனும அறமும இல்லை. இதனை உணர்த்துவது சிலப்பதிகாரம். கற்பாக மாறும்

காதலே நாட்டில் மழைவளம் பெருக்கும் என்பது திருக்குறள். பெய்யெனப் பெய்யும் மழை காதலால் கரைந்த பின்னர்தான்; இல்லாவிடில் கட்டி மேகமாகத்தான் இருக்கும். உண்மைதானே? நாடு, குடும்பங்களைக் கொண்ட பெரும் பிரிவு (பேருருவம்). குடும்பத்தின் மங்கலம் காதல் மனையாள். மங்கலமென்ப மனைமாட்சி! அம்மாட்சி காதல் அன்றோ? அக்காதல் சிதைந்தால் குடும்பஞ் சிதையும்.

குடும்பம் குழம்பினால் நாடு குழம்பும். நாட்டின் குழப்பம் நாகரிக, பண்புக் குழப்பம் அப்பொழுது அடிப்படை எங்கு? குடுமபத்தில் காதலில். அந்தக் காதலைத்தான் பாடுகிறான் அருந் தமிழன்; அன்புத் தமிழன். அவன் மனிதன்.

“பெண்ணிற் பெருந்தக்க யாவுள?” என்று கேட்கிறானே, உலக அறிஞர்களே விடை கூறுங்கள். வேறிருந்தால் பார்ப்போம்! ஷேக்ஸ்பியர் நாடகத்திற்கு நல்கிய புகழ்க் காதல்; பைரன், ஷெல்லி, ஹோமர் காதலை வழிபட்டனர். கவிஞன் காதல் அன்பன்; அடியவன். அவன் உள்ள இடம் அழியாக் காதல் கனிந்த நிலம்.

காதலனும் காதலியும் ஓருயிராம். யார் நம்புவர், பைத்தியந்தானே; இல்லை. இரண்டு உடல் ஏன்? இன்பத்தை நுகர இரண்டுடல் பெற்றதாம். இத்தகைய அருமையான அழகோவியத்தைக் கூறுவது அகப்பொருள். அது காதற் களஞ்சியம்; வாழ்வின் கலை; பண்பின் பரிசில்; நாகரிகத்தின் நற்சான்று; அறிவின் சுடர்.



# பிள்ளைத் தமிழன்

பிள்ளைத் தமிழ் பாடிக் குழந்தைகளைப் போற்றிய நாட்டான் தமிழன். உலகில் சிறந்த மொழிகளிற் குழந்தைகளைப் பற்றிப் பாடியிருக்கலாம்; ஆனால் குழந்தைகளைப் பற்றிப் பாடவே ஒரு வகை இலக்கியத்தை ஏற்படுத்தியது தமிழ் மொழியிற்றான் என நினைக்கிறேன்.

குழந்தையின்பமும், குழந்தை யுணர்வும் எவ்வுயிரிடத்தும் அமைந்ததோர் வேட்கையாயினும் அதனை மொழியில் நிலைக்கச் செய்ததிலேயே தமிழனின் கற்பனை சிறப்படைகிறது. உடலுக்கும் செவிக்கும் உயரின்பஞ்சொரியும் மக்கட் பேற்றையே பாடிய மாண்புலமை வள்ளுவர் "குழலினிது யாழினிதென்ப" "அமிழ்தினும் ஆற்றலினிதே" என்ற அடிகளில் குழந்தையின்பத்தின் முற்றிய நிலையை வெளிப்படச் செய்கிறார்.

நல்வாழ்வை வாழவேண்டியவன் மனிதன். அம்மனிதன் குழந்தைப் பருவத்தைக் கொண்டுதான் கருத்திலுயர்கிறான்; மதிப்பிடப்படுகிறான். அக்குழந்தை நிலை எவ்வாறிருக்க வேண்டுமென எண்ணிக்களித்தோர், எழுதி வைத்தோர் உலகில் பலர். அறிஞர் புலவர் யாவரும் குழந்தைகட்காகப் பாடினர்.

**குழந்தை இன்பம்:** *பிறைமதி* (Crescent Moon) என்ற நூலெழுதினார் தாகூர். தமிழகத்தும் கவிமணியவர்கள் குழந்தைக்காகவே 'மலரும் மாலையும்' அணி

வித்தாரெனலாம். குழந்தை யின்பம் என்ற தொகுதியை யளித்தார் கவிஞர் சுத்தானந்த பாரதி. தேசியக்கவி பாரதியின் பாப்பா பாட்டையும், ஆத்தி சூடியையும் அறிந் தோர் அனைவரும் அவரது குழந்தை யன்பை அறிவர். ஓவியரும் சிற்பியரும் குழந்தையுருவைத் தீட்டுவதில் ஓயா மகிழ்வெய்துகின்றனர்.

சமயங்களும் குழந்தையுணர்வைக் காக்கவோ மகிழவோ ஆண்டவனையே சேயாகக் காண்கின்றன; அடியார்தமைச் சேயுணர்விலேயே அரும் பேரறிவுற்றோ ராக எழுதி வைப்பவாயின. கண்ணன், முருகன், சம்பந்தர், நம்மாழ்வார் இவர்பற்றியறிந்தால் இவ்வுண்மை நன்கு புலனாகும்.

இளஞ் சேய்களை எண்ணிக் கற்பனையூற்றில் களித் துப் பாடிய தமிழ்ப்புலவர் எண்ணிலர். குமர குருபரர் போன்றோர் குறிக்கத்தக்கவர். மீனாட்சியம்மை, முத்துக் குமாரசாமி பிள்ளைத் தமிழ்கள் மேம்பாடுடையன. ஆற்றல் நிறைந்த ஆண்டவனையும், அறிவு நிறைந்த அடியாரையும் புலமை நிறைந்த பெரியாரையும், இரக்கம் நிறைந்த கொடையாளரையும் ஏத்திப் புகழ்ந்து பிள்ளைத்தமிழ் பாடினர் புலவர். நூல் பாடப் பெருந்தன்மைகளும், ஆற் றல்களும் இடனாக வேண்டும். அவை குழந்தைகளிடம் இருக்கமாட்டா. எனவே அவற்றை அவையுள்ளோரிட மிருந்தெடுத்து அவர் பேரிலேயே பாடிக் களித்தனர் புலவர். அவரிடம் கற்பனைக்கும் கலைக்கும் ஊற்றான குழந்தைத்தன்மை (ஆடல்) கள் இராவாதலால் அவர் களைக் குழந்தையாகவே கற்பனைசெய்து பாடினர் கலை யுணர்ந்தோர்.

**மனவளர்ச்சி :** இவற்றால் குழந்தைகள் பிற்காலத்தே விளங்கவேண்டிய நிலைபற்றிக் கனாக்கண்டனர் தமிழறிஞர். பெரியவரான பின்னும் அமைய வேண்டிய அழகுத்தன்மை

யையும் கலையுள்ளத்தையும் உணர்த்தினர் கவிஞர். பிள்ளைத் தமிழ் மனித வாழ்வின் வளர்ச்சியை உட்பொருளாகக் கொண்டெழுதப்பட்டவை. குழந்தையின் மனவளர்ச்சியை மிக நுட்பமாக ஆராய்ந்தெழுதப்பட்டனவாம்.

அகப்புறப் (பண்டைய) பாடல்கள் பிற்காலப் பாடல்கட்கெல்லாம் வழியாகவும் அடிப்படையாகவும் அமைந்தனபோல; பிள்ளைத்தமிழை வகுப்பதற்குரிய அடிப் படையும் பண்டைப் பாடல்களில் காணப்படுகின்றன. புறநானூற்றில் குழந்தையின் பல்வகை மன நிலைகளையும் ஆற்றல்களையும காண்கிறோம். பட்டினப்பாலை, சிறுபா ணாற்றுப்படையில் குழந்தையின் ஆற்றல், அறிவு விளக் கப்படுகின்றன. முருகாற்றுப் படையில் குழந்தையின் அழகு விளக்கப்படுகின்றது.

குழந்தையின் சிறப்பான நால்வகை மனோ நிலைகளை யும் புறநானூறு குறிப்பிடுகின்றது. 'படைப்புப் பல படைத்து' என்ற புறப்பாட்டில் 'குறுகுறு நடந்து இட்டுந் தொட்டும்' என்ற தொடர்கள் செங்கீரை, சப்பாணி, வருகை முதலிய பிரிவுகட்குக் குறிப்புக் காட்டுகின்றன.

தலையாலங்கானம் வென்ற பாண்டியனின் இளமை யைப் பாடும் 'குறுந்தொடி பிடித்தகை சாபம்பற்றி' என்ற பாடல் சிற்றில் சிறுபறை சிறுதேர் என்ற பிரிவுகட்கு நிலைக்களமாகின்றது.

**தமிழர் திறன்:** மற்றொரு பாடல் பொருட்டெழினியை 'மதி'க்கு உவமையாகக் கூறுகின்றது. இதனை அம்புலிப் பருவத்திற்கு ஆதாரவெனக்கொள்ளலாம். மற்றொரு பாட லில், அரசனொருவன் பகையரசன் குழந்தைகளைச் சீறு கிறான். அப்போது அங்கு வந்த புலவரொருவர் குழந்தை களின் நன்மை, தீமை, பகை, நட்புணராக் கபடமற்ற தன்மையைக் காட்டுகிறார். இதனைக் கூறும் பாடல் காப்பு

செங்கீரை தால் முதலாம் பருவங்கட்குக் காரணமாகலாம். இங்ஙனம் பழைய நூல்களிலுள்ள குறிப்புக்களையும் மன நிலைகளையும் அறிந்தே வகுத்துப் பருவங்களைத் தொகுத்தது பிற்காலப் பிள்ளைத் தமிழர் திறனும்.

மனித வாழ்வின் குறிக்கோளையும், மனித மன நிலையின் வளர்ச்சியையும் உணர்த்துவதே பிள்ளைத் தமிழாம். முதலில் காப்புப் பருவத்தில் தாயாலும் பெரியோராலும் கடவுளரை வேண்டுதற்கிடனுய குழந்தை கடைசியில் சிறு தேர்ப்பருவத்தில் தன்னைத் தானே காத்துக்கொள்வதுடன் பிறரையும் காப்பதற்காகச் சிறு தேருருட்டுகிறுன். இளமையில் ஆசிரியரிடம் அறிவைப் பெறும் மனிதன் பிற்காலத்தில் மற்றோர்க்கு அறிவை யளிக்கிறுன். முதலில் தாயினுல் வளர்க்கப்படும் கற்பனை, சிறு தேர்ப்பருவத்தில் பிள்ளையாலேயே சொந்தமாக வளர்த்துக்கொள்ளப்படுகின்றது. இதுவே வாழ்வின் குறிக்கோள். முதலிற் பிறரால் வளரும் ஆற்றலும் அறிவும் போகத் தன் பொறுப்பிலேயே வந்து விடுகின்றன; பிறருக்கும் உதவியாகின்றன.

**பத்துப்பருவம்:** காப்பு, செங்கீரை, தால், சப்பாணி முத்தம், வருகை, அம்புலி, சிற்றில், சிறுபறை, சிறுதேர் இவையே பிள்ளைத் தமிழக்குரிய பருவங்கள்; இவை ஆண்பாற்குரியன. இவற்றுள் கடைசி மூன்றை நீக்கிவிட்டு கழங்கு, அம்மானை, ஊசல் இவற்றைச் சேர்த்தால் பெண்பாற்குரியனவாம். இப்பத்துப் பருவங்களையும் மனநிலையின் நான்கு பருவங்களாகப் பிரிக்கலாம். உலக மனநூலார் கருத்துக்களுடன் ஒத்திட்டுப் பார்த்தால் தமிழ்ப் புலவர்தம் மன நூலறிவின் உயர்வு புலப்படும.

காப்பு, செங்கீரை, தால் இப்பருவங்களில் குழந்தையின் கற்பனையைத் தாய் முதன் முதலில் எழுப்புகிறுள்; குழந்தை அறியாமலே கற்பனை வளருகின்றது.

சப்பாணி, முத்தம், வருகை என மூன்று பருவங்களி லும் குழந்தை யுணர்ந்தே அதன் கற்பனை வளருகின்றது. தாயே தூண்டுவது போகத் தாயைக் குழந்தை தூண்டித் தன் கற்பனையை வளர்த்துக்கொளகிறது.

அம்புலிப் பருவத்தில் குழந்தையின் கற்பனை அழகு பெற்றுக் கலையாக மாறுகின்றது; அதாவது தானே படைத்துக் கொள்ளுந் திறமபெறுகின்றது. இப்பருவத் தில் குழந்தையும் தாயும் ஒரே அளவில் சமமாகக் கற்பனை யை வளர்க்கின்றனர்.

**கற்பனை :** சிற்றில் பருவத்தில் குழந்தையின் கற்பனை படைப்புத் திறன் பெறுகினறது. வீடு கட்டுகின்றது; வருங்காலத்தே தான் வீடுகட்டி வாழ்வதை நினைவூட்டிக் கொள்கின்றது. தன் வீட்டையும் பிறர் வீட்டையும் காக்க வேண்டிய பொறுப்புணர்ச்சியை அறிந்துகொள்கின்றது.

இவ்வுணர்ச்சியின் விரிவே சிறுபறை, சிறுதேர்ப் பருவமெனலாம். சிறுபறையில் கற்பனை இன்பப்பரவல், இரக்கமாக மாறி அதனை யாவர்க்கு முணர்த்தச் சிறுபறை யறைகின்றது. பின்னர் சிறுதேருருட்டிப போரிட்டுப் பிற ரின்பத்தையும் தன்னின்பத்தையும காப்பாற்றிக்கொள்கி றது. எதிரியிடமிருந்து காத்துக்கொள்கின்றது. பெண்கட் குரிய கடைமூன்று பருவமுங்கூட பிறர்க்கின்பந்தருவ னவே. இங்ஙனம் மனிதவுணர்வும கற்பனையும படிப்படியே வளர்ந்து செல்வதை அழகுபட உரைபபதே பிள்ளைத் தமிழ். மனிதன் தன் வாழவில் பிற்பகுதியில் பிறர்க்காக நினைப்பதும் உழைப்பதும் செய்வதே பயனென்பதை உணர்த்துவதே பிள்ளைத் தமிழ்.

பின்னும், இந்நூல்களைப் புலவர் மிக்க கற்பனையுட னும் உவமைகளுடனும், உண்மைகளுடனும் மனவியல்பு களுட்னும் இணைத்து இயற்றியுள்ளமையை விரிவாகப் படித்துணர்தல் ஓர் இலக்கியவின்பமாம்; குழந்தை யின்பத்தை இந்நூல் என்றும் தந்து நிலையாக்குகின்றது.

# வளமும் உளமும்

" முன்னைத்தஞ் சிற்றில் முழங்கு கடலோத மூழ்கிப் போக
அன்னைக் குரைப்பன் அறிவாய் கடலேயென் றழுங்கிப் பேரும்
தன்மை மடவார் தளர்ந்துகுத்த வெண்முத்தம் தயங்கு கானல்
புன்னை அரும்பேய்ப்பப் போவாரைப் பேதுறுக்கும் புகாரே எம்மூர் ",

இது தண்டியலங்காரத்தில் காணப்படுவதோர் உதாரணப் பாடலாகும். செய்யுள் நடைக்குரிய பத்தழகில் "இன்பத்திற்கு" எடுத்துக்காட்டாய் நிறுத்தப்பட்டுள்ளது. சொல்லின்பமும் பொருளின்பமும் ஒருங்கமைந்த பாடலாக இதனை மதிக்கின்றனர். மோனை பாடலுக்கழகும் இனிமையும் தரும். இப்பாடலில் அமைந்த வழிமோனை அதாவது அடிதோறும் ஒரு சொல்விட்ட மற்ற சொல்லில் அமைந்த மோனை நடைக்கு இனிமையைப் பொழிகின்றது.

சிலப்பதிகாரத்தில் கானல்வரி படித்தோர்க்கு இப் பாடல் அங்கு காணும் பாடலோ என்ற ஐயம் ஏற்படும். புகாரைப்போற்றிய இதே போன்ற மதிப்புள்ள பாடல்கள் கானல்வரியில் பலவுள்ளன. நடையழகிலோ பொருட்சுவையிலோ எள்ளளவும் பின்வாங்காத பாடல்.

வளவன் படைத்த புகார் நகரத்தின் பெருமையைக் கூறுவது இப்பாடல். புகார் நகரக் கடற்கரையின் இயற்கை வளத்தையும், அங்குள்ள குழந்தைகளின் செயற்கை கலவாத உள்ளப்பண்பினையும் ஆசிரியர் இப்பாடலில் தோற்ற வைக்கிறார்.

கடலோரத்தில் இளஞ்சிறுர் மணல் வீடுகட்டி ஆடிக் கொண்டுள்ளனர். அலைகள் வந்துமோதி சிறுவர்தம் வீடுகளை அழித்துச் சென்றன. யாதுமறியாக் குழந்தைகள் கடலினை வெகுண்டு அழுதுகொண்டே தம் அம்மாவிடம் முறையிடப் போவதாகக் கடலை அச்சுறுத்தப் பார்க்கின்றனர். அவர்கள் அணிந்த முத்துமாலைகளைக் கழற்றி கடலை எறிகின்றனர். அச்செயலிற் சிந்திய முத்துக்களின் அருகே கடற்கரைப் புன்னையரும்புகள் சிதறிக் கிடக்கின்றன. கடலோரத்தில் நடந்து செல்வோர், முததுக்கும் புன்னையரும்புக்கும் வேற்றுமை தெரியாமல் முத்தையெல்லாம் புன்னையரும்பாய் மயங்கிச் செல்கின்றனர். இத்தகைய இயல்பினை யுடையது புகார் என ஆசிரியர் கூறுகிருர்.

இதுவே பாடலில் அமைந்த கருத்து. குழந்தைகளின் ஆடலைக் காட்டுகிருர். குழலின் இனிய அவர்தம் மழலையைக் கேட்க வைக்கிருர். முழங்கு கடலொலியை பக்கத்தமைக்கிருர். இயற்கையின் இரக்கமற்ற அழிப்புத் தன்மையை அணைத்துக் காட்டுகிருர். சோணுட்டின் செல்வச் சிறப்பினை (முத்து) உணர்த்துகிருர். ஐவகை நிலத்தில் நெய்தல் வளத்தை நினைவூட்டுகிருர். செய்யுட்கெடுத்துக் கொண்ட பொருள் யாவும் இனிமையுடையன. இயற்கை பற்றியன. அழகைப் (முத்து) பற்றியன. இசைக்கலையில் வெளிப்படும் புலம்பலும் இனிமை பயப்பதுபோல செய்யுளிற்பட்ட அலையின் அழிப்புத் தன்மையும் மகிழ்ச்சியையே விளைக்கின்றது. பாடலைப் படித்ததும் புகாரும், அந்நகரச் சிறப்பும், வளவனது வலிமையும், சோணுட்டு வாணிபமும், தமிழின் உறவும் தொடர்ந்து நினைவிற்படுகின்றன. எனவே பாடலில் அமைந்த பொருள் இனிமைத்தே என்பதில் ஐயமில்லை.

சொல்லழகும், நடையோட்டமும் மிகச் சிறப்புடையனவே. தமிழ் படைத்த மிகச் சிறந்த பாடல்களுள் இது

வும் ஒன்றெனலாம். பிறமொழியின், மேலான பாடல் களுடன் ஒப்பவைத்து நோக்கற்குரித்தான தாம். "முன்னை" எனத் தொடங்கினல் நடையொழுக்கம் "எம்மூர்" என்ற கடைசிச் சொல்லிலேயே நிற்கிறது. கடிய ஒலி பெற்ற சொற்களில்லாத பாடல். வல்லெழுத்து யாவும் மென்மை யடைந் தியங்குகின்றன. அருவிபோன்ற தெளிவும் நெளிவு முடைய அழகிய நெறிப்பட்ட பாடல். "இயற்கையே இவனைப் புலவனுக்கியது" என மில்டனைப்பற்றி ஆங்கிலே யர் கூறுவர். அதேபோன்று இப்பாடலைப் பாடியபோது புலவன் இயற்கையோடு இணைந்து நின்றிருக்கிறான்.

பாடலில் இரங்கற்சுவையே எங்கும் மின்னிக்கொண் டிருப்பது ஒரு தனியழகு. சிறு வீட்டினை அலைகள் அடித் துச் சென்றமையும், குழந்தைகள் அதனுல் அழுது கலங்குகின்றமையும், தம் முத்துமாலைகளை அறுத்தெறிந் திரங்குதலும், வழிப்போக்கர் முத்தைப் புன்னையரும் பெனக்கொண்டு மயங்குதலும் ஆகிய நான்கு நிகழ்ச்சிகள் நான்கடிகளில் உள்ளன. இவை யாவும் இரக்கத்தைப் பெருக்கத்தக்க காட்சிகள். இரக்க உணர்ச்சியைக் கிளப் பும் பாடல்களே செய்யுளில் மேம்தரத்தவென மதிக்கப் படுகின்றன. பாட்டும் பொருளும் இரக்கமும் ஒரே பொழு தில் வெளிப்படுகின்றன. பல பாடல்களில்போல பொருளை யும், சுவையையும் உணர்வதற்குத் தனி முயற்சியோ நேரமோ தேவையில்லாதாய்விட்டது.

**அறியாமை யின்பம் :** அறியாமை நிகழ்ச்சியாற்றன் அறிவு தோன்றும். அறிஞர்க்கு அறியாமையைக் காண்ப திற்றன் இன்பம். "அறியாமை கண்டற்றல்" என வள்ளு வரும் கூறினர். இப்பாடலில் இயற்கை, மனிதனின் (குழந் தையின்) வருத்தத்தை யறியவில்லை ; சிறுவீட்டைக் கலைத் தது. குழந்தை (மனிதன்) இயற்கையின் ஆற்றலை அறிய வில்லை ; இயற்கையான அலையின் செயலை வீணே கடிந்து

கொள்கிறது. மக்கள், முத்துக்கும் அரும்புக்கு முள்ள வேறுபாட்டையறியவில்லை. இம்மூன்று அறியாமைகட்கும் இடமாயுள்ளது புகார். இதுவும் சிறப்பே. அறியாமையை விளங்கச்செய்யும்போதுதான் அறிவும் விளங்கும். எனவே அறியாமை விளங்குதற்காம் காரணங்களைக் கொண்டன யாவும் சிறந்தவையே. உடல் உயிர், உலகைப்படைத்த இயற்கை (இறைவன்) அறியாமையைத் தோன்றச் செய்த துடன் அமைந்திருந்தால் புகாருக்குப் பெருமையில்லை. அங்கு அறிவையும் விளங்கச் செய்யவேண்டும். அதற் கெனவே இப்பாடலைப் பாடிய, புலவனையும் கண்டது, அறிவு மேம்பட்ட புலவன் இவ்வறியாமைக் காட்சிகளைக் கண்டு வியக்கிறான். அங்கு தோன்றும் இன்பமே அறி வின்பம்!

**இயற்கையும் மனிதனும்:** கடலுடன் குழந்தை விளை யாடுகிறது; இயற்கையைக் குழந்தை கடிந்துகொளகிறது மனிதனும் இயற்கையோடு ஆடுகிறான்; அதனை அச் சுறுத்துகிறான். இயற்கை, குழந்தைக்கு அருமையான வீடாயிற்றேயென இரங்குவது மில்லை; அஞ்சுவது மில்லை. அதன் செயலை நடத்திக்கொண்டுதானிருக்கிறது. முத்து மாலையை எறிந்து குழந்தை கடலை விரட்டிவிட்டதாக, வென்று விட்டதாக ஆறுதலடைகின்றது கடலலையில் மணல் வீட்டிற்கும், இயற்கையில் மனிதன கட்டியாடும் உலகிற்கும் வேற்றுமையில்லை. இயற்கை யாரையும் அஞ்சாமல் நகரை, வயலை, உயிரை யழிக்கின்றது. மனிதன் விஞ்ஞானத்தைக் காட்டி இயற் கையை அச்சுறுத்துகிறான். ஒன்றும நடந்தபாடில்லை. இயற்கையின் ஆற்றலும் அலுவலும் அடங்கியபாடில்லை. பூமியதிர்ச்சியை முன்னறியக் கற்றானனறி, மனிதன் அதிர்ச்சி பரவாமற்றடுக்கக் கற்றானில்லை. புயலை எதிர்க்கும் வீடு கட்டினானன்றி புயலையே தோனறாமல் அடக்கிற

னில்லை. முத்துமாலையை எறிந்து மன ஆறுதலடையும் குழந்தையைவிட மனிதன் இன்னும் மேம்பட்டானில்லை!

**கலையின்பம்:** மாலையிற் பிரிந்த முத்தும் கிடக்கின்றது; புன்னையரும்பும் பக்கத்தே மிளிர்கின்றது. முத்து மறைந்து அரும்பே காண்பார் உள்ளத்தே படுகின்றது. செயற்கையான மாலையிலிருந்த முத்தை வென்றது இயற்கையான அரும்பு. செயற்கையை இயற்கை வெல்லச் செய்வது புலமைத் திறன்; கலைத்திறன். சிறந்த இசை வாணனின் பாடலின்பத்தை இயற்கைப் புள்ளினத்தின் ஒலியிற் காண்பதே கவிஞனுள்ளம். திறம்பட்ட நாட்டிய மாதின் ஆடற்றிறனை இயற்கை மயிலின் ஆடலிற் காண்பதே கலைத்திறன். அருவி ஒலியில் செயற்கையான எவ்வித முரசொலியினும் மேலான ஒலியைக் கேட்கிறான் கவிஞன். அதே திறனைத்தான் இங்கு ஆசிரியர் புன்னை யரும்பை வெல்லச்செய்து முத்தைத் தோற்கடித்து வெளிப்படுத்துகிறார்; முத்துக்கள் புன்னை யரும்பாக மயங்க வைக்கின்றன.

**வளமும் உளமும்:** முத்தும் அதனைத் தோற்கடித்த புன்னை யரும்பும் சோணாட்டின், புகாரின் வளத்தைக் குறிப்பன. குழந்தைகளும் உயரிய முத்தணிந்தாடினரென்றால் அங்கு வாழ்வார் செல்வச் சிறப்பே புலனாகின்றது. அத்தகைய வளமிருந்ததாற்றான் குழந்தைகளின இயற்கையுள்ளம் செழித்தோங்கியுள்ளது.

ஒரு ஆங்கிலப் புலவன் "நாட்டிலுள்ள இளைஞர் நன்றாகச் சிரிப்பவர்கள்" எனக் கூறி அதனைப் பெருமையாக உரைக்கிறான். அதுபோலக் குழந்தைகள் அறியாமைத் தன்மை அழியாமல் அலைகளைக் கடிந்துகொள்கின்றன. குழந்தைகள் அறிவுடையர்ாகவோ, பெரியோர் அறியாமையுடையராகவோ இருக்கும் நாடு இயற்கை நெறி பிறழ்ந்த நாடாம். அவரவர் தன்மை மேம்பட்டு விளங்கும் நாடே

நன்றாடாம். 'சிற்றில்' எனப்பாடல் கூறலால் அலை அதனை எளிதாக அழித்துவிட்டது. குழந்தையின் அச்சத்திற்கும் காரணந் தோன்ற 'முழங்கு கடலோதம்' என்கிருர். இரண்டு குழந்தைகள் விளையாடுகையில் சண்டையிட்டுக்கொள்கின்றன. எதிரிக் குழந்தை அடித்ததாயினும் அதன் தாய் பரிந்து வந்து இக் குழந்தையை அதட்டுகிருள். குழந்தை ஒன்றும செய்யமுடியாமல் அம்மாவிடம் சொல்லப்போவதாய்க் கூறுகிறது. இப்பாடலில் அலை குழந்தை. அது மணல் வீட்டை அழித்துவிட்டது. கடலிற் பிறந்த குழந்தை அலையல்லவா? கடல், குழந்தைக்குப் பரிந்து முழங்குகிறது. கடல் உயிரற்றதென அறியாமலும், பழக்கப்படி இங்கும், அன்னையிடம் கூறுவதாக அச்சுறுத்தப் பார்க்கின்றது மனிதக் குழந்தை. இம்மடமை தோன்ற 'மடவார்' என்கிருர் ஆசிரியர் வீடுகட்டி யாடுவோர் பெரிதும் பெண் குழந்தைகள் ஆனமையால்.

இத்தகைய உளப்பான்மை, தனி மனித வாழ்வில் எளிமையிருப்பினும், நாட்டில் வளமிருந்தாற்ருன் இயற்கையாக வளரும். நாட்டின் வளத்திற்கும் உளத்திற்கும் உறவுண்டு. ஒன்றில் ஒன்று வளர்வது. வளமற்ற நாட்டில் கலை செழித்தலில்லை. இப்புலவர் வாழ்வில் மிகுந்த வளத்தினற்ருன் இத்தகைய கற்பனையோங்கிய பாடல் தோன்றலாயிற்று. மீண்டும் இத்தகைய பாடல்கள் எண்ணற்றன பெருகத்தக்க பெருவளன் தமிழ் நாட்டில் மிகுவதாக!



# செய்யுட்கு உயிர்

"பாடல் பயிலும் பணிமொழி தன்பணைத்தோள்
கூடல் அவாவாற் குறிப்புணர்த்தும்—ஆடவற்கு
மென்றீந் தொடையாழின் மெல்லவே தைவந்தாள்
இன்றீங் குறிஞ்சி இசை."

இவ்வெண்பா தண்டியலங்கார உதாரணப் பாடலாகும். நுட்பவணிக்கு எடுத்துக் காட்டப்பட்டுள்ளது. அழகிய வெண்பா.

வெண்பாவிற் புகழேந்தி பெயர்பெற்றவர். எனினும் புறப்பொருள் வெண்பாக்களும் தண்டியலங்கார உதாரண வெண்பாக்களும் நளவெண்பாக்களுடன் ஒப்ப நோக்கற் குரியனவேயாம். தண்டியலங்கார வெண்பாக்களில் இயற்கையானதோர் இனிமை தோன்றும். புறப்பொருள் வெண்பாக்களில் பாவமைப்பிற்குரிய பெருமிதமும், நல்ல சொற்களும் காணப்படும்.

தண்டியலங்கார வெண்பாக்கள் யாவும் அழகிய ஒழுக்க (நடையோட்ட) முடையன. தடையின்றிப் பாடல் நடக்கும் இனிமையை ஊறச்செய்யும் சொற்கள் அங்கு மிகுந்திருக்கும். இப்பாடலில் வல்லோசைச் சொற்கள் மிகக் குறைவு. அவையும் பக்கத்துள்ள எழுத்துக்களால் மென்மையடைந்திருக்கின்றன. 'தீந்தொடையாழின்' என்றவிடத்தே இயற்கையாகவே 'தொடை' மென்மையடைந்துவிடுகின்றது.

நல்ல தமிழ்ச் சொற்களைக் கலந்தமையாற்றான் பாடலுக்கு இவ்வளவு ஏற்றமுண்டாயிற்று. பாடல், பயிலும், கூடல், அவா, குறிப்பு, ஆடவர், தைவந்தாள், இசை போன்ற அருமையான சொற்களையெல்லாம் இன்று சாகித்தியம், அப்பியாசம், போகம், ஆசை, சைகை, புருஷர், ஸ்பரிசி, இராகம் எனப் பிற சொற்களால் வழங்குவதனாற்றான் மொழியறிவோர்க்குத் தெளிவேற்படுவதில்லை; தெளிவின்மையால் அதற்குரிய எளிமையோ இனிமையோ உண்டாவதில்லை.

இனிய பாடலாயின் அதனில் அமைந்த கருத்திற் சுவையிருக்க வேண்டும். இப்பாடலில் இசை, இளம் பெண், அவளது மொழி, புணர்ச்சி, அவட்குரிய இளைஞன், காதல்வேட்கை, குறிப்புணர்ச்சி, அமைதியுடைய யாழ், மெல்லத் தடவுதல் (நெருடுதல்), குறிஞ்சிப்பண் இவையே பொருளாக அமைந்தன. இனிமைக்குக் கேட்கவேண்டுமா?

தாமரைக் கண்ணன் உலகினும் காணமுடியாத காதலின்பமே பாடலின் பொருளாயுள்ளது! பாடலைப் படித்ததும் தமிழுணர்ச்சி ஊற்றெடுத்தோடுகின்றது. தமிழிசையொலி இயம்புவதைக் கேட்கிறோம். தமிழர்தம் யாழும், குறிஞ்சிப் பண்ணும் நம் நினைவிற் கொண்டுவரப்படுகின்றன. வீணையும், இன்றைய பெயர் திரிந்த இராகங்களும் நினைவில் மறைகின்றன. தண்டியாசிரியர் காலம்வரை தமிழிசைப் பயிற்சியும், பண்வகைகளும் வழக்கில் இருந்தனவாக அறிகிறோம். தமிழர்க்குத் தனி இசை உண்டு என்பதோர் உறுதியை இப்பாடல் ஊட்டுகின்றது.

இப்பாடலில் "ஒரு இளம் பெண் யாழ் பயின்று கொண்டிருக்கிறாள். அவள் காதலன் மெல்லவந்து மறைவாக நின்று தலைவியைக் குறிப்புணர்த்திப் புணர்ச்சி விழைந்தழைக்கிறான். தலைவி தனது யாழில் குறிஞ்சிப் பண்ணை எழுப்புகிறாள் என்பதே பொருள்."

அன்றைய பெண்களின் கலைத்திறனை இதன்வழி உணர்கிறோம். ச, ரி, க, ம, ப, த, நி, என்பதோடு, தெரியாத பாடல்களை யெல்லாம் நெட்டுருப் போடுவதில்லை யெனவும் உணர்கிறோம். குறிஞ்சிப்பண்ணை இனிமையாக எழுப்பு கிறாள் தலைவி. தமிழன் கண்ட யாழை அழகாக மீட்ட அறிந்திருக்கிறாள். பரிபாடலில், இயற்கையாகக் காட்டில் திரிந்த தமிழன யாழைக் கண்ட முறையை அறிகிறோம். பண்ணோடு பாடற்கிளையை உணர்ந்திருக்க வேண்டும் தலைவி. பண்ணையும் பொருளையும் உணர்ந்து, புணர்ச்சியை விழைந்ததும் அதற்குரிய குறிஞ்சிப் பண்ணை மீட்டிக் காட்டுகிறாள். இன்று போலக் கலையை, இசையைத் தனிமையாக்கிவிடவில்லை அன்றையத் தமிழன். வாழும் நிலத்தை நால்வகைப்படுத்தினான். வாழ்வில் விளையும் இன்பத்தை ஐந்து கூறாக்கி அவற்றிற் களித்தான. குறிஞ்சி நிலத்திற் குரித்தாகப் 'புணர்ச்சி'யை வகுத்தான் தன் பேரறிவு தோன்ற. அவற்றிற்கேற்பக் கலையையும், மொழியையும் இணைத்துக்கொண்டான். இசைக்குரிய பண் களை யெல்லாம் நிலங்கட்கேற்றவாறு பிரித்துப் பெயரிட் டுக்கொண்டான். இங்கு 'குறிஞ்சிப்பண்' அந்த நுட்பத் தையே காட்டுகின்றது.

இப்பாடலில் முத்தமிழ் விரவியுள்ளமை உய்த் துணரப்படும். பாடற்குரிய சொற்களும, நடையும் இயல். வெண்பா இசை. தலைவியும் இசை நினைவூட்டுகிறாள். தலைவி யாழ் வாசித்தலும் தலைவன் குறிப்புணர்தலும் நாடகம். இந்நிகழ்ச்சியை அப்படியே அழகிய ஓவியமாக்கி விடலாம்; சிற்பமாக்கிவிடலாம். பாடலில் கலை நயம் நன்கு விளங்குகின்றதல்லவா?

செய்யுட்கு (கர்வியத்திற்கு) உயிர் எதனில் உள்ளது? என்ற கேள்வி நீண்டநாளாக இருந்துவருகின்றது. செய் யுள்நடையில் எனச் சிலரும், பொருளில் எனச் சிலரும்;

அணியில் எனப் பலரும் கருதி வலியுறுத்துவாராயினர். கடைசியிற் செய்யுட் சொல்லிலும், நடையிலும், பொருளி லும் அணியிலும் நேரே காணாத, ஆனால், உய்த்துணர்ந் தறியப்படும் 'குறிப்புப் பொருளே' செய்யுட்கு உயிரென ஒருவாறு முடிவு காண்பாராயினர். இதனைத்தான் வட மொழியில் தொனியெனவும், தமிழில் உள்ளுறையெனவும் கூறினர். இப்பாடலிலும் அத்தகைய குறிப்பொன்று அமைந்துள்ளதாக அறியும்போதுதான் இதனை ஒரு உயி ருள்ள பாடலாக மதிக்கவேண்டியுள்ளது.

தலைவன் மறைவாக நின்று தலைவியிடம் கூடல் வேட்கையைப் புலப்படுத்துகிறான். ஆனால் தலைவி அதற் கிசைந்தாளா இல்லையா வென்பது தெரியவில்லை. எனினும் உணர்த்தப்படுகின்றது. தலைவி மெல்ல குறிஞ்சிப்பண்ணை மீட்டுகிறாள். தலைவனுக்கும் விடை கிடைத்துவிடுகின்றது.

புணர்ச்சிக் குரியது குறிஞ்சிப் பண்ணாதலால், தலைவி புணர்ச்சிக்குடன்பட்டுவிட்டாளெனத் தலைவன் மகிழ் கிறான். இந்நுட்பத்தை அறிந்த நாமும் இப் பாடலில் மகிழ்கிறோம்.

குறிஞ்சிப் பண்ணையிசைத்தலைத் தவிர வேறு செயல் உண்டாகவில்லை. ஆனால் அதன் பொருள் வேறாகக் குறிக் கப்படுகின்றது; இதுவே செய்யுளின் குறிப்பு; உயிர்.

வெறும் யாழ் வாசித்தாள் என்றாலும் சுவையில்லை; அன்றி வருவதாக வேறு குறியீடு செய்திருந்தாலும் நமக்கு அதனால் இன்பமில்லை. ஆனால் செய்ததோர் தொழிலில் வேறோர் பொருளைப் புலப்பட வைத்ததே சுவை.

அதனைச் செய்யுளாசிரியர் இன்னும் அழகுபடக் காட்டுகிறார். தலைவி தலைவனைக் காணுமுன் குறிஞ்சிப் பண்ணையே பாடிக்கொண்டிருந்திருக்கமாட்டாள்; இல்லை

யெனவும் தெரிகிறது. ஆனால் தலைவன் குறிப்பையறிந்ததும் குறிஞ்சிப்பண்ணைத் தொடங்கும்போது திடீரென விரைவோ, படபடப்போ தோன்றினால் அருகிலுள்ள தாய் முதலியோர் கவனிக்கக்கூடுமென்பதற்காக "மெல்லவே", மாற்றத்தைப் பிறர் அறியாதவாறு எப்போதும் இயக்கும் மரபிலேயே தைவந்தாள் என்கிறார் ஆசிரியர். "அவா" என்ற சொல்லையிட்டு, தலைவனின் மிகுதியான வேட்கையையும் தலைவியின் விரைந்த உடன்பாட்டிற்காம் காரணத்தையும் புலப்படுத்துகிறார். ஆறு கடலோடு கலக்குமிடமும் கூடல். தலைவி தலைவனோடு கலக்குஞ் செயலும் 'கூடல்' என்ற சொல்லால் குறிக்கப்பட்டிருப்பது ஆற்றையும் கடலையும் தலைவி தலைவனாக உருவகப்படுத்தற்கேற்ற பொருத்தமுடைத்தாம்.

இங்ஙனம், தண்டியாசிரியரின் இப்பாடல் தமிழில் ஒரு சிறந்த பாடல். உலகின் நல்ல பாடல்களுள் வைத்து ஒப்பிடற் குரியதுமாம் உயிருள்ள பாடல்.



# வெண்ணெயும் சுண்ணும்பும்

ஏன் அங்கு இந்த ஆரவாரம்? அதோ, துறைமுகத்தில் ஏதோ இறக்குமதியாகும் பொருள்களைக் கண்டுதான் வெள்ளையர் கும்மாளமடித்துக் கூச்சலிடுகின்றனர்; ஏளனஞ்செய்து சிரிக்கின்றனர்.

கழுத்தில் பட்டை கட்டிய நாய்களா அவைகள்? இல்லையே? கழுத்தில் விலங்கு பூட்டிய நீக்ரோ அடிமைகள் இறங்குகிறார்கள். ஆமாம், நாயும் ஆங்கிலேயன் பக்கத்தில் இருந்து உண்கின்றது. ஆனால், அறிவுடைய இந்த மனிதனுக்கு அந்நிலையுமில்லையே! மனிதனை மனிதன் விந்தையுடைய பொருளாகக் கண்டு நகைப்பது?

ஆங்கில வியாபாரிகள் ஆப்பிரிக்காவிலிருந்து அவர்களை வாங்கிக் கப்பலேற்றி வருகிறார்கள். கீழே இறக்கும் வரையில் மல்லாந்து படுத்துக்கொண்டேதான் வரவேண்டும். வியாபாரச் சரக்குகளுக்கூட பாதுகாப்புண்டு! கொஞ்சம் தவறினால் உளுத்துப் புழுத்துவிடும்; அழுகிவிடுமல்லவா? ஆனால் இம்மனிதன் கருப்பனாய்ப் பிறந்தால் என்ன பாதுகாப்புண்டு? உழைத்து இளைத்துத்தானே இறப்பான்? அதற்கிடையே இறந்தால், அதனைத் தடுப்பது தன் கையிலில்லை. அதனாலா இந்தப் பஞ்சத்திலும் ஆடுமாடுகளுக்குத் தானியம் ஒதுக்குகிறார்கள் ஆங்கிலேயர்! ஆனால் இந்த அடிமைகள் அவற்றினும் இழிவாக நடத்தப்படுகிறார்களே!

எளிய நீக்ரோக்களை அவர்கள் எப்படி எண்ணுகிறார்களென, ஆங்கிலப் புலவன் வில்லியம் கௌப்பர் (William Cowper 1731–1800) வரைகிறான் பாருங்கள்.

" ஆப்பிரிக்க சரக்கு கொண்ட அழகுடைக்கரிய கப்பல்"

" A pretty black cargo of African ware " என்கிறான்.

கப்பல் சரக்கைவிட அதிக மதிப்புத்தர அவர்களின் மனித உள்ளம் இடந்தரவில்லை. அந்த மனதில் எவ்வளவு மகிழ்ச்சி! நீக்ரோக்களைப் பிடித்து வந்தாய் விட்டது. இனி தம் நாட்டில் எத்தனை கரம்பு காடுகளெல்லாம் நாடாகப்போகின்றன! கழுதையும், புலியும் வாழ்ந்த இடங்கள் பணக்காரர் உறங்கும் பங்களாவாகும். மலையும் மேடும் தேயிலை, காபி, கருப்பங்காடாகும். மண்ணில் பொன் விளைவதை நேரில் காணப்போகிறார்கள். இத்தனையும் அந்த அடிமை நீக்ரோக்களால் என்றால், அவர்களைக் கண்டதும் களிப்பு எழாதா என்ன?

இப்படியெல்லாம் கல்லைப் பொன்னாக்கும் தெய்விக மனிதரிடம் சிறிது இரக்கமுண்டா? அவர்களை வேலை வாங்க, எத்தனை சாட்டைகள், எத்தனை பிரம்புகள், தார்குச்சிகள் எத்தனை, இன்னும் கையில் திருகி இரத்தம் வடிக்கும் ஆணி வகைகள் எத்தனை? ஆ! மாடும் சற்று இரக்கத்துடன் நடத்தப்படுமே! இம் மனிதரிடம் இரங்குவாரில்லையா?

இவர்களைப் பிடித்து வந்தவர்களுடைய உள்ளமும் நாடும் பாலைவனமா? இருக்கலாம். அதிலும் இடையிடையே ஓர் இனிய தண்ணிழற்சோலை யுண்டல்லவா? வாட்டி வதக்கும் அந்தக் கொடும் பாலையின் இடையில், தான் இருப்பதால் தனக்கும் அதன் பழி வருமேயென, அதை நீக்கி நல்ல உள்ளத்துடன் இரங்கும் சில மரஞ் செடிகள், நீர்த் தேக்கங்கள் இல்லாமல் போகவில்லை. நசுக்கிப் பிழிந்து, நீக்ரோக்களின் செவ்விரத்தத்தை யெல்லாம் மஞ்சள் பொன்னாக்கும் இரக்க மற்றவரிடையே

*தோன்றுகிறது ஓர் கவிதையுள்ளம். அங்கு இயற்கையும் அழகும் எழுகின்றன. மனிதரையெல்லாம் ஒன்றென மதிக்கும் மாண்புடைய 'கடவுள் இதயம்' மலர்கின்றது. அந்த மலர்ச்சிதான் முன் கூறிய கவிஞன் வில்லியம் கௌப்பர்.*

*கடவுள் தன்மை என்னதான் செய்யாது? கருப்பு எல்லா நிறத்தையும் தன்னில் தழுவிக் கொள்ளும் (மறைத்துக்கொள்ளும்) எனக் கேட்கிறோம். ஆனால் வெள்ளையால் முடியாது. வெள்ளையில் கருப்பில்லை. ஆனால் இக் கவிஞன் உள்ளத்தே, கடவுள் உள்ளத்தே, வெள்ளையன் உள்ளத்தே, கருப்பர் (நீக்ரோ) இடம் பெறுகின்றனர். வெள்ளை, கருப்பைத் தழுவும் காட்சியை இங்குக் காண்கிறோம். அதன் துன்பங்கண்டு கலங்கிக் கண்ணீர் விடும் ஒரு மனிதனை நாம் காண்கிறோம். புக்கர் வாஷிங்டன் போன்ற பேரறிவாளர், பெரிய மனிதர் தோன்றும் இனமென உணர்ந்தவனோ என்னமோ? சீதோஷ்ண வேறுபாட்டில், மாறுபட்ட நிறமுடையோரன்றி, மனிதத் தன்மை, யார்க்கும் ஒன்று தானே என்ற உண்மையை உணர்ந்தானோ என்னமோ? ஆம், அவனே நைந்து பாடுகிறான் :—*

"இருண்டதோலும் சுருண்டமயிரும் இயற்கைதந்த உரிமையை
அளிக்கவல்ல தல்லவே, அன்பு எங்கும ஒன்றுதான்
கருப்புவெள்ளை தோல்கள் என்ற கற்பனையின் உள்ளெலாம்"

"Fleecy locks and black complexion
Cannot forfeit nature's claim
Skin may differ, but affection
Dwells in white and black the same."

*இன்றுங் காண்பதற்கரிய இந்த உள்ளம் அன்றே வந்ததே, அது ஓர் விந்தைதான்!*

ஏசுவின் உயர்ந்த அன்புநிலை மனிதனை மனிதனுகக் கருதுவதுதான். பிறன் துன்பத்தை அவனுகவே ஆகின் உணர்வதும், அதற்கென இரங்குவதும், தீரும் வகை முயற்சி செய்தலும், தீரக்கண்டு மகிழ்தலுமே உண்மையான அன்பின் நான்கு படிகளாகும். தம்மால் தீர்க்க முடியாமல் இருக்கலாம. ஆனுல் தீரவேண்டுமே என இரங்கி ஏங்கினுல் அதுவே போதும்; அவன் மனிதனுய் விட்டான் எனலாம். அந்நான்கு நிலைகளையும் கவிஞனது நான்கே பாடல்களில் காணப்பெறுகிறேம்.

கவிஞன் தன்னை ஓர் நீக்ரோவாகப் படைத்துக் கொளகிருன். அடிமையாக இங்கிலாந்துக்குக் கொண்டு வருகிருன். உடலெல்லாம் தளைபூட்டிக் கொளகிருன். கழுத்தில் விலங்கு. உடலைச் சுற்றிப் பிரம்படி. கசையால் வீறிடுவதை மனதால் உண்மையாக உணருகிருன் அடிமை நீக்ரோவாகவே வாழ்கிருன்.

"என்னை அடிமையாக அவர்கள் வாங்கலாம். ஆனுல் மனதையும் வாங்கமுடியுமா? என் எண்ணங்கள் இன்னும் உரிமையாகவே இருக்கின்றன. அவற்றை இங்கிலாந்து அடிமைப்படுத்த முடியுமா? என்னை வாட்டி வேலை வாங்கலாம். என் மனதில் கிளாந்தெழும் மகிழ்ச்சியை அழிக்க அவர்கட்கு என்ன உரிமையுண்டு?" எனக் கேட்கிருன் கவிஞன்; அல்ல, அடிமை நீக்ரோ. ஆத்திரம் பொங்குகிறது.

வளளுவரின் கோபம் கவிஞனிடம் வெளிப்படுகிறது. அந்தக்கடவுள், பிச்சை கெஞ்சி உண்ணும்படி சிலரைப் படைத்தானு? அப்படியாயின் அவன் அலைந்து சாகட்டும் எனச் சபிக்கிருர் வள்ளுவர். அதே கொதிப்புடன் கௌப்பர் கேட்கிருன்.

"வானத்திலிருந்து உலகை ஆளுவதாக் கூறும் அந்த ஆண்டவன் எங்களை வாங்கி இப்படி விற்கச் சொன்னுனு? கசையால் அடித்தும், ஆணியால் முடிக்கி இரத்தம் கசிவித்துந்தான் எங்களைப் பிழியவேண்டு மென்பது அவன் விருப்பமா?" என்று சீறுகிருன்.

அந்நாட்டை நாடென்ருே, அல்லது இன்று கூறிப் பெருமித மடைகிருர்களே ஆங்கிலேயர், அதுபோல உலகில் உயர்ந்த நாகரிகம் படைத்த நாடென்ருே கூற அவன் அறிவு துணிகிறதில்லை. மனிதனை இழிவாக நடத்தும் மந்தைகள் நடத்தும் சந்தையென்கின்ருன் அதனை.

" மாந்தர் தம்மை இழிவு செய்யும் மாந்தர் கூடும் சந்தைக்கு "

"To the man-degrading mart"

என்பதே அவன் இங்கிலாந்திற்குக் கொடுத்த அரும் பட்டம். தன் கவிஞனிடம் எவ்வளவு பெரிய பட்டத்தை வாங்கியது இங்கிலாந்து!

அங்குள்ளவர்களைக் கண்டு, நிமிர்ந்து உரத்த குரலில் உரைக்கிருன் :—

"வலியிலும், பெருமையிலும் எங்களைவிட உயர்ந் தோம் என்பதற்கு நீங்கள் போதிய சான்று காணுதவரை எங்கள் நாட்டினரைக் காட்டுமிராண்டிகளாய்க் கருதாதீர். பணத்திற்கடிமைகளே! எங்களைக் கேட்பதன்முன், உங்க ளிடம் மனித உணர்ச்சி இருக்கிறதாவென முதலில் தெளிவுபடுத்துங்கள்."

" நிமிர்ந்து நின்று எங்களைக் கேட்கு முன்னர் உம்மிடம்
பரிவுடைய ' மனித உணர்ச்சி ' உண்டென்பதைக் காட்டுமின் "

"Prove that you have human feelings
Ere you proudly question ours!"

என அவர்களை ஏளனஞ் செய்து எக்களிப்புடன் கேட்கி ருன் நீக்ரோ.

உணர்ச்சி வந்தபாடில்லை. எத்தனை அறிஞரை, கவிஞரை ஏளனஞ் செய்வதுபோலத் தங்கள் சொந்த நெறியை, தன்னல வாணிபத்தை விடாத சண்டிகளல் லவா? உண்மையை உண்மையாக் காண்பது அறிவு; மாருகக் காண்பது சிறு பிள்ளைத்தனம். சிறு பிளளைகட்குக் கதை சொல்லித்தானே திருத்தவேண்டும். கதை சொல் கிருன் கவிஞன்.

நல்லவுரைக் கெட்டவர்கள் நம்புவார்களா? அவர்கள் நம்பமாட்டார்களெனத் தெரிந்து, நான் கட்டியுரைக்க வில்லை; படித்த கதையைத்தான் சொல்லுகிறேன் என் கிருன். 'வெறும் புகழ்ச்சியில்லை,' 'மெய்யுரைக்கின்றேன் பொய்யுரைக்கமாட்டேன்' எனவெல்லாம் பாரதியும், சுவாமி இராமலிங்கரும் உறுதி கூறி உரைக்கவில்லையா? அப்படித்தான். என் செய்வது! சிறுவருக்கு அறிவு கொளுத்த, தாம் உண்மையுடையோர் என்பதனைக் காட்டிச் சத்தியங்கூடத்தான் செய்யவேண்டும். இல்லா விடில் அவர்கள் நாட்டில் பிறந்ததால் தமக்கு மல்லவா பழி!

ஏன் அவர்களை இப்படி வாட்டுகிறீர்கள்? என்று ஒரு கேள்வி போடுகிருன். "எமக்கும் அவர்கள் (நீக்ரோவர்கள்) துன்பம், புலம்பல் எல்லாந்தான் தெரிகிறது. அவர்கள் கவலையில் கல்லும் உருகும். நாமும் அவர்களைப்பற்றி இரக்கப்படுகிரேும். ஆனல் என் செய்வது? அவர்க ளில்லையேல், நமக்கு சர்க்கரை, காபி, தேயிலை எப்படி கிடைக்கும்? அப்படியே நாம் விட்டாலும், அவர்களை டச்சு, பிரெஞ்சு, டேனிஷ் தேசத்தார் வாங்கிக் கொள்ளத் தான் போகின்றனர். அதனல் அவர்கள் துன்பம் பன்மடங்கு மிகுதியாகுமே! உம் மனப்படி பிறரும் விட்டு விட்டால் நல்லதுதான். இல்லாமல், பிறநாட்டார் நன்மை யடைகையில், நாம்மட்டில் ஏன் விட்டு ஏமாறவேண்டும்"

எனப் பணக்கார முதலாளி பரிவாக இரக்கப்படுகிறான். அப்போதுதான் கவிஞன் கதை வருகிறது.

தம்பீ! உன்னைப்போலவே நல்ல பள்ளிக்கூடப் பையன் ஒருவன் இருந்தான். பக்கத்தில் ஏழை ஒருவன் தோட்டம் போட்டிருந்தான். சில கொள்ளைக்காரப் பிள்ளைகள் சேர்ந்து, இவனைப் பார்த்து அத்தோட்டத்தி லுள்ள ஆப்பிள் பழங்களைப் பறித்து வந்துவிடு, எல் லோரும் பங்கிட்டுக்கொள்வோம் எனறனர். அதற்குப் பையன், தோட்டக்காரன் ஏழை, பாவம்! அங்கு திருடு வது தகாது என உண்மையிலேயே இரங்கினான், அவர்கள், நீ வந்தால் பங்குண்டு, இல்லையானால் சும்மா கிட! என்று உள்ளே புகுந்தனர். பையனுக்கு அறிவு முளைக்கத் தொடங்கியது.

நம் சொற்படி அவர்களும் கேட்டால் கிழவனை தோட்டக்காரனைக் காப்பாற்றலாம். ஆனால் கேட்க வில்லையே! நாம் மட்டும் இங்கு நின்று அவனைக் காக்க முடியாது. இது என்னை மட்டும் பொறுத்ததாயின் கிழவன் பிழைப்பான்; தோட்டமும் வாழும். ஆனால், இப்போது அவர்கள் முழுவதையும் கொள்ளையிடுவதைத் தடுக்க வியலாது. அதில் நாமும் சில எடுத்துக்கொண்டால் அதனால் குறைவொன்றுமில்லை. இப்படி அவன் அறிவு வேலை செய்தது; உள்ளே புகுந்தான் நண்பருடன்.

பின்னர் கவிஞன் கூறுவதை அப்படியே படித்தால் தான் சுவைக்கும்.

> "பழித்தான் தடுத்தான் பாவம்! இறுதியில்
> பங்கும் கொண்டான் கொள்ளையில் சூழ்ச்சியில்,
> இரங்கினன் பின்னர் ஏழைக் கென்பயன்!"

> "He blamed and protested, but joined in the plan,
> He shared in the plunder, but pitied the man"

எல்லோருடன் தானும் இரங்கினான்; ஆனால் கொள் ளையும் அடித்தான் அன்று முதல் இன்று வரையும் ஐரோப்பிய நாடுகளின் சுரண்டலும், சமாதானங் கூறும் திறமையும் இதே நிலையில் தானே இருக்கின்றன! அணு வேனும் முன்னேறியுள்ளதா? இன்னும் ஐக்கிய நாடுகளின் சங்கத்தில் (வெளிநாட்டு மந்திரிகள் கூட்டம) இங்கிலாந் திற்கு இத்தாலியில் ஆதிக்கம் இருந்தால், ஏன் நாம் மட்டில் மத்தியதரைக் கடலில் ஆதிக்கங் கேட்கலாகாது என ரஷியாவும அமெரிக்காவும் போட்டியிடுவது போன்ற சுரண்டல் கொள்கை ஒழிந்தபாடில்லையே!

சொல்லிச் சொல்லிப் பார்த்தான் கவிஞன். நடக்க வில்லை. மனஞ் சோர்ந்து கண்ணுறங்குகிறான். ஒரு கனக் காண்கிறான். அவனுடைய அழகிய எண்ணமே ஓர் கன வாகிறது. ஆதலால் அதனை 'இன்பக் கன' வென்கிறான் இளவேனிற் காலையில் நிகழ்கிறது.

கவிஞனை கபபலில் மேற்கு நோக்கிச் செல்கிறான். வழியில் ஒரு பெண்ணைப் பார்க்கிறான். அதுவரை அது போன்ற வியக்கத்தக்க (அஞ்சும) உருவத்தைக் கண்ட தில்லை. அவள் கையில் ஒரு கேடயம். சூரியனைப்போல ஒளி வீசுவது. அவளிடம் ஒரு தெய்விகப் புன்னகை பூக்கிறது. 'நான அடிமைகளை விடுவிககச் செல்கிறேன என்ற அகங் குளிரும அமுத மொழிகள் அவள இதழ்களி லிருந்து வெளியாகின்றன. அவள் இந்தச் சொற்களை உரத்திச் சொன்னாளோ இல்லையோ, அவள் இசையைக் கேட்டு மேகங்களும் மறைந்து வானம் தூயதாகிவிட்டது. இதற்குள கவிஞனுக்கு ஐயம பிறந்து விடுகிறது. 'அந்த விடுதலை கேட்பதற்குத்தான்' ஆனால் உண்மையல்ல எனக் கூறிவிடுகிறான். ஆம், எதிர்பார்க்கத்தக்கது தானே! இன்னும் அமெரிக்காவில் நீக்ரோவிற்குப் போதிய உரிமை உண்டா? ஆப்ரிக்க நீக்ரோக்கள் எப்படி நடத்தப்படுகின்

றனர்? அன்று அவன் கண்டது கனவென்றால் அதில் வியப்பென்ன?

இப்படி சொல்லிக்கொண்டே கவிஞனும் அவளும் ஓர் அடிமைகளை வைத்திருக்கும் தீவிற்கு வருகிறார்கள். அங்கு ஒருவன் கையில் சாட்டையுடன், ஆப்பிரிக்கக் கரையிலிருந்து நீக்ரோக்கள வருவதை எதிர்பார்த்து நிற்கிறான். அவனை ஆங்கிலேயனென்றோமனிதனென்றோ அழைக்கக் கவிஞன் கூசுகிறான்; ஏன், அவன் பெயர் சொல்லக் கொடுமை யானது என்கிறான்.

"அவனது கொடும் பெயர் ஐயோ! 'நசுக்குதல்'"
"Oppression his 'terrible name"
என்கிறான்.

அவனைக்கண்டதும் அவன் கைச்சாட்டை நழுவுகிறது. அவன உடனே நோய் கண்டு மடிகிறான். அந்த அரக்கன் (இது கவிஞன் கூறுவது) இறந்த அதே நேரத்தே ஆயிரக் கணக்கான குரல்கள் அகம புரிதது்க் கூத்தாடிக் கொக்கரிக்கின்றன. இப்போதுதான் கவிஞன் எழுந்திருக் கிறான்.

தான் கண்டது கனவாக அறிகிறான். ஆனல் அது உண்மையாவதாக மனக்கோட்டை கட்டுகிறான். அவன் காதுகள் இந்த நற்செய்தியைக் கேட்டனவாம்.

"இங்கிலாந்து இனி நீக்ரோக்களை அடிமையாக வைத் திருக்கப்போவதில்லை. உலகிற்கு இதனை அறிவித்து விட்டது.

எழுந்து வெளியே வருகிறான். அடிமைகளை வாங்கி விற்கும் ஒரு வியாபாரியைக் காண்கிறான். அவனுள் புகுந்து புலவன் பாடுகிறான். 'அடிமை வியாபாரம் நின்றது எனுஞ் செய்தி எனக்கு மின்சார அதிர்ச்சியாகக்

காதில் விழுந்தது. என்னிடமுள்ளோரைக் காலிசெய்யப் போகிறேன். எனக்கு மிகுந்த லாபந் தரும் தொழில்தான். ஆனால் இன்று அது என் இதயத்தைப் பிளக்கின்றது. என் உயிரில் தார்க்குச்சிபோலப் பாய்கிறது. இச் செயல் இன்று, மனதை அறுக்கும் துன்பத்தைச் செய்கிறது.

வாருங்கள்! கடைசியாக மீதியிருப்போரை வாங்கிக் கொண்டு என்னை விட்டுவிடுங்கள். இனி இத் தொழிலை நான் செய்வதில்லை.

"கரும்புடை கரையிதனில் காலடி வைக்கமாட்டேன்
கரியநல் 'சீஸர் பாம்பி' தம்மையான் பற்றிவந்து,
ஆதலின் இருப்பில் உள்ள அனைத்தையும் கொள்மின், போவேன்'

"Come, Buy off my stock for I must no more
Carry Caesors ans pompeys to sugar-cane shore"

என, தான் செய்த பிழையையெல்லாம் உணர்ந்து இரங்குகிறான்; அதிலிருந்து விடுபடத் துடிக்கிறான்.

அன்று ஏசு, மக்கள் செய்த குற்றத்திற்காகச் சிலுவையேறித் துன்புற்று இறந்தார். இங்கிலாந்து நீக்ரோ அடிமைகளுக்கிழைத்த பிழைகளுக்காகத்தான் இரங்கி வருந்துகிறான் வில்லியம் கௌப்பர்.

ஜெபமணியை உருட்டிக்கொண்டு மூலையில் உட்கார்ந் திராதே. நீ விரும்பும் ஆண்டவன் இங்கில்லை. அதோ! புழுதி படிய, வியர்வை வடிய நிலத்தை உழுகிறானே, கல்லுடைத்துப் பாதை செப்பனிடுகிறானே அவனிடம் இருக்கிறார். அங்கே ஓடு அவரைக் காணலாம்' எனக் கீதாஞ்சலியில் தாகூர் பாடுகிறாரே அக்காட்சியைக் கௌப்பர் காண்கிறான். தம நாட்டின் நிலங்களையெல்லாம் பசுமை கொழுக்கச் செய்யும் காட்டைத் திருத்தி நாடாக் கும் அந்த ஏழைகளிடம், ஒடுக்கப்பட்ட, தாழ்த்தப்பட்ட,

புறக்கணிக்கப்பட்ட நீக்ரோக்களிடம் கடவுள் காட்சியினைக் காண்கிறான். அவர்கள் துன்பத்திற் கிரங்கி அவர்களை உயர்த்தத் துடிக்கிறான்.

அவனைப் பொறுத்தமட்டில் அன்றே மனிதனாய் வாழ்ந்துவிட்டான். ஆனால் அவன் போய் எத்தனை ஆண்டுகள் ஆயின? இன்னும் கருப்பர்களை உரிமை யுடைய மனிதராகக் கருதுகிறார்களா? தென் ஆப்ரிக் காவில் இன்றும் இந்தியரைத் தீண்டாதவர்போல் நடத்தி, எத்தனை இழிவுகள் அட்டூழியங்கள் நடக்கின் றன! 'முதலில் உங்களிடம் மனித உணர்ச்சி உண் டென்பதை வெளிப்படுத்துங்கள்' என அன்று கேட் டானே, இன்றும் தலைநிமிர்ந்து விடைகூறத் தகுதியுடைய வெள்ளையர் இல்லையே!

இத்தகைய, 'மனிதரெல்லாம் ஒன்றே' என்ற ஏசு வின் குரலை எடுத்துப் பேசிய அவனை ஏன் 'வெள்ளையர் தெய்வம்' எனலாகாது? ஆம்; தெய்வத்திற்கும் ஏசு விற்கும் கிடைக்கும் மதிப்பென்ன?

தோற்றத்திலல்ல, 'மனிதத் தன்மையையே மனிதன் என்பது' எனப் பழந்தமிழ் இலக்கண ஆசிரியர் தொல்காப்பியர் கூறுவார். மனித இனத்தை (Man kind) மனிதத் தன்மையுள்ள (Humanity) இனமாக மாற்றத்தான் உலகில் கவிஞரும், அறிஞரும் முயன் றனர்; வருந்தினர். இன்னும் நடந்ததா?

என் செய்வது? கௌப்பரும் வெள்ளையன்தான். கருப்பர்களை மாறா அடிமைகளாகக் கருதும், நசுக்கப் பார்க்கும் ஸ்மட்ஸும் வெள்ளையன்தான். வெண்ணெயும், சுண்ணாம்பும் இரண்டும் வெள்ளைதான். ஆனால் இரண்டும் ஒன்றா?

*

# புறநானூற்றுத்தமிழர்

மலரில் அகவிதழ், புறவிதழ் எனவும், உடலில் அகம் (மனம்) புறம் எனவும் பிரிக்கப்படும் இயற்கையான சிறந்த வகுப்பு முறையை, வாழ்விலும் அகவாழ்வு (குடும்ப--கற்பு வாழ்வு), புறவாழ்வு (அரசியல்) எனவுணர்ந்து பிரித்து வாழ்ந்தமை தமிழர்க்கும் அதனை விளக்கும் தமிழ் இலக்கியத்திற்கும் ஓர் தனிச் சிறப்பாகும்.

தமிழர்கள் அகவாழ்வில் பெண்கள் அழகினைப் பாடுதலையே இலக்கியமாகவும், புறத்தில் இன்று, கடவுளையும் எதற்கும் விதியெனக்கூறும் சோம்பலையும் இயற்கையாயும் கொண்டுவிட்டனரெனப் பலர் கூறக் கேட்டிருக்கிறோம். இங்கு புறத்தைப் பற்றி மட்டும் சிறிது ஆராய்வோம். இன்றைய அந்நிலைக்கு அரசியலில் அடிமைத்தனம் காரணமாயினும், பண்டைய தமிழர் பண்பில் இந்நிலையுண்டா எனப் பார்க்கவேண்டும். பதிற்றுப்பத்து, பத்துப் பாட்டு, பரிபாடல் முதலியனவும் பண்டைத்தமிழரின் புற வாழ்வை விளக்கினும் புறநானூறே மூவேந்தரையும், வாழ்வின் பல பகுதிகளையும் விளக்குவதில் சிறந்து நிற்றலால் அதனை துணைகொண்டு பல கட்டுரைகள் எழுதும் கருத்து எனக்குண்டு. அவற்றுள் இது பொதுவாக புறநானூற்றுத் தமிழரைப் பற்றிய சில கருத்துக்களை விளக்கும் முதல் கட்டுரையாகும்.

என் ஆராய்ச்சியில், அன்றைய வாழ்வு இன்றையினும் சிறந்ததாயும், தூய்மையாகவும் இருக்கக் காண்கிறேன். அந்தணர் (மொழிப்புலர்) நாலுக்கும், துறவறம் (தொண்டு) இல்லறம் ஆய இரண்டு அறங்கட்கும் அரண்

செய்யும் புறவாழ்வினை 'உயிரெனக் கருதி'ப் போற்றி யமை, புறநானூற்று "நெல்லும் உயிரன்றே. நீரும் உயிரன்றே, மன்னன் உயிர்த்தே மலர்தலையுலகம்" என்ற அடிகளே யுணர்த்தும். அரசியல் (புறவாழ்வு) அழிந்தால் நாடே அழியும் என்ற கருத்துடன், இன்றைய சோம்பலும் கோழைத்தனமும் இன்றி, அதனை எவ்வளவு சிறந்ததாக மதித்துக் காத்துவந்தனரென்பதை இதனால் அறிகிறோம்.

பண்டையோர் புறவாழ்வினைக் கூறும் புறநானூற றினையும், அரசனிடம் புலவர்கொள்ளும அன்பு, அரசன் புலவரிடம் காட்டும் பெருமதிபபு, இருவரிடமும காணும வீரமும் கொடையும், ஆண் மகற்குரிய மானம், பெண்மகட் குரிய கற்பு என்ற ஆறு பிரிவிற்குள் கொண்டுவந்து விடலாம்.

ஓர் நாட்டின் புறவாழ்வு, செல்வம, அறிவு என்ற இரண்டாலேயே அமைகின்றது. அந்நாட்டின் அரசனது வாழ்வு அங்குள்ள செல்வத்தின் கண்ணுடியாயும், புலவ னது உள்ளம் பொதுவாக மக்களது அறிவின் கண்ணுடி யாயும் அன்று அமைந்ததாய்க்கொளளலாம. சிறப்பாக மனித வாழ்வில் செல்வம் அறிவையும், அறிவு செல்வத்தை யும் உயர்த்துவதன் மூலமே மக்களின பண்பு, நாகரிகம் நல்வாழ்வு யாவும் செழிபபுறுகின்றன. ஒன்றற்கொன்று தொடர்புடையனவாய்ப பணியாற்றும்போதுதான் நாடு முன்னேறுகிறதைப் பார்க்கிறோம. அன்று செல்வமுடைய அரசன் புலவனைப் போற்றினன். அறிவுடைய புலவன் அரசினைப் புகழ்ந்துபாடினன். இச் செல்வமும் அறிவும் பிணைந்த அரசினையே பிளேடோ விளக்கும்போது 'அரசன் ஞானியாக (Philosopher) இருக்க வேண்டுமெனக் கூறு கிருர். தமிழரசன் ஞானியை (அறிஞனை)த் தலைவனுகக் கொண்டு அவன் சொற்படி ஆண்டான், அதுதான் வேறுபாடு. இங்கிலைமாறி அறிவு அடிமைத்தனத்தையும்,

செல்வம் தன்னலத்தையும் வளர்க்கும்போதுதான் இன்றைய நாடுகள் அழியும போர்களெல்லாம் மலியத் தொடங்குகின்றன. இன்று அறிஞர்க்கும், அரசுகட்கும் எவ்வளவு ஒற்றுமை!

தமிழறிவும், தமிழ்ச் செல்வமும் புணர்ந்த இக்கூட்டத்தில்தான், வையத்து வாழ்வாங்கு வாழ வழிகாட்டி உலகிலேயே முதல் நாகரீகமுற்ற ஓர் நாடு படைக்கப்படுகிறது. அதுவே புறநானூற்றுத் தமிழகம். அந்த நாகரிகத்தின் இரு காற்றுப்பை (சுவாசகோசம்) களாக வீரமும், கொடையும் அமைந்திருந்தமை யறிகிறோம். அறிவின் பயனாய்த் தோன்றிய வீரமும், செல்வத்தின் பயனாய்த் தோன்றிய கொடையும் முடிவில் அரசன, புலவன் இருவருக்குமே பொதுவாய் சிறப்பியல்புகளாக நிற்பதனைக் காண்கிறோம. வீரமும், கொடையுமுடையவனாக அரசனைப் பாடும் பாடல்களே கடையெழு வள்ளல்களைப் பற்றிய, மூவேந்தரைப் பற்றிய, பாடலுள் பெரும்பான்மையானவை. சுதந்திரமுடைய அரசிருப்பினும், சுதந்திரத்தை வைத்துக் காக்குந் தகுதிபெற்ற மக்களும இருந்தால்தான் ஓர் நாடு உயர்வும், பெருமையும் அடைவதுபோல, அன்று தமிழ் மனனனிடம் விளங்கும் வீரமும் கொடையும் புலவரிடமும் இயல்பாயிருந்தமை காண்கிறோம். மக்களின் கண்ணாடி (பிரதிநிதி) யாக அன்றையப் புலவன் வாழ்ந்தமையின் (சிறப்பாக அறிவின்) அன்றைய மக்களும் வீரமும் கொடையு முடையோராய் வாழ்ந்தமை தெரிகிறது.

ஒவ்வொரு புலவனும் அரசனைப் பரிசில் கேட்கும்போது, தன் குடும்பமட்டுமன்றி, தன்னுடன் வந்த சுற்றத்தார் குடும்பங்கள் வாழவும் முதலில் அளிக்குமாறு வற்புறுத்தலாலும், குமணனது வளனைப் பெற்று வந்த பெருஞ் சித்திரனார்,

'இன்னோர்க் கென்னது என்னெடுஞ் சூழாது
எல்லோர்க்கும் கொடுமதி மனைகிழ வோயே' என

மனைவியிடம் கூறலாலும் புலவரிடமும் கொடைத்தன்மையை யுணர்கிறோம்.

தமக்குள்ளே பகைத்த சோழர் நலங்கிள்ளி நெடுங்கிள்ளி இவரின் நடுவிலும், கோப்பெருஞ் சோழன் தன் மகனுடன் போர் தொடங்கியபோது அவனிடமும் அஞ்சாது தம் கருத்தையெடுத்துக் கூறி அவர் தம் சினத்தைப் பணியவைத்தபோதும்,

சிறிதாகப் பரிசில் அளித்த அரசனிடம், வேற்றரசன் தந்த பெரும் பரிசிலைக் கொணர்ந்து காட்டி,

'முதுமரம் தந்துயாம் பிணித்த
நெடுநல் யானையெம் பரிசில்'

அதோ காண்பாயாக என மற்றோர் புலவன் கூறிய போதும்,

'எறிசொல் அஞ்சா அரவின் அன்ன சிறுவன் மள்ளரு முளரே
பொதியிற் றூங்கும் விசியுறு தண்ணுமை
வலிபொரு தெண்கண் கேட்பின் அதுபோர் என்றும் என்ஐயும் உளனே'

எனப் பகையரசினிடம் அஞ்சாமல் தன் அரசன் வீரத்தை யுயர்த்தி ஔவையார் கூறும் போதும்,

புலவர் தம் வீரம் அரசர் வீரத்திலும் எவ்வளவும் குறையாத தென்பதனை யறிகிறோம். போரில் புறங்காட்டாதெதிர்த்துப் பகைவரை யழிப்பவன்மட்டும் வீரனல்ல. அவனைவிடத் தன் அறிவிற்பட்டதை அஞ்சாமல் நாட்டின் முன் எடுத்துரைக்குமவனும் பெரிய வீரனே. அதனால் தான் வீரரும், வீர வழிபாடும் (Heroes and Hero worship) என்ற நூலில் கார்லைல் என்ற ஆங்கில அறிஞர் வீரர் வரிசையில் போர் வீரரை மட்டு மன்றிப் புலவர்,

சமயஞானிகள், அரசியல் ஞானிகள் இவரை யெல்லாம் சேர்த்துள்ளார். சேக்கிழார் அடியாரை 'பீடு' முற்றிய கருணையின் வீரர்" என்கிறார். புகழும், நாகரீகமுமுள்ள உண்மை மனிதவாழ்வு வாழ்வதே உயர்ந்த வீரமல்லவா? அன்று மக்களும், அறிஞரும் (புலவர்) அவ்வீரமும் கொடையுமுடையோராய் வாழ்ந்தமை புறநானூறு குறிப்பதன் மூலம் தமிழகத்தின் ஓர் உயர்ந்த "சமூகத்தின் இயல்பு" தெளிவாகின்றதெனலாம்.

மற்றும் சமூகமே ஆண், பெண் என்ற இரு பகுதியால் அமைவது. இவ்விரு பகுதியுமோ, அல்லது ஒன்றோ தனது இயல்பு அழியுமானால் சமூகமே (நாடே) அழியும். அவ்வியல்பும் நாடு உயரத்தக்கதாக இருத்தல் வேண்டும். அங்ஙனம் அன்று ஆணிடம் அமைந்த சீரிய பண்பு மானமும், பெண்ணிடம் கற்பும் நிலைத்து விளங்கின. நாட்டின் கண்கள் மானமும் கற்புந் தவிர வேறு யாவை? மானமுடைய வீரன் பகைவரிடம் அஞ்சாத வீரத்தால் அரசியலை யழியாமல் காப்பதன் மூலம் நாட்டின் 'கற்பியல் வாழ்வு' சிதையாமே உயர்கிறது. மடவார் கற்பு காவலன் காவல் இன்றெனின் இல்லையல்லவா? மகளிர் கற்பு மைந்தர் தம் மானத்தை யென்றும் அழியாமல் உணர்ச்சியும், ஊக்கமும் ஊட்டி வருகிறது. தம் தலைவரது மானத்தை யழியாமற் புகழ்தலும், அழிந்தால் இகழ்ந்து அவனைத் துறத்தலுமே தற்கொண்டார் பேணும் தகைசான்ற சொல்லுயர்த்தும் பெண்மையறமாக அன்றைய மகளிர் தம் கற்பின் இயல்பு மிளிர்ந்ததெனலாம்.

'பாடுபெறு பரிசிலன் வாடினன் பெயர்தலென்
நாடிழந் ததனினும் நனியின் னாதே'

எனக் குமணன் கூறும்போதும்,

பகைவரைப் போரில் வென்று அவரை,

'முரசமொடு ஒருங்ககப் படேன் ஆயின்
என்னிழல் வாழ்நர் சென்னிழல் காணது
குடிபழி தூற்றும் கோலேன் ஆகுக'

என்ப் பாண்டியன் தலையாலங்கானப் போர் வென்ற நெடுஞ்செழியன் கூறும்போதும்,

அரசர், தம் கொடையிலும் வீரத்திலும் மாசுவராமல் காக்க வேண்டுமே எனத் துடிக்கும 'மானமுடைமை' யையே காண்கிறோம்.

ஒரு மகனல்லது இல்லாத தாயொருத்தி, வெளிது விரித்துடீஇ, வேல்கைக் கொடுத்து, வெற்றியாயின் திருமபிவா, அல்லது அங்கே புறமுதுகிடாமல் மடி எனக் கூறியபோதும்,

கணவனை யிழந்து உடன் கட்டை யேறும் தமிழ் மகளைத் தடுத்த புலவரிடம், எனக்கு ஈமத்தீயும் தண்ணிய தாமரைத் தடமும் ஒன்றே நுமக்கு அவை அரியனவாக லாம் ஆகலின் விடுமின் என எரிபாயும்போதும், தமிழ் மகளிர், மானத்தைக் காத்து நாட்டின் அன்றைய உயர் கொள்கைக் குயிர்கொடுத்த 'கற்புத்தன்மையை' யே அறிகிறோம்.

இங்ஙனம் மரமும் கொடியும் மகிழ்ந்து பிணைந்து மலர்ந்து அளிக்கும் காட்சிபோல அன்றைய ஆணின் மானமும் பெண்ணின் கற்பும் அணைந்து மலர்த்திய சமூகக் காட்சி தமிழர்க்கே தனிமேன்மையைத் தருவதொன்றாகும்

இவ்வாறு ஓர் நாட்டில் அரசு அறிவைச் செழிப்பிக்க அறிவு வீரத்தினைப் புகழ்ந்து அழியாமல் உயிர்ப்பிக்க, அவரிடம் தனித்தனி விளைந்த வீரமும் கொடையும் இணைந்து நாட்டின் தனிப்பெருந்தன்மைகளாக அந்நாட்

டின் பண்பாட்டி (Culture)னை மலர்த்த, அவற்றால் வளர்க்கப்படும் மக்கள் மானமும் கற்புமே தங்கள் உயி ரியல்பாக்கொண்டு நல்வாழ்வு நடாத்தக் காணும் ஓர் இன்பக்காட்சி, அன்றைய 'புறநானூற்றுத் தமிழர்' தம் காட்சியாக ஒளிர்கின்றதைக் காணத் தமிழராய்ப் பிறந்த தில் நாமெல்லாம் ஏன் பெருமைகொள்கிறோம் என்பது தெளிவாகிறது. இதைவிட ஓர் நாடு பொதுவாக அடை யும் சிறப்புக்கள் வேறு எவையாய்த்தான் இருக்கமுடியும்?



# புலவன் வறுமை

புறநானூற்றில் முழுவதும் இடையிடையே நம்மைக் கவர்வது வறுமைக்காட்சி. வறுமை நிறைந்த புலவன் வளமிக்க அரசனிடம் பரிசில் கேட்கிறான். அப்புலவன் அறிவில்தான் வறுமை தோன்றுகிறதா அல்லது அவனறிவே வறுமையாக மாறுகிறதாவெனச் சொல்ல முடியாது. ஆனால் அவ்வறுமையில் ஒரு செம்மையைக் காண்கிறோம்.

வெறுக்கத்தக்க, புறக்கணிக்கத்தக்க, துன்பமிக்க வறுமையில் ஓர் செம்மையின் காட்சி. நாற்றமுடைய வெறுக்கத்தக்க சேற்றில்தானே செந்தாமரை பிறக்கிறது! நஞ்சுடைய நாகத்தினிடம் நல்லமணி பிறக்கிறது! உலகில் அறிஞர் (ஞானி) வாழ்க்கைகளை யெல்லாம் அலசிப் பாருங்கள். ஒரே வறுமை, செல்வராய்ப் பிறக்கும் அறிஞருங்கூடத் தாமே வறுமையை வரவழைத்துக்கொள்கின்றனர், எளிமையாக வாழ்கின்றனர். இதன் காரணம் என்ன?

சுடச் சுடப் பொன்னின் மாற்றும், ஒளியும் மிகுந்து கொண்டே செல்கின்றன. கொல்லன் கூடத்தில் காய்ச்சிய இரும்பு எவ்வளவுக்கெவ்வளவு சம்மட்டியால் அடிபடுகிறதோ அவ்வளவும் அதன் உருவத்தில் அழகும் மதிப்பும் மிகுதியாகும். அதுபோலவே வறுமைக்கனல் சுடச் சுட துன்பச் சம்மட்டி தாக்கத் தாக்க மனித (அறிஞர்) வாழ்வு மாறுதலடைகின்றது, மேன்மையடைந்துகொண்டே போகின்றது.

" பாடுபெறு பரிசிலன் வாடினன் பெயர்தலென்
நாடிழந் ததனினும் நனியின்னாதே "

எனக் குமணன் கூறுவதில் புலவனின் செம்மையு (பாடு)ம் அவனது வறுமை (வாட்டம்) யும் ஒன்றிய நிலையை உணர் கிறோமல்லவா ?

வாழ்க்கையில் சீரிய பண்பும் நாகரிகமும் பொலிய நிற்போரெல்லாம் வறிஞராக, அல்லது தாமே வறுமையை ஏற்றவராக இருக்கின்றனர். பண்புயர்ந்த நாகரிகத்திற்கும் பசிகொளுத்தும் வறுமைக்கும் நெருங்கிய உறவுண்டு. துன்பத்தினிடையேதான் கலை மலர்கின்றது, கவிதை உருவடைகின்றது. 'ஜினராசதாசர்' என்பார் இது பற்றி விளக்கிக் கூறுகிறார். ஒன்று அழியும்போது மற்றொன்று பிறக்கும். விதையழிய செடி துளிர்க்கும். மலரழியக் காய் தோன்றும். வாழ்விலும், வறுமையினால் உடலில் உள்ள ஆற்றல் வாட வாட அந்த வனையப்படுகின்றது கலையழகு கவியின்பம். இசையாக நாடகமாக காவியமாகக் கவின் பெறுகின்றது. இதுவே தமிழனின் (புலவன்) சீர்மை பாரதி, தாங்தே ஆய உலகக் கவிகளின் உள்ளம விரிந்ததும் பண்பு எழுந்ததும் கவிதை கனிந்ததும் எளிய வறுமை கூர்ந்த வாழவில்தானே !

சமைத்துப் பல மாதங்களாயிற்று. அடுப்பில் காளான் பூத்துக்கிடக்கிறது. பசித் துன்பத்தால் தேம்பித் தேம்பி தாயின் பாலற்ற முலைகளைச் சுவைத்துச் சுவைத்துப் பார்க்கும் குழந்தை பால் வராமையால் அழுகிறது. பாவம் ! நீண்டநாள் பாலில்லாமையாலே முலைக் கண்களும் தூர்ந்து விட்டன. சேயின் முகத்தைக் காணும் தாயும் கலங்குகிறாள். அவள் நிலையில் புலவனும் அடங்காத் துயரடைந்து அரசனை நாடுகிறான், இஃதோர் வறுமைக் காட்சி. பெருந்தலைச் சாத்தன் என்ற புலவன் பாடுகிறான். பாடும் வலிமையை ஈந்ததும் அவ்வறுமைதானே ?

குழந்தைக்குப் பாலில்லை. குப்பையில் கிடக்கும் கீரையைப் பறிக்கிறாள். கிடைப்பது வேறில்லையாதலால், அந்தக் கீரையும் குறைந்து தளிர்கள் தான் உள்ளன. போட உப்புமில்லை. கொஞ்சம் புளிச்சுவையேனும கலக்கலாமெனில் மோர் இல்லை. சோறு எங்கே கிடைக்கப்போகிறது? வெறுங் கீரையை அனல்காட்டி உண்கிறாள். ஒரே ஆடை, அதுவோ கந்தல். தப்பிக் கட்டலாமென்றாலோ பின்னர் துணி நிற்காது, கிழிந்து உதிர்ந்து விடும்; ஆதலால் ஒரே அழுக்கு. இந்நிலையில் தெய்வத்தை நொந்துகொள்கிறாள் மனைவி, காண்கிறான் புலவன, கவிதையாகப் பாடுகிறான். இதனைப்பாடும் பெருஞ் சித்திரனார் வறுமையை இயற்கையாக வனைவதில் இணையற்றவர்.

இத்தனை வறுமைக் கிடையிலா அந்த செம்மை மலர்கின்றது! அச்சமும், கோழைத்தனமும் வறுமையில் வளர்வது. ஆனால் அறிவு அதனை மடித்துவிடுகின்றது. பகையரசன் ஒருவன் ஔவையைக் கேட்கிறான். 'நும் நாட்டில் வீரரும உளரோ' என.

"அடிக்க ஒங்கும் கோலை யஞ்சாமல் சீறிப்படமெடுக்கும் நாகமனைய வீரச்சிறுவரும் உளர். பொதுமன்றில் கட்டிய முழவு, காற்றினால் ஆடிக்கிளையில் மோதும்போதெழும் ஓசையைப் போர்முரசொலி யெனப் பூரித்துத் தோள்கொட்டும் என் அரசனும் உளன்" என மண்டையிலடிக்கிறாள் ஔவை என்ன அஞ்சாமை! சோழன் நெடுங்கிள்ளியும நலங்கிள்ளியும் உடன்பிறந்தோர். இருவரும் பகைத்துப் போர்க்களஞ் சேர்ந்தனர், கோவூர்க்கிழார் என்ற புலவர் வருகிறார். நீவிர் இருவரும் அண்ணன் தம்பிகள், நுங்கள் போர் பகைவர்க்கு நகைப்பைத் தவிர வேறு பயன் தராது எனப் பல அறிவுரை கூறுகிறார். அரசர் அடங்கிப் பணிகின்றனர், போர் நிற்கிறது.

"நற்பொருள் நன்குணர்ந்து சொல்லினும்
நல்கூர்ந்தார் சொற்பொருள் சோர்வுபடும்"

என்ற வழக்கு மறைகிறது.

தமிழர் அறிவின் முன் அவர் வறுமை அகன்றுவிட அவர் தம் செம்மையே சிறந்து நிற்கிறது. அரசன் புலவற்குத் தலை வணங்குகிறான்.

நன்னன் என்ற வள்ளல் நீதி தவறுகிறான். அவன் மரபினனும் மற்றோர் இளவரசனும் அமர்ந்திருக்கிறார்கள். அங்கு சென்ற புலவன் தம்பியைத் தவிர்த்து, மற்றவனை மட்டும் தழுவிக்கொள்கிறான். இளவிச்சிக்கோ கோபமும், நாணமுமடைகிறான், ஏன் என்கிறான்? நின் மரபன் வள்ள லாயினும் அநீதி செய்தான், ஆகலின் புலவர் அவனை அடைவதில்லை. நீ அவன் மரபன் என்கிறார் அறமுடைய புலவர். என்ன நேர்மை? இன்று அரசாங்க அலுவலாளர் (உத்யோகஸ்தர்) எவ்வளவு லஞ்சம் அநீதி கொடுமை செய்யினும் அவர்களை வெறுத்தொதுக்கும் அறிஞர் எத் தனை பேர்? பின் வறியருக்குச் சொல்வானேன்! அதிகாரி கள் திரும்புமுன் அடியேன் என்று மண்டியிடக் காத் திருக்கின்றனரே என்ன இழிவு!

புகழுக்கு உயிரும் கொடுப்பர், பழியெனில் உலகமே பரிசாகக் கிடைத்தாலும் செய்யார். தனனை மறந்து, பிறர்க் கென உழைப்போர் உண்மையால் உலகம் உயிருடன் இருக்கிறது. உண்மையான மனித வாழ்வின் இக்குறிக் கோள் ஓர் புலவன் அறிவால் குறிக்கப்படுகின்றது.

"நெற்கதிர்களைத் திருடி வளையிற் சேர்க்கும் எலி போன்றோர் நட்புவேண்டாம். ஆனால் இடப்பக்கத்தே வீழ்ந்த இரையைவிட்டு, மறுநாள் வலத்தே வீழ்ந்த யானையை யுண்ணும் புலியின் மானமுடையார் நட்பே வேண்டும்" என்கிறார் மற்றோர் புலவர்.

"படையும வீரமும் படர்ந்த அரசர் பண்பு இல்லாத வராயின் அவரைப் புகழமாட்டேன். ஆனால், ஆடுமேய்ந்து மீதமுள்ள கீரையைக் கொய்துண்ணும் அத்தனை எளிய சீறூர் மன்னனேனும் பண்பறிந் தொழுகும் உணர்வுடை யோரையே யாம் வியப்பேம்" என வீறுடன் விளம்பு கிறான் மாடலன் மதுரைக் குமரன் எனும் அறிஞன். இங்ஙனம் அஞ்சாமை நீதி நேர்மை நட்பு அறிவு பெருமை இவையெல்லாம் இணைந்த புலவர் வாழ்வில் வறுமையா தோன்றுகின்றது? அங்கு விஞ்சி நிற்பது செம்மையல் லவா? அறிஞனின வறுமையில் ஓர் உயர்வு, அரசன் பெருக்கத்தில் ஓர் பணிவு.

"பெருக்கத்து வேண்டும் பணிவு சிறிய
சுருக்கத்து வேண்டும் உயர்வு"

என்ற குறள் வாழ்வு அங்கு திரள்கின்றது. செல்வ முடையவன் பணிவில்லையேல் பயனடையமாட்டான். வாழ் வின் நலனில் நஞ்சு கலந்துவிடும். ஏழை நிமிர்ந்து நில்லா விடில் எல்லோரும் ஏளனம் செய்வர், மதிக்கமாட்டார். ஆதலால் ஊக்கமழிந்து முன்னேற்றந் தடைப்படும். அத்த கைய வறுமையிற் பணியாது நிமிர்ந்து நிற்கும் மான முடைய வாழ்வினைத் தமிழர் வாழ்கின்றனர். அவர் தம் தொண்டு வாழ்விற்குத் துணைபுரிய நாட்டில் மக்களெல் லாம மலர்ச்சியுடன் முன்வருகின்றனர். பத்துப்பாட்டிலே தமிழ் நாட்டுக் குடிகள் எங்ஙனம் புலவரை வரவேற்றுப் போற்றுகின்றனர் என்பது விளக்கமாக உரைக்கப்படு கின்றது.

"துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி மறந்தார்கொல்
மற்றை யவர்கள் தவம்"

என்ற வாய்மொழி அறிஞர் வாழ்வில் அகப்படுகின்றது. நாடு வாழத் தம் வாழ்வைத் துறக்கின்றனர் புலவர். அப்

புலவர் வாழ்வே தாம் இல்லறம் நடத்துகின்றனர் மக்கள். பின் வறுமை என்பது எப்படித் தெரியும்?

ஒப்புரவே (தொண்டு) உயர்ந்த வாழ்வு. ஓய்வெல்லாம் அதற்கே உழைக்க வேண்டும். துன்பத்தை யெல்லாம் பொறுக்கும் துணிவின்றி தொண்டு செய்வதெப்படி? செல்வனுக்கு ஓய்வேது? செல்வத்தை வளர்க்க, காக்க அவனே துன்பத்தை விலைக்கு வாங்கிக்கொள்கிறனே! ஆனல் பிறர்க்குழைக்கவோ அதில் ஒரு சிறு துன்பப்படவோ அவன் மனம் ஒருப்படாது. வறுமையில் எப்போதும் ஓய்வு. வறுமைத் துன்பத்தைப் பொறுத்தவனுக்கு மற்ற துன்பங்கள் எம்மாத்திரம்? வறுமை எளிமை நிறைந்த புலவன் வளம் நிறைந்த பாடல்கள் பாடுகிறன். அவன் வறுமை ஒரு வலிமையைத் தருகிறது. துன்பமே உடலுக்கு இயற்கையென உணர்கிறது. மனதைத் தவிரத் துன்பமொன்றில்லை யெனத் தெரிகிறது. இன்னுமையை இன்பமாகக் கொள்கிறது. எதிரியும் மகிழும் நல்வாழ்வு மலர்கிறது.

மக்கள் வாழ்வில் எளிமையும் ஏற்றமும் செழிக்கத் தொண்டாற்றுவதே அறிவின், தொண்டர் கடன். இன்றைய உலகில் இயந்திர ஆடம்பர செல்வ வாழ்வு வளர்ந்தது. ஓய்வில்லை. பணிவுமில்லை, நாகரிகம் சாய்ந்தது, போர்கள் மலிந்தன, உலக அமைதி குலைந்தது. இனியேனும் உலகினைச் செல்வர் ஆளாமல் எளிமையும் செம்மையும் ஆளவேண்டும். காந்தியடிகளின் முயற்சி அது தான். கிராமங்களே அதற்குத் தகுதி, ஏசுவின் உரைகளும் அதற்கே. வள்ளுவர் வாய்மையும் அந்நெறியில் வளர்ந்ததுதான். அத்தகு வறுமையிற் செம்மை யுயர்ந்த வாழ்வு தமிழர் வாழ்வு.



# அதிகமானும் - அணுக்குண்டும்

தமிழ் உயிர்வாழத் தமதுயிரைக் கொடுத்த நாட்டின் பெருமைக்காகத் தம் பெருமையை மறந்த வள்ளல்கள் பண்டைத் தமிழ்நாட்டிற் பலர். தமிழ் மன்னரெல்லாம் வண்மை சிறந்த உள்ளத்தவரே யாவர்.

அதிகமான் என்ற தமிழ் அரச வள்ளல் அளப்பிலா ஆற்றலும் ஆண்மையும் படைத்தவன். வெற்றி, அவன் கைவேல் எனலாம். 'வளம்படு வாய்வாள் ஏந்தி யொன்னார் களம்படக் கடந்த' என அவனது தோல்வியே காணாத வாளின் வெற்றி குறிக்கப்படுகிறது.

ஒருநாளல்ல இரண்டு நாளல்ல பல நாட்கள் பலரோடு சென்று கேட்டாலும் முதல்நாள் போன்ற விருப்பத்துடன் மகிழ்ந்தளிக்கும் வள்ளல். ஆனால், இன்றுபோல இருப் பதை யெல்லாம் கோவிலுக்கெழுதி நாட்டை சோம்பேறிக் களமாக்கி ஓர்புறம் அறியாமையையும் வறுமையையும் வளர்க்கும் வள்ளல் அல்லன் அதிகமான். நாட்டின் உண்மையறிவை யுயர்த்தவே மொழியறிந்த புலவர்க்கு அளித்த உறுதியான அறம் அவனுடையது. சோலை சுனை அன்னசத்திரம் ஆலயம் அன்னயாவினும் புண்ணியங் கோடி, 'ஆங்கோர் ஏழைக் கெழுத்தறிவித்தல்' என்ற அறிவுப் பணிக்கே அளித்த கொடைப் பெருமை அன்று காப்பாற்றப்பட்டன.

" யாவி ராயினும் கூழைதார் கொண்டு
யாம்பொருது மென்றல் ஓம்புமின் "

என்ற அடிகள், அவன் வீரங்காத்த 'உரிமை' யாவராலும் அசைக்க முடியாதது என்பதனை அறிவிக்கின்றது.

இன்று உலகில் அமெரிக்காவை எடுத்துக்கொள்ளுங்கள். அதனிடம் இப்பண்புகளின் அடிப்படை யுண்மையைக் காண்கிறோம். ருஷியாவைவிடவும் ஆற்றல் படைத்து சென்ற போரில் வென்ற வெற்றியில் பெருமபங்கு அதனுடையதே. இன்றும் என்றும் இங்கிலாந்திற்கும் உலகிற்கும் உணவும் மற்றப் பொருளும் உதவும் நிலைமையும் உளமுங்கூட அதனிடமுண்டு. உணவுப் பொருளில் இன்று அது உலகிற்களிக்கும் உதவி போற்றத்தக்கதாகும். அந்நாட்டின் உரிமை என்றும் அசைக்க வொண்ணாதது என்பதற்குப் பொருளாதார, பூகோளச் சான்றுகள் போதியதுண்டு.

இன்றைய உலக அறிவின் உறைவிடமாயுள்ளது அமெரிக்கா. உலக அறிஞரிற் பலர் உயிர்த்து விளங்கியது அமெரிக்க மண்ணில்! இவற்றால் அதிகமானுக்கும் அமெரிக்காவுக்கும் எவ்வளவு நெருங்கிய பொருத்தம்! அதிகமானிடம் ஓர் நெல்லிக்கனியும், அமெரிக்காவிடம் ஓர் அணுக்குண்டும் கிடைத்தன.

அதிகமானிடம் கிடைத்த நெல்லிக்கனி நாட்டின் அறிவை வளர்க்கும் ஔவையாரிடம் அளிக்கப்பட்டது. அதுபோல அமெரிக்காவிடம் கிடைத்த அணுக்குண்டு, அமைதியைக் காக்கும் உலக அறிஞரிடம ஒபபடைக்கப் படுமா என்பதே கேள்வி.

அணுக்குண்டின் உண்மைகளை அறிவிக்க மாட்டோம் என்று அடாத பிடிவாதஞ் செய்தது பலநாட்கள். இன்று உண்மைகளை வெளியிடோம்; ஆனால் உலக அறிஞர் கொண்டதோர் குழுவிடம் (கமிட்டி) அதனை ஒப்படைப்போம் என்கிறது. இது கூடாது. அதிகமானைப்போல அறிஞருக்கே அதனை அளித்துவிடுங்கள். அவர்கள் அதனை எப்படியுஞ் செய்யட்டும் எனவே நாம் கூறுவது.

அதிகமானின் நெல்லிக்கனி நீண்டநாள் அழியாநிலை (உயிர் வாழ்க்கை) தருவது. மனமுவந்து அதனைத் தனக்கு வைத்துக்கொள்ளாமல் ஔவையாருக்களிக்கும் மனப்பான்மை அவனுக்கிருந்தது, அதுபோதும்!

தனக்கின்றி ஔவைக்களித்த காரணம்? தன் வலிமையும், நீதியும் நாட்டினை தான் உள்ளவரைதான் காக்கும். ஔவையின் அறிவு (நூல்கள) இன்னும் பல்லாண்டு வளருமானால் நாட்டிற்கே என்றும அழியாத காப்பாகும். தனி வலிமையைவிட, நாட்டின் பொது அறிவு வளர்வது எவ்வளவோ மேன்மையானது! இதனை எண்ணியே அதிகமான் ஔவையை நினைத்தான், அவனை மறந்தான். அமெரிக்காவும அமைதியை நினைக்க வேண்டும். தன்னை மறக்கவேண்டும். அதன் தனி வலிமையினும் உலக அமைதி யாவர்க்கும் ஏன், அதற்குங் கூட எவ்வளவோ ஏற்றந் தருமென்பதை யுணரவேண்டும்.

"பெருமலை விடரகத்து அருமிசைக் கொண்ட
சிறியிலை நெல்லித் தீங்கனி குறியாது"

என்கிறார். பெரியமலை பலமுறை முயன்றாலும் தவறுதலும் துன்பமும் ஏற்படும் மலைப் பிளவுகள்; அங்கோர் அருமையாகக் காண்கிறது நெல்லி மரம. அதன் உயரத்தே உள்ள ஒரே ஒரு கனி; அக்கனியின் அருமை இப்போது தெரிகிறதல்லவா? சிறிய இலையையுடைய நெல்லி. இதுவும் நுண்ணிய அணுவினால் ஆயகுண்டு எத்தனையோ ஆண்டுகள் முயன்றது, எத்தனையோ தோல்வி, கடைசியில் யாரோ ஒருவரால், சிலரால் அருமையாகக் கண்டுபிடிக்கப்பட்டது, அளப்பற்ற இன்னலைக் கடந்து கண்ட ஒளி. அதனைப் பொதுவாக்குவதென்றால் ஆவதா? சிறிது பெருந்தன்மை வேண்டும். இதுவரை உலகம அடையாததொன்று நமக்கு அருமையாகக் கிடைத்ததே என்று அகமகிழ்ந்தால் உலகமே அளப்பிலாத்துன்புறுமே!

"ஆதல் நின்னகத் தடக்கிச் சாதல் நீங்க எமக்கீத்தனையே" என உலகம் வாழ்த்த உதவிவிட வேண்டியது தான். தனக்காக அதனை வைத்துக்கொண்டால் எவ்வளவோ பேரும் புகழும் செல்வமும் வலிமையும் வளரும். பகைவரெல்லாம் அஞ்சுவர். யாவரும் தலைவணங்க வாழலாம். ஔவைக் களித்தமையால் நாட்டிற்களித்தான். அறிவு வளர்ந்தது. பல்லாண்டுகள் இவன் வாழ்ந்தால் இவன் வாளில் (அணுவில்) மடியும் எத்தனையோ உயிர்கள உய்ந்தன.

அந்த உலக அழிவை நீக்க, நம்பிக்கையில்லாமையால் வளரும் தகராறுகள வலுத்து வரப்போகும் போர்களைத் தவிர்க்க, அணுக்குண்டை அறிஞரிடம் தந்துவிட்டால் சாவினையாவது நீக்கலாமல்லவா? ஏன், பின்னர் அணுவினுல் எண்ணற்ற உலக நலன்களையும் ஆக்கலாமல்லவா?

அப்படி அளித்துவிடும் அறிவும் பெருந்தன்மையும தன்னலமறுப்பும் தலைநிமிருமானுல் "நீலமணி மிடற்ருருவன்போல மன்னுக பெரும நீயே" என்ற அதிகமானுக்குக் கிடைத்த வாழ்த்து அமெரிக்காவுக்கும அளிக்கப்பெறும.

அழிக்கும் நஞ்சும், ஆக்கும் அமிழ்தமும் கடலில் எழுந்தன. நஞ்சைத் தான் உண்டு அமிர்தத்தைப் பிறர்க்களித்தான் சிவபெருமான். அந்தப் பரந்த மனப்பான்மை, அழிக்கும் நஞ்சையுண்டும் அழியா நிலையினை யளித்தது.

இன்று அணுக்குண்டின் ஆக்கும் ஆற்றல் வளர வேண்டும். அழிக்கும் ஆற்றல் மறையவேண்டும். அதற்கு அதனைத் தன்னிடமே வைத்திருத்தல் ஆகாது. உலகப் பொதுப் பாதுகாப்புக் கழகத்தினிடம் ஒப்படைக்க வேண்டும். அன்று ஆக்கும் அமிழ்தத்தைத் தன்னிடமே வைத்திருந்தால் உலகம் என்ன ஆயிருக்கும்? நஞ்சு உலகினையே நாசமாக்கியிருக்குமே! அந்நிலை வருமானுல் உலகிற்கமைதி. அமெரிக்காவும் முன்னையினும் மிகுந்த சீரும் பேரும் சிறக்

கும். நிலைத்த புகழை நாட்டும். அணுக்குண்டின் உண்மைகளை அறிவித்து அதனைப் பொதுவாக்கினாலேயே உண்மையான அமைதியும ஆக்கமும் நிலைபெறும். இல்லையேல், போரும், தகராறும் புகையும்போது, அமெரிக்காவின ஆணவமே வெற்றிபெறும். பின் உலகில் அமைதி சமைவது அருமைதான.

'கண்டத்தே நஞ்சை நிறுத்திய சிவன்' என்பதுடன் 'பால்புரை பிறைநுதல் பொலிந்த சென்னி' யுடையன் என்கிறார் புலவர். தண்மையும் தூய்மையும விளங்கும் பிறையணிந்த முடியினையுடைய சிவபெருமான் என்பதில் ஓர் அருமையான உண்மை குறிக்கப்படுகிறது. அழிக்கும் நஞ்சை நெஞ்சில் அடக்காதிருப்பின அது, தனக்கும் அல்லல் விளைத்திருக்குமல்லவா? அப்போது தூய்மையும் தண்மையும் தொலைந்திருக்குமல்லவா? அதனை அடக்கி அமிழ்தத்தை யளித்தால் 'தூய்மையும தண்மையும' பொலிகின்றது. புகழாலும் அறிவாலும் செல்வத்தாலும் இன்று அமெரிக்கா தூய்மையும், உலகின்முன் தண்மையும் பெற்று விளங்குகிறது. அப்பொலிவு நிலைக்க வேண்டுமானால், அணுக்குண்டின் உண்மையை வெளியிட்டு அதன் அழிக்கும் ஆற்றல் மறைந்து, ஆக்கும் ஆற்றல் பரவும்படி செய்தல் வேண்டும். அன்று அமெரிக்காவின் தலைமை உலகிற்குத் தண்மையும் தூய்மையும் அளிக்கும் சிவபெருமானாக வாழ்த்தப்படும.

இங்ஙனம் தனக்குமட்டில் சிறிது காலம் ஆக்கத்தையும் பிறர்க்கு அழிவையும் தரும் யாவற்றையும் உலகம் பொதுவுடைமையாக்கிப் பிறரெல்லாம் நலமடைய, தானும் அவ்வின்பத்தை யடையும் நற்பேற்றினைப் பெறும் உலகம் என்று வரும்?

அழிவைத்தரும் படைகளையெல்லாம், தொழிற்சாலைகளையெல்லாம் ஆன்றோர்க்கு உலக அரசிற்கு அடைக்

கலப் பொருளாக்க வேண்டும். தன் வாழ்க்கைக்குப் போக, குவியும் பொருளை-அது மலிந்து உலகப்போரை உண்டாக்கும் பொருளை-மக்களுக்கு அளித்துவிட வேண்டும்; கல்வியால் வளரும் அறிவுப பணியில் அளித்துவிட வேண்டும்.

தனது தனி வலிமையினும், மக்கள் எல்லோருடைய அறிவே முதன்மையும் மேமபாடும் ஆவது எனக் கருதிஞன் அதிகமான். தனது தனி வலிமையினும உலக மக்களின் அமைதியையே முதன்மையாகக் கருதவேண்டும் அமெரிக்கா. உலக மக்கள யாவரும ஓர் ஆட்சியின் கீழ்ப் பட்ட 'உலகம்' என்ற நாட்டின் குடிகள். அதன் அரசாங்கத்திற் பல உறுப்புக்களுைம தலைவர்களுமே ஒவ்வொரு உலக நாடும் அதன் முதன் மந்திரி (அ) தலைவரும்.

அப்போது அமெரிக்காவும் அதன் பிரிவேயல்லவா? இந்த உள்ளம் பிறந்துவிடுமானல் அதிகமானின் பரந்த எண்ணம் தானே வரும். எங்கும அமைதியும் அறிவும அழகுறும.

அமெரிக்காவின் அணுகுண்டு அதிகமானின் நெல்லிக் கனியாகும். அதிகமானிடம் விளங்கிய 'ஆண்டவனின் தூய்மையும தண்மையும' அமெரிக்காவிடம் நிலைக்கும்.

" அணுக்குண்டின் உண்மை அனைவர்க்கும் தெரியப்
பணங்கொண்டு மூளும் பாழும்போர் மாயும் "

# அறிவும் நீதியும்

புறநானூற்றிற் பெரும் பாலான பாடல்கள், புலவனை அரசன் தன்னிடமுள்ள வெல்லாங் கொடுத்துப் பெருமைப் படுத்துவதாகவும், அரசன் வெற்றி வீரம் இவற்றைப் புலவன் புகழ்ந்துரைப்பதாகவுமே உள்ளன. இருவரும் ஒருவரை யொருவர் மிகவிழைந்து ஒன்றுபட்டோரெனக் காண்கின்றனர். அன்பினால் இணைந்தும் ஆர்வமுற்றும் வாழும் இவர்கள் வாழ்விலிருந்து அந்நாட்டிற் கேற்படும் நன்மையாது? நாம் அறிவது யாது? ஆம், அவர்கள் ஒருவரை மற்றவர் கூடி வாழ்த்தி மகிழும் அக்காட்சி, அறிவும் நீதியும் அல்லது கலையும் காவலும் இணைந்திலங்குமோர் நற்காட்சியாக அமைகிறதெனலாம்.

புலவர் என்றாலே அறிவுடையோர் எனக் குறிக்கும். புலன்களின் வழியுயரும் அறிவே புலம் எனவும் அதிலிருந்தே புலவர் என்ற சொல் அமைந்தது எனவும் கூறுவதுண்டு. 'புலவர் பாடாதுவரைக என் நிலவரை' என அரசன் தன் நாட்டு மொழி யறிஞனைக் கூறுகிறான். ஒரு புலவன் அரசனை, 'வேந்தனும் அல்லவை செய்யான் காக்கும்' என அவனை தீமையில்லா செம்மையே நாட்டியொழுகும் 'நீதி'யை யுடையவன் எனப் புகழ்கிறான். இவற்றான் புலவன் அறிவே வடிவானவனென்றும், அரசன் நீதியே வடிவானவனென்றும் அன்று கருதினரென்பதனை யறிகிறோம். அப்பொழுது ஏன் இதனை 'அறிவும் நீதியும்' பிணைந்த காட்சி யெனக் கூறலாகாது?

அன்றைய புலவன் இன்று போல, வெறும் உரை நடை யெழுதும் வன்மை யொன்றே அன்றி அதுவுமின்றியோ வாழ்ந்து புலவனாக முடியாது. அவன் பாவலனாக (கவிஞனாக) வேண்டும். பாணர் விறலி யென்றாலே இசை, நாடகக் கலைவளர்ப்போர் என்பது பொருள். பண்ணை வளர்க்கும் சாதி பாண் (பாணர்) சாதியாகிறது. திறம்பட ஆடுவோராகையாலே விறலியர் (திறமையுடையோர்) ஆகின்றனர். இப்படி கவிதை, இசை, நாடகம் ஆயகலைகளாகவே அன்றைய அரசன் வளர்த்த புலவர் விளங்குகின்றனர். அரசன் அளிக்காமையால் 'பெரிதாலத்தை யெண் கடும்பின திடும்பை, இன்னே விடுமதி பரிசில்' எனத் தன வாழ்வில் வறுமை மிகுந்ததைக் கூறித், தமது கலைவளராது தளர்ந்து கிடக்கும் நிலையினைக் கூறுகிறான். இதனால் அரசன் புலவரை அளித்துக் காக்கவே இருக்கிறான். பின் ஏன் இதனைக் 'கலையும் காவலும்' இணைந்த காட்சியாயும் எழுதலாகாது? புலவரும் அரசரும் பிரியாத இந்நிலை விழைந்து காணும் இக்காட்சி, என்ன உண்மையை உணர்த்துகின்றது?

ஒரே குறிக்கோளுடன் வாழ்வை நடத்தும் இருவர் விழைந்து நட்பு கொள்வது இயற்கைதானே? பாதுகாப்பு மந்திரியும், சட்ட மந்திரியும் ஒத்து ஓர் நாட்டை நடத்தாவிடில் அந்நாடு என்னவாகும்? நாட்டின் அமைதி, இன்பம் நாகரீகம் இவை உயர்வதே குறியாக்கொண்டு வாழும் அறிவும் நீதியும் இணைந்து நட்பாவதில் வியப்பென்ன? அறிவு (புலவன்) நீதி (அரசன்) இவற்றின் குறிக்கோள் தான் வேறு யாது?

இன்னும், ஒரு துறையில் விருப்பத்துடன் உழைக்கும் இருவர் ஒன்றுபடலும் இயற்கைதானே. நம் நாட்டுக் கல்வி மந்திரி யிருக்கிறார். அவர் தமிழ் அறிஞரிடம் நட்புக் கொண்டால் அதில் விந்தை யில்லையே! ஆனால், இன்று

போல தம்மொழி தெரியாது ஆங்கிலம் படித்துவிட்டுத் தம் நாட்டை ஆளும் கேலிக்கூத்து அன்றில்லை, இருக்கவும் விடமாட்டார்கள். அரசர்களும் பெரும் புலவராக விளங்கியுள்ளனர். ஆதலின் அந்நாட்டு மொழியிற் சிறந்த அறிஞரை (புலவரை) அவன் விழைந்து நட்புகொண்டான். ஒரு நாட்டின் மொழிதானே உண்மையாக மக்களை மனிதராகவும் அறிவுடையோராகவும் ஆக்குவது. அரசன் மொழியில் போதிய தேர்ச்சியில்லாதிருந்தால் அந்நாடு எப்படி உருப்படும்?

மற்றும், அரசன் புகழை விரும்பினான். இசைபடவாழ்வதல்லது புகழொடு தோன்றுவதல்லது. மனிதனுக்கு வேறு கடமையையும் பெருமையும யாவை? புகழை யாரிடம் பெறுவது? தக்காரென்பதும் தகா ரென்பதும் சிறியோராலா மதிக்கப்படுவது; அறிவிற் பெரியோரால் (மிகை மக்களால்) அல்லவா மதிக்கப்படவேண்டும். அறிவிற் பெரியோன் யாவன்? அந்நாட்டு மொழியில் அறிஞன் தானே அதற்குத் தக்கோனாக முடியும்? அதனாற்றான் அரசன் புலவனை விழைகிறான். புலவன் அரசனிடம் ஏன் செல்கிறான்.? அறிவைப் பரப்பவே வாழ்கிறான் புலவன். வாழ்வு நடக்க வேண்டுமே, பொருள் வேண்டாமா? அறிவை வளர்ப்பதே கடமையாகவுள்ள தன்னைக் காப்பது யார் கடன்? பொது மக்களால் எத்தனை பேரைக் காக்கவியலும்? அன்றி பிச்சை யேற்பதா? நாட்டின் அரசன் (அரசு) தான் அதற்குப் பொறுப்பாளி அவனாலேயே முடியும் எனக் காண்கிறான்.

உரிமையுடன் அவனை நாடி உதவிபெறுகிறான். புறநானூற்றுக்காலத்தே வாழ்ந்த அரிஸ்டாடில் என்ற கிரேக்கப்பேரறிஞனும் 'ஓர் நாட்டின் கல்வி முழுதும் அரசாங்கத்தின் பொறுப்பில்தான் வளரவேண்டும்' என்கிறான். இன்றும் அப்படித்தானே, 'கல்வி முழுதும் கலைக்கழகங்

கள் முழுதும் அரசாங்கத்தின் கீழ் நேரே கொண்டுவரப் படவேண்டும்' என்கிறோம். இதைத்தான் அன்றைய புலவன் அரசனை அணுகுவதன் வழியே வெளிப்படுத்து கிறான். நாட்டின் கலையை வளர்த்தல் அரசன் கடமையும் உரிமையுமல்லவா? இங்ஙனம் புகழும் பொருளும் போற் றித் தழுவி வளர்ந்த காட்சியையும் அங்குக் காண்கிறோம்.

அறிவும் நீதியும் அகற்ற முடியாத பிணைப்புடையன. ஒன்றின்றி மற்றொன்று உயராது. பிசிராந்தையார் கூறு கையில், தனது நாட்டில் நீதியுடைய அரசனும், ஆன்றவிந் தடங்கிய சான்றோராய அறிஞரும் வாழ்வதாலேயே தனக் குக் கவலை யென்பதே தெரியாது என்கிறார். இதனால் மக்கள் மகிழ்ச்சிமாறாது வாழ, நீதிமட்டும் போதாது; அறி வும் அதனுடன் இணையவேண்டும் எனவும், நீதியுள்ள விடத்தேதான் அறிவும் வாழும் எனவும் அவை இணை பிரியாத் தொடர்புடையன வெனவும் தெளிகிறோம். ஆம், 'தக்க இன்ன தகாத இன்னவென்று ஒக்க அறிதலே அறிவு' எனக் கம்பரும், 'தீதொரீஇ நன்றின் பாலுய்ப்ப தறிவு' என வள்ளுவரும் கூறும்போதும் அங்கு தகாத நீங்கிய தக்கதும், தீதொரீஇய நன்மையும், 'நீதி' யை யல் லவா குறிக்கின்றன. அரசன் கடமையைக் கூறும்போதும் வள்ளுவர், 'அறனிழுக்கா தல்லவை நீக்கி' எனக் குறிக் கையில் அவனது நீதியுடன், அல்லவை நீக்கியறனைக் காக் கும் அறிவைப் பிணைப்பதைக் காண்கிறோம். இங்ஙனம் புறநானூற்று நாகரீகத்தில் அரசும் அறிவும் கலந்து நாட்டை நடத்தும் காட்சியே பெரிதும் பெருமை தருவ தாகும். பிளேட்டோ தம் அரசியலில், 'ஞானியே ஓர் நாட் டின் தலைவனாக அமையவேண்டும். அப்போதே நாடு தனது முழு உரிமையின் பத்தையடையும்' என்கிறார். அதைத்தான் இங்கு காண்கிறோம். அரசனே பேரறிஞனா யில்லாவிடினும் பேரறிஞராய புலவரைத் தலைமையாக மதித்து அவர் தம் அறிவுரை வழிநாட்டை நடத்துகிறான்

எத்தனையோ தமிழ் மன்னர் பேரறிஞராகத் (புலவர்) திகழ்ந்துள்ளனர். இங்கு அரசற்குப் புலவன் உயிராயும், ஒளியாயும் அமைகிறான்.

நெல்லும் உயிரன்றே எனும் பாடலில், 'மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்' என, அரசனே நாட்டிற்குயிர் என்று கூறும் புலவன், அரசனுக்கு அறிவு உயிர் என் பதனை உணர்த்துகிறான். உடலை உயிர் நடத்துகிறது. அவ்வுயிரையும் இறைவன் உயிர்க்குயிராய் நின்று நடத்து கிறான். இக்கொள்கையல்லவா, 'அரசனுக்கு அறிவே தலைவன்' என உணர்த்தும் அப்பாடல் குறிக் கின்றது. மற்றும் அப்பாடலில் 'வேன்மிகுதானை வேந் தர்க்குக் கடன்' எனக்குறிப்பிடுவதிலிருந்து ஒரு பெரிய உண்மை தெரிகின்றது. நீதியுடைய அரசன் வேல், வில் இவற்றால் நீதியை வாழ வைக்கமுடியாது. ஆனால் அந் நீதியின் உண்மையான உயிர் அறிவே என்பதல்லவா அச்சொற்களின் உள்ளம், இன்று அணுக்குண்டின் துணை யால் உலகில் நீதியை நிலைப்பிக்கச் சூழும் மேலை நாடுகள் இத்தமிழ் நாகரீத்தை யுணருமா?

ஏன், 'நெல்லும் நீரும் உயிரன்றே' யென்ற மற்ற முதலடி குறிப்பது யாது? அரசன் நாட்டிற்கு வேண்டிய உணவும் நீரும் உதவி விடலாம். அவை மட்டும் நாட்டின் 'மனிதத் தன்மையை'ச் செழிக்கச் செய்யா. ஆனால் அதனைச் செய்வது மனித அறிவு ஒன்றுதான். ஆதலின் மன்னன் 'தீங்கில்லாத' நீதி செலுத்தினால் மட்டும் போதாது. ஆனால் அந்த நீதியில் அறிவு செழிக்கவேண் டும். மக்கள் அரசனது நீதியின் கீழ் அறிவினை யுயிராக மதித்து வளர்த்துக்கொள்ள வேண்டும். இத்தகைய உயர்ந்த உண்மையல்லவா இவ்வரி கூறுவது!

இவ்வண்ணம், அறிவு (புலவன்) செய்யும் நலன் அளப்பற்றது. ஆகையாற்றான் அரசன் புலவனை ஆண்ட

வனாக மதித்து அவருடன் நீங்கா நட்புகொண்டு வேண்டு வதெல்லாம் கொடுத்துதவுகிறான்.

அவ்வறிவும் வெற்றறிவா? இசை, காவியம், நாடகம் இவற்ரோடுபட்ட கலையறிவாகும். கலையறிவே வாழ்க்கைக் குரியதாகும். வெறும் சர்க்கரையைத் தின்போமோ? ஏதே னும் ஒரு பொருளுடன் கலந்துதான் பயன்படுகிறது. அது போலவே அறிவு, இசை நடம் இவையாகிக் கலையறி வெனப் பேர் பெறும்.

பின்னரே 'உண்மை வாழ்க்கையை உயர்த்தும்' கரு மை, நீலம் இவற்றை வெறும் வண்ணமாகக் காண்பதினும் அவற்றை மேகத்திலும், கடலிலும் காணும்போது எவ் வளவு இன்பமும் பயனுமளிக்கின்றன. அதே போலத் தான் வெற்றறிவும் கலையறிவும். கலையறிவு மேகம், கடல் போல்வது. கலையறிவு நாட்டிற்கு எப்படிப் பயன்படும் அரசன் அதை ஏன் விழையவேண்டும்?

திருக்குறளை அதிலுள்ள 'வாய்மை' என்ற அதிகா ரத்தை அறிந்து திருந்துவது மிகப் பெரும்பாலோர்க்கு அதிலும் பொதுமக்கட்கு இயலாததாகும். ஆனல் வாய் மையை வேதநாயகம் பிள்ளைக் கீர்த்தனை யிசைப்பதிலோ அரிச்சந்திர நாடகத்தை இராசமாணிக்கம் நாடகத்தில் காண்பதிலோ எவ்வளவு இன்புற்று அதில் மனதைப் பதித்துவிடுகின்றனர் மக்கள். அத்தகைய கலையறிவே உண்மை யொழுக்கத்தொடுபட்ட பண்பை வளர்ப்பது. அப்பண்புதான் ஓர் நாட்டின் நாகரீகத்தை யுயர்த்துவ தன்றி அறிவு மட்டில் உயர்த்தாது. வள்ளுவர் கருத்தும் இதுதான். இன்று மேல்நாடுகள் விஞ்ஞான அறிவில் விஞ்சி நின்றாலும், 'தமிழர் உயிரினும் ஓம்பிய ஒழுக்கத்தில்' மேம்படாமையாற்றான் உலகில் மேலை நாகரீகம் வெறுத்தொதுக்கப்படுகின்றது. ஒழுக்கங் கெட்டவன் பேரறிஞனயினும் மனிதனாக முடியாது. அவ்வொழுக்

கத்தைக் கலையறிவே வளர்க்கவல்லது. மனிதர் எதனை வாழ்நாள் முழுதும் தேடியலைகிறார்களோ அவ் வின்பத் தினை அமைதியினை கலையே அளிக்கும் தன்மை நிறைந்த தாம். மணிவாசகப் பெருமான், ஆண்டவன் நிகழ்த்தும் நடனக் கலைபற்றி அன்பர் எனபூடுருகக் குனிக்கும், என் கிறார். இதில் கலை, மக்கள் உள்ளத்தையே யுருக்கி இன்ப வெள்ளம் பாய்ச்சும் நிலை கூறப்படுகிறது. அவரே இசை பற்றி, 'தீந் தமிழின் துறைவாய்ப் புகுந்தோ, அன்றி ஏழி சைச் சூழல்புக்கோ' இத்தனை மெலிந்திருக்கிறாய், எனத் தலைவியின் காதலின்பம் நுகர்ந்துவந்த தலைவனைப் பாங் கன் கேட்கு முகமாகத் திருக்கோவையாரிலே கூறலால், இசை, கேட்போர் ஆற்றலை யெல்லாம் தன் மயமாகவே ஆக்கிவிடலால், அவர் உள்ளம் வேறுவழி செல்ல விய லாமையும், அந்நிலையே ஒரு பேரமைதியைத் தருவது என் பதனையும் விளக்குகின்றது. மனிதனின் ஆற்றலெல்லாம் ஒரே நெறியில் ஒடுங்கும்போது தானே 'பேரமைதி.'

உலகில் கலைப்பேரறிஞர்களாய ஆனந்த குமாரசுவாமி, பெர்னட்ஷா முதலியோர் கலைபற்றி வெகுவாகப் புகழ்ந்து கூறுகின்றனர்.

கலைஞன் அழகைப் படைக்கும் ஆண்டவன் குழந்தை. கலையானது இரக்கம் நீதி இவைபற்றிய வொழுக்கம், தன் மைகள் இவற்றைச் சேர்க்கவேண்டும்.

கலையழகு இல்லாவிடத்து நீதிநெறியில்லை. நீதிநெறி யுள்ள விடத்தே கலை வளரும், நாகரிகம், வாழ்க்கை நலன் களைப் பெருக்குவதில் அல்ல, வாழ்க்கைப் பண்புகளை உரு வாக்குவதிலேயே விளக்கமுறும்.

ஆண்டவன் அறம், ஞானம் இவற்றின் வடிவானவன் அறந்தானே நீதி, ஆகலின் ஆண்டவனின் இரண்டு சிறப் பான தன்மைகளே உலகை நடத்துவதற்காகப் புலவஞ

கவும் அரசனாகவும் பிறக்கின்றன வெனலாம். ஆகலாற் றான் அவை இணையருயியல்பினவாய் உள்ளன. காதல னும் காதலியும் ஒருயிராம். ஏன் இரண்டு உருவமெடுத் தனர்? ஒரே உருவத்தில் இன்பம் நுகர முடியாது. சர்க்க ரையும் உண்போனும் ஒன்றாயிருந்தால் இன்பம் காண்பது யார். முடியவும் முடியாதல்லவா? இதனை அழகாக வெளிப் படுத்தும் மணிவாசகப் பெருமான் தமது திருக்கோவை யாரில்:

"ஆனந்தவெள்ளத்தழுந்துமோர் ஆருயிர் ஈருருக்கொண்டு
ஆனந்தவெள்ளத்திடைத் திளைத்தாலொக்கும்"

என இன்பங்கனியப் பாடுகிறார். இங்ஙனமே மக்கட்கு இன்பம் (அ) அமைதியெனும் ஒரே உயிருடைய ஈருடல் கள் எனலாம் 'அறிவு நீதி'யாய இவற்றின் இணைந்த உற வினை.

நன்று, அரசன் புலவனை விழைகிறான். புலவன் அர சனை ஏன் அத்தனை விரும்பவேண்டும். அறிவுக்கு அர சனும், கலைக்குக் காவலும் அரசனை (அரசு) யன்றி வேறு யார்? அந்தணர் நூலுக்கும் அறத்திற்கும் ஆதியாய் நின் றது மன்னவன் கோல் அல்லவா? இதனாற் கலையைக் காக்கும் கடன், அறமே வாழ்வாக்கொண்ட அறிவைப் போற்றி வளர்க்கும் ஆர்வம் அரசனாலேதான் முடியவேண் டும் என்பதே குறள்.

அறிவு, கலையென்னும் உயிருக்கு உடலாவது நீதியே (அரசன்) அதனாலேதான் புலவன் அரசனின் வீரம், கொடை இவற்றைப் புகழ்ந்துபாடி அவன் பெருமையை உலக முழுதும் பரப்புகிறான். இங்ஙனம் அறிவும் நீதியும் இணைந்து புறநானூற்றுத் தமிழகத்தை வாழ் வித்த தென்றல் அது இன்றைய உலகால் பின்பற்றத் தக்கதாகும்.

# வீரமும் கொடையும்

புறநானூற்றிற்கே சிறந்த தன்மைகள் புலவர்க்கமைந்த அறிவும், அரசர்க்கமைந்த நீதியும். அவருள் ஒவ்வொரு வரும் இரண்டு சிறப்பியல்புகளைப் பெற்று விளங்குகின்றனர். அவை அரசர்க்கு வீரமும் கொடையும்; புலவர்க்கு வறுமையும் செம்மையும். இக்கட்டுரை அரசனதியல்புகளை யாராயத் தலைப்படுகின்றது.

அறிவும் நீதியும்போல இவையும் அகற்றமுடியாத இணைப்பும் உறவுமுடையன. ஆண்டவன் கையில் உள்ள சக்கரமும், சங்கும் எவற்றைக் குறிக்கின்றன? பகைவர்களை அழிக்கும் அவனது வீரத்திற்குச் சக்கரமும், அன்பரைத் தனது அருளைப் பெற்றுய்யுமாறு அறைகூவி யழைக்கும் கொடைத் தன்மைக்கு அவன் சங்கும் அடையாளங்களாம். புறநானூற்றில் அரசனைப் புகழும் பெரும்பாலான பாடல்கள் அவனது 'வீரமும் கொடையும்' பற்றியன. 'இவ்வேவீலியணிந்து மாலை சூட்டி' என்ற பாட்டில் ஔவையார் 'பகைவர்க் குத்தி கோடுநுதி சிதைந்து கொற்றுறைக் குற்றில மாதோ' என்பதால் அதிகமானின் வீரத்தையும், 'உண்டாயிற் பதங்கொடுத்து இல்லாயினுடன் உண்ணும் இல்லோர் ஒக்கற்றலைவன்' என்பதால் அவனது புலவர்க்கு வழங்கும கொடையையும் தெளிவுபடுத்துகிறார்.

'ஊர்க்குறு மாக்கள் வெண்கோடு கழாலின்
நீர்த்துறை படியும் பெருங்களிறு போல
இனியை பெரும எமக்கே ; மற்றதன்

துன்னருங் கடாம் போல
இன்னுய் பெருமநின் ஒன்ளு தோர்க்கே'

என்ற செய்யுள் ஒரு யானையின் மூலம் எவ்வளவு அழகாக அரசனின் வீரம் கொடை இவற்றை விளம்புகின்றது. ஒரு யானை ஊர்க்குளத்தே குளிப்பாட்டப்படுகிறது. அதன் துதிக்கை, மத்தகம் இங்கெல்லாம் அதனைக் கழுவும் சிறு பிள்ளைகள் ஏறிவிளையாடுகிறார்கள். அதற்குக் கோபம் வருமா? அதுவும குலாவுகிறது, அதுபோன்றது அரச னின் இனிய கொடை. ஆனால் அவ் யானையே போர்க் களத்தில் பகைவரை என்ன செய்யும்! அதுவே வீரம்.

எவ்வளவு இனிமையாக இவ்வோவியம் பாடலாக அமைகிறது. புறநானூற்றிலேயே அழகிய சிறந்த பாடல் சிலவற்றுள இது சிறந்தது. இவ்விரு சான்றுகளிலும் வீரம் கொடை இவற்றின் உறவு எவ்வளவு ஒன்றியது! ஒரே நாணயத்தின் இருபக்கங்கள் போல் இல்லையா?

விளை நிலங்கட்கிடையே பெரிய கிணறு ஒன்று உள் ளது. இறைப்பும் ஊற்றும் ஏராளமாக உடையது. ஊற்று எதற்கு? இறைக்க. இறைக்க இறைக்க ஊற்று, ஒன்றுள் ஒன்று பிணைப்புண்டது. ஒன்று நின்றால் மற்றொன்று பாழாகும் அல்லது பயன்படாது. அதுபோலவே, வீரம் பண்டு எதற்குப் பயன்பட்டது? அதனால் விளைந்த செல்வத்தை யெல்லாம் வேண்டுவோர்க்குக் கொடுக்கவே. மேலும் கொடுக்கவேண்டும் என்ற வேட்கை, வீரத்தைத் தூண்டும். ஒன்றினையொன்று செயற்படுத்தும். தாளாற் றித் தந்த பொருளெல்லாம் தக்கார்க்கே வேளாண்மை செய்கிறான் அரசன். கொடையால் வாழும் புலவரும் வீரரும் சாக்காட்டை வரவேற்று, நாட்டிற்காகப் புரந்தார் கண்ணீர் மல்க உயிர்விடுகின்றனர், அரசன் போதியது கொடாவிட்டால் படைகள் எப்படி குறைகின்றன, பகைவரால் வேறு பிரிக்கப்படுகின்றன என்பதனைக்

குறளும் பரிமேலழகரும் பொருட்பாலில் விரிவாக விளக்கி யுள்ளனர், அதேபோல வீரத்திற்கழகு தந்நாடு தனக் களித்த கொடைக்கு நன்றியாகக் 'கூற்றுடன்று மேல் வரினும் கூடியெதிர்த்து' அதனைக் காப்பதேயாகும் என்கிருர்.

புறப்பொருள் வெண்பாமாலை என்ற அரசியல் நூலில் அரசன் தன் வீரத்தால் வென்ற செல்வத்தை யெல்லாம், ஒள்வாள் மலைந்தார்க்கும், ஒற்ருய்ந் துரைத்தார்க்கும், அங்கட்கிணையன துடியன் விறலி பாணர் இவர்க்குமே முதலில் வழங்குகிருன். உடனே அக்கொடை என்ன செய்கிறது? வீரனை அரசனுக்கு அப்படியே 'உயிர்ப்பலி' யீந்து விடுகிறது.

ஓர் அரசன் ஒளவையாரைப் பார்த்து 'உம் நாட்டில் வீரரும் உளரோ' என இறுமாப்புடன் கேட்கிருன். அதற்கு அமையார் சிரித்துக்கொண்டே, 'அடிக்கும் கோலை யஞ்சாது எதிர்த்துப்படமெடுக்கும் நாகம் போனற வீரரும் உளர்; ஊர்ப் பொதுமன்றில் தொங்கும் முழவு காற்றினுல் கிளையில் மோதும்போதெழும் ஓசையைப் போர்முரசென எண்ணிப் பூரித்துத் தோள்கொட்டும் அரசத் தலைவனும் உளன்' என அவன் மண்டையில் அடிக்கிருர். இங்ஙனம் புலவர் தம் அரசன் வீரத்தைப் போற்றிய புகழ்ச்சியே எத்தனையோ அரசரை அஞ்சி அடிபணிய வைத்துள்ளது. அரசன் போரிடுவதெல்லாம் தம்மைக் காக்கவே என்ருல் 'அவ் வீரத்தைப் புகழ்வதுதானே தம் வாழ்வு, அதனினும் சீரிய கடமைதான் என்ன? இன்னுமோர் உறுதியான சான்று. இந்த ஒளவைக்கு (பெண்ணுக்கா!) இவ்வளவு நுண்ணிய அறிவு எங்கிருந்துதான் வந்ததோ! ஒளவை பிறந்த நாடே!

ஒரு தச்சன் நாளைக்கு எட்டுத் தேரே செய்ய வல்லவன். அப்படிப்பட்டவன் ஆராய்ந்து அளவிட்டு ஒருநாளைக்கல்ல

ஒருமாதம் உழைத்து ஒரு கால் (அரைக்கால்) தான் செய்வதாக வைத்துக்கொண்டால், அக்கால் எவ்வளவு வலியும் விரைவுமுடையதாக விருக்கும்? அத்தனை வலிய வீரன் தன் அரசனும். என்ன செருக்கு இப் பெண் ணுக்கு! அதுவும் பகையரசன் எதிரில் கூறுவதென்றால்! இப்படிக் கூறினால், ஏன் அரசன் தன்னிற் சிறந்தது பிறி தொன்றின்மையின், தன் தலையையே எடுத்துக்கொள்ளு மாறு வாளைக் கையில் தரமாட்டான்? பொற்றாமரைப்பூ, தேர் யானை ஆடை அணிகலன் இவை எம்மாத்திரம்! என்ன இணைந்த இனிய வாழ்வு! வீரமும கொடையும் வளர்த்த தேவ வாழ்வல்லவா புறநானூற்று அரச வாழ்வு! ஆனால் இன்றைய அரசுகளிடம் கொடையெங்கே வீரம் எங்கே? வீரம் இருந்தாலன்றோ அங்கு கொடையிருக்கும்! பகைவன் படுத்துறங்கும்போது குண்டு. குழந்தைகள் மேல் குண்டு. முன்னறிவிப்பில்லாமலே குண்டு! என்ன வீரம்! என்னவீரம்! கொடை பற்றிச் சொல்ல வேண் டுமா? அன்று தனது போரில்கலந்த எல்லா வீரர்க்கும் கொடை. இன்றுதான் தன்னலம், தந்நிறம், தனதுநாடு என்ற பிரிவு. போரில் தம்மைப்போலவே உயிர்கொடுத்த இந்தியாவுக்கு உணவு பின்னர்தான். ஐரோப்பாவுக்கு முன், பகையாய ஜப்பானுக்கு முன், ஏன், அடிமையாக்கிச் சுரண்டி அழிக்க வேண்டுமே அதற்காக!

அதனைப் பெறுவோர்க்குப் போதிய அளவு தருவது தானே கொடை. பிறரிடம் கேட்காமல் இருக்குமளவு வேண்டும். இன்று வென்ற நாட்டு வீரர்க்கும் அவரை யளித்த நாட்டிற்கும் (குடும்பங்கள்) போதிய உணவு உழைப்பு ஊதியம் இவையுண்டா? வென்றாயிற்று, இனிக் கவலையில்லை யல்லவா? வீரம் இருந்தால் அங்கு கொடையு மிருக்கும். அங்குதான் கோழைத்தன மிருக்கிறதே, தன்னலந்தான் (தன் நிறம், நாடு, சாதி) தண்டவமாடும்! கோழைத்தனத்திற்கு மறுபக்கம் தன்னலந்தானே!

உண்மையான அரசன் மனித வாழ்வு வாழவேண்டு மென விழைகிறான். மக்களையும் அந்நெறி நடத்த முந்து கிறான். வள்ளுவர் கூறிய மனித வாழ்வு 'புகழ் வாழ்வு' தானே. அப்புகழும் 'இரப்பார்க்கொன் றீவார் மேல் நிற்கும்' எனவும் படிக்கிறான். ஆகவே கொடுத்தலையே குறியாக் கொள்கிறான். அக்கொடைக்கு வேண்டும் செல் வத்தைப் போரில் கொள்வது கோழைத்தனமல்ல; வீரமே யென வுணர்கிறான். தன்னலமிருந்தால் அல்லவோ உயிருக் கஞ்சிக் கோழைத்தனத்தால் (நடுவுதவறி) பொருளீட்டு வான். கொடுப்பது தவிர, உயிரைக் காப்பதால் மட்டும மனிதவாழ்வு நிறையாது எனத் தெளிகிறான். உயிரைக் கொடுத்தும் (போரில்) கொடையை மேற்கொள்ளுகிறான். அங்குதான் வீரம் பிறக்கிறது. பிறர்க்கெனப் போர்செய் கிறேனென்றால் அங்கு அச்சமேது? அச்சமில்லையேல் அது வீரந்தானே!

இன்று இந்தியா எத்தகைய வீரத்தை உலகிற் குணர்த்துகின்றது? வாள்கொண்டு, எத்தனை பேரை மடிக்கிறானோ அவ்வளவும் வீரத்திறகு மேன்மை கூறும் அவ் வீரத்தையோ, அல்ல, அவ் வீரமும, போரும் உலகிற்கு அலுத்துவிட்டன. இனி உலகால் அதனை நடத்த முயன்றாலும் முடியாது. போரைத் தவிர்க்க உலகம் 'நீரின் கீழ் இருப்பவன் போல'த் திணறி முயல்கின்றது. அன்பினை உணருநாள் வந்தது. 'பீடு முற்றிய கருணையின் வீரர்' என்று எந்த 'அருளை' உண்மையான வீரமெனச் சேக்கிழார் கூறினாரோ அவ்வன்பே (அஹிம்ஸை) உண்மை வீரமென, அதனைக்கொண்ட அஹிம்ஸைப் போர் தொடங்கிவிட்டது. உலகத்தையும் அது கவர்ந்துவிட்டது. அசோகன் 2000 ஆண்டுகட்கு முன் காட்டிய வழியை இன்று காந்திஜி கண்டுள்ளார். அவ்வீரரே இன்று நம் நாட்டுத் தேசியத்தொண்டர். அவர்களாலேயே நம் சுதந் திரம் இத்தனை கனிந்த நிலைக்கு வந்துள்ளது. இனியும்

நாட்டையுயர்த்த, காக்க அவர்களே பெரிதும் பயன்படுவர்; பெருகுவர். அவர்களுக்குக் கொடைவேண்டும். இல்லையேல் அவர் வீரம் வளராது. தொண்டரைக்காக்கும பொறுபபை மக்களும், அரசாங்கமும் மேற்கொளளவேண்டும். அவர்கள் வாழ்க்கைக்குப் போதியன அளித்தல் அரசின் கடன். நாட்டிற்கே தம்மையளித்துவிடல் அவர்கள் கடன்; வீரம் தம் செல்வம் வாழ்நாள் வலிமை அறிவு இவற்றையெல் லாம் பிறர்க்கே அளிப்பதெனறல் அது பெரிய வீர மல்லவா? கருமி, தன்னலமுடையோன் ஒரு காசு பிறர்க் குக் கொடுப்பானே! அப்படியானல் அவன் உயிரை எப்படிக் கொடுப்பான்?

நீதியின் வடிவல்லவா அரசன். அந்நீதியைக் காப்பது தானே அவன் உயிர்க்கடன். அதற்கென நீதியை அழிக்க முற்படும் எதிரியைப் போரில் அழிக்கிறன் அல்லது தான் அழிகிறன். இதுதானே வீரம். நீதியைப்பற்றிக் கவலை யில்லாதவனுக்கு வீரம் ஏன்? அது தேவையுமில்லை, இன்றைய அரசுகள் நீதிபற்றிக் கவலவில்லை. ஆகலின் வீரமுமில்லை. நடந்த போரில் எச்செயல் உண்மை வீர முடையது? அரசநீதி மக்கள் அனைவர்க்கும் உணவும் வாழ்க்கை நலமும் தந்து பசி பகையின்றிக் காப்பதுதானே! அப்போது தன்னைப்பற்றிய கவலை ஆங்கில்லை. தன்னை நினைத்தால் நீதியழியுமே! ஆகலின் தன்னிடமுள்ளதை யெல்லாம் அரசன் நாட்டிற்களிக்கிறன். பசியை நீக்கக் கொடையும், பகையை நீக்க வீரமுங்கொண்டு ஆளும் ஆட்சியன்றே அமைதியான இன்பமான உரிமையாட்சி. அதுவன்றே அழகமைந்த நாடு. அதுதானே நீதி. முன் கூறிய அரசன் நீதி வடிவானவன். அந்த நீதியின் செயல் களே வீரம்; கொடை. ஆண்டவன் நீதி வடிவினன் என முற்கூறினேம். 'நீதியால் நினைப்புளானை' என்கிறர் அப்பர். அவனும் வீரம் கொடை யிவற்ருல் நீதியை உயர்த்துகிறன். அரசனும் அப்படித்தான். அதனற்றன்

ஆண்டவன் உயிராய் உலகை நடத்துமாறு போல, அரச னும் நாட்டிற்குயிராகி மக்களை நடத்துகிறான்!

அத்தகைய நீதியிற்றோன்றிய வீரமும் கொடையும் அரசனின் இரு கண்களாக அணி செய்தன. கண்களென அரசன் அவற்றைக் காத்தான். அதனால் நாடும் வாழ்ந்தது. அரசனின் புகழுக்கே, உயிருக்கே ஒளிதரும் சிறப்பியல்பு கள் அவை. அவையன்றோ தமிழர் வாழ்வை ஒரு சிறந்த நாகரிகம்படைத்ததாக்கின. பண்டை நாகரிக நாடுகளுடன் வைத்தெண்ணச் செய்தன. இன்றும் அழியாப் புகழை அளித்துப் பழம்பெருமையை விளக்கிப் புறநானூறாக வாழ்கின்றன!



# ஒப்புரவின் எல்லை

இன்று 'தியாகம்' பேசப்படுகிறது. எங்கும் தியாகத்தின் சிகரங்கள் காணப்படுகின்றன. தமிழ் கூறும் தொண்டும், நாயன்மார் கூறும் பணியும், வள்ளுவர் கூறும் ஒப்புரவுமே 'இன்றைய தியாகம்'. வள்ளுவர் வகுத்த தவம் துறவு இவையே 'தியாகத்தின் சிகரங்கள்'. அவற்றை ஆராய்ந்தால் வாழ்ந்தால் தியாகத்தின் சிகரமேறலாம்; சிகரமாக வாழலாம்.

ஒப்புரவென்பது ஓர் ஆரஞ்சு மிட்டாயா என்ன? வாயிற் போட்டுச் சுவைத்து மகிழ்ந்து மறந்து போக! அது அமிழ்தம். தேவர்களுக்குத் (உண்மை மனிதர்) தான் கிடைக்கும், அவரே அதனைப்பெற வல்லவர். ஒப்புரவற்றவன் உண்மை மனிதனாக மதிக்கப்படமாட்டான். உண்மை மனிதரே ஒப்புரவாற்ற வல்லவர். ஆகலின் மனிதனின் முடிந்த நிலை; உண்மைநிலை - ஒப்புரவு.

ஒப்புரவென்றால் என்ன? அது வாழ்க்கை. அதனை வாழ இவ்வுடல் நம் பொருள் இவை தடையாமாயின் அதாவது இவற்றை விற்று விட்டும் உண்மை மனிதத் தன்மையைக் காப்பாற்றிக்கொள்ள வேண்டிய நிலையுறுமானால் சிறிதும் தயங்காமல் தன் உடலை நீத்தும் (இறந்தும்), தன் செல்வத்தை விற்றும் உண்மை மனிதனாய் வாழ்தலே 'ஒப்புரவாம்'. தமிழ் வள்ளல்கள் வாழ்வு, இவ்வொப்புரவின் இரு நிலைகட்கும் எடுத்துக் காட்டுக்களாம்.

'ஒப்புரவி னல்வருங் கேடெனின் அஃதொருவன்
விற்றுக்கோட் டக்க துடைத்து'

என்ற குறளின் முடிந்த உண்மை அதுவேயன்றோ?

தமிழில், பொருட்கொடையின் வழியேதான் 'ஒப்புரவு' விளக்கப்படுகின்றது. அதனால், பிறர்க்குக் கொடுத்துதவுவதே 'ஒப்புரவு' எனக் கொள்ளலாகாது. வாழ்வில், மதம் அரசு சமூகம் கலை முதலிய பல துறைகளிலும் தமது செல்வம், நேரம், அறிவு, பண்பு, உயிர் இவையெல்லாவற்றையும் ஈடுபடுத்தி, நாட்டிற்கெனவே வாழ்வோர் எண்ணில்லாதவர் இருக்கின்றனரே அவரெல்லாம் 'ஒப்புரவில்லாதவர்' எனக் கூறிவிடலாமா? அவர்கள் யாவரும் ஒப்புரவாளரே. ஆதலாலேயே ஒப்புரவென்றால் வாழ்க்கை அல்லது கொள்கைக் குயிர்கொடுத்தல் என்கிறோம்.

ஒப்புரவில் அரைகுறை என்பதே இல்லை. எல்லாம் 'முழுவதும்' என்ற கருத்தில்தான். அரைகுறையும் முழுமையை நோக்கி முன்னேறினால் நன்றே. செல்வம், நேரம், அறிவு இவை முழுவதையும் பிறர்க்கு அளித்துவிடும்போதே உண்மையான ஒப்புரவு நிலைக்கிறது. ஏதோ ஒருபகுதி செல்வம், வாழ்வில் கொஞ்சநேரம் பிறர்க்காக வென்றால், அது பெரிதும் தன்னலமாகவேயிருக்கும் அல்லது தன்னலத்திற் சேர்ந்துவிடும்.

தக்கார்க்கு நாடு உயரும் நெறியில் ஒப்புரவு செய்யும் பொருட்டே மனிதன் முயற்சி செய்து சம்பாதிக்கவேண்டும் என்பதே வள்ளுவர் உள்ளம். தாளாற்றித் தந்த பொருளெல்லாம் எனும்போது 'எல்லாம்' என்பதில் அரைகுறைப்பேச்சு அறுத்தெறியப்படுகின்றதைக் காண்கிறோம். இருபது கோடி ரூபாயுள்ள ஒருவன் இரண்டு லக்ஷம் ரூபாய் கல்விக்குக் கொடுத்தானெனில் அது 'ஒப்புரவா' என்பதனை ஆராய்ந்தே காணவேண்டும். ஏன்? அதன்பின் ஐந்து லக்ஷ ரூபாய், 'தான் கொடையாளி'

என்ற புகழைக்கொண்டு பெருக்கிக்கொள்ளலாம் என்ற எண்ணம் ஒளித்துக்கொண்டிருந்தால்! இன்று உலகில் 'ஒப்புரவு' அப்படியும் உயர்ந்து வருதலைக் காண்கிறோமாகையாற்றான் அதனைக் கூறுகிறோம். 'ஆய்' என்ற வள்ளல் கொடுத்துக் கொடுத்துத் தனது அரண்மனை மகளிர் தாலியைத் தவிர மற்ற எல்லாவற்றையும் அழித்துவிட்டான் எனவே புறநானூறு பேசுகின்றது.

'மகளிர்தோள் அளவல்லதை நினதெனா இலைநீ
பெருமிதத்தையே'

எனவே அதிகமான் என்ற வள்ளல் போற்றப்படுகிறான், அவனுக்கென உள்ள சொத்து அவன் 'மனைவியின் தோள்' தானும். நாம் இன்று மதிக்கிறோமே 'அவன் பெண்டாட்டி கழுத்தில் 25 பவுன் இருக்கிறது' என்று. அதுகூட இல்லை அதிகமானுக்கு.

என்றும் நாட்டிற்கே நினைத்துக்கொண்டிருத்தல் உயர்வு. செய்வது பின்னராயினும் முதலில் எண்ணம் வேண்டும். சிலர் நாட்டிற்கெனப் பொருளைக் கொடுப்பர். ஆனால் ஒரு சில நேரத்தையும் செலவழிக்கமாட்டார். ஐயா! என்னைப் பணங் கேட்கிறீர்களா ஏதேனும் கொடுத்துவிடுகிறேன் மற்றபடி ஏதும் என்னால் முடியாது என்னும் செல்வச் சான்றோர் இந்நாட்டில் சால உளர். ஏன் அவர்கள் அப்படிக் கூறுகின்றனர்? பணத்தைக் கொடுத்துவிட்டால் புகழுக்குப் புகழ். அதற்கென உழைக்க வேண்டிய நேரத்தில் அதனினும் இருபங்கு செல்வமும் சேர்த்துவிடலாம். நம்முடைய உழைப்பை, வந்து கொடை கேட்ட தொண்டர் செய்துவிடுகின்றனர். தாமும் அப்பணியில் 'காலத்தைச் செலவழித்தால் உள்ளபொருளும் போய், பொருள் ஆக்கும் பொழுதும் போய்விடுகிறதல்லவா? ஆகவே, மேற்கூறிய ஒப்புரவையும் ஓர் வாணிபமாக வைத்துள்ளோர் பலர்.

இன்னும் பல அறிவாளிகள். அவர்கள் பெரியர். பொழுதெல்லாம் நாட்டின் உரிமைக்கும், உணர்ச்சிக்கும் மாறாக உழைப்பது; அரசியலில் பெரிய பெரிய அலுவல் (உத்யோகம்) பார்த்து வேண்டிய பொருளைத் தேடிக் கொண்டு, அப்பொழுதில் மக்கட்கு எதிராக எவ்வளவு, வேண்டுமோ அவ்வளவும் செய்வது. 50, 60 ஆண்டு (வயது ஆனபின், வேண்டிய பணம் திரட்டிக்கொண்டு தொண்டில் (தியாகத்தில்) புகுவது. முன்னரே நாட்டில் எப்படியோ அறிவாளியென மதிக்கப்பட்டவரல்லவா? அவர் பொது நலத்திற்கு வருகிறாரெனில் பழைய பணியாளர்க்கும் அளப்பற்ற விருப்பம்; அவர்க்கு வரவேற்பு. தம் கட்சியில் சேர்த்துக்கொள்வது. மாலைபோட்டுப் பேசச் சொல்வது தியாகச் சிகரமாக்கி, அவர் செத்ததும் படத்திறப்பு, சிலை நாட்டு வரையில் சென்றுவிடும். ஒன்றுந் தெரியாதவன் ஓயாமல் வாழ்நாள் முழுதும் உழைத்துக்கொண்டிருப் பான். அடக்கமாக அவன்செய்த தொண்டில் ஆரவாரமோ பிறர் புகழ்ச்சியோ ஒன்றுமிராது. அவன் உண்மைத் தொண்டனாகவிருக்கலாம். ஆனால் தகுதியற்றவரை ஏதோ பலரைவிடச் சில படித்துப் பட்டம்பெற்று மனப் பாடம் செய்துவிட்டான் என்பதற்காக, அவனைத் தூக்கி இப்படியெல்லாம் ஏத்தினால், இருப்பவனும் உணர்ச்சி கொண்டு அத்தகைய புகழை நாடி, தொண்டை மறந்து, புகழ் கிடைக்காமல் ஏங்கி முடிவில் தன்னலவாதியாகி விடுகிறான். இவ்வளவுக்கும் உண்மைத் தொண்டரிடையே ஒளிந்து வேலைசெய்யும் சில தன்னலவாதிகளே காரணம்.

'வீழ்நாட் படாஅமை நன்றாற்றின்' என்ற குறளை எண்ணிப்பாருங்கள். பணிசெய்யாத மணி கழியக்கூடாது. ஒவ்வோர் நாழியும் இழந்துபோகாமல் நாட்டிற்குழையுங் கள் என்றல்லவா ஓதுகின்றது? அதைவிட்டு ஓய்ந்த நேரத்தில் உப்புப்புளிக்காகும் என ஓடிவருவோரை எல்லாம் 'தியாகத்தின்' சிகரமாக்கினால் உலகில் 'தியாகம்'

என்பதற்குத் தன்னலம் என்ற பொருளைத்தவிர வேறுண்மை கிடைககாது! உலகில், அரசியல் மிதவாதக் கட்சியினரை யெல்லாம் ஆராய்ந்தால் இந்தப் பெரியோர் மந்தை மந்தையாக விருப்பதைக் காணலாம். 'அயர்விலர், அன்னமாட்சி அனையராகித் தமக்கென முயலா நோன்றாள், பிறர்க்கென முயலுநர் உண்மையானே' என ஓர் தமிழ் அரசன இயம்புகிறான். 'அயர்விலர்' என அவன் கூறியதைக் கருதினால், 'கடலுண் மாய்ந்த இளம்பெரு வழுதி' என்ற அத் தமிழன் வாழ்வில் எத்தனை நாள் தன்னலத்திற்காகக் கழிந்திருக்கும் என அறியலாமன்றோ?

பலர் நேரத்தையெல்லாம் நாட்டிற்கே செலவிடுவர். ஆனால் தமது மனித அறிவை மட்டும் மறந்து தன்னலத்திற்கே, தம் நலத்திற்கே பயன்படுத்துவர். அவரால் நாட்டிற்கு அளவிலா நலன்கள் ஏற்பட்டிருக்கலாம்; இல்லையென்னவில்லை. ஆனால் அறிவும் அதில் பதிந்தால்தான அறிவுடைய உலகைப் பயன்பெறச் செய்ய முடியும். இல்லையேல் தொண்டு 'போர்வை' யாய் விடும். ஐரோப்பிய நாடுகளுந்தான் இன்று பெரிய விஞ்ஞான அறிவு படைத்தவாய்க் கருதப்படுகின்றன. அது உலகிற்குத் தொண்டு செய்வதாய்க் கூறமுடியுமா? பொழுதை யெல்லாம் பிறநாட்டைச் சுரண்டுவதெப்படி யென்றே அறிவைத் துணைகொண்டு துருவித் துருவி ஆய்ந்து வந்ததால் தான் இன்று அறிவிருந்தும் அதனை மதிப்பாரில்லை. நெடுஞ்செழியன் என்ற பாண்டியன் பேரறிவாளி; பின்னைப் பேறு எவ்வளவு உலகில் உயர்ந்தது, அரிது எனப் பாடலெல்லாம் பாடும் புலமை யறிவு பொருந்தியவன். அவனே அறியாமல், ஊழ்வலியாலோ கோவலனைக் கொன்றான். தன் அறிவு அத்துடன் நாட்டின் நலனில் உலைவைத்து விட்டதாக உணர்ந்தான்; ஒப்புரவின் உயர்வில் நின்ற அவன் உடனே இவ்வுலகினை விட்டு ஓடிவிட்டான். என்று எனது அறிவு மக்கட்போக்குக்கு இன்னலை

யெண்ணியதோ, அன்றே யான் இங்கு வாழ்ந்து பயனில்லை எனக்கருதிய அவனன்றோ ஒப்புரவின் முடியாக விளங்கத் தக்கவன்? வீரரென்று பேசப்படுவோருட் பலர் பேரறிவாளிகளாக விருக்கலாம். ஆனால் தனி வாழ்விலோ, பொதுவாழ்விலோ பண்பு குறைந்தவராக ஒழுக்கங் குன்றியவராக விருக்கலாம். கைக்கூலி (லஞ்சம்), காமப் பித்து, தற்புகழ்ச்சி, நடுநிலை மீறல் (பக்ஷபாதம்), வாணிகத்தில் மிக்க லாபம் இவை இன்று அறிவாளிகளில் தொண்டர் (தேசபக்தர்) பலருள் மறைந்து கிடக்கின்றன. ஒரு மனிதனின தனிவாழ்விலும் சிறு செயலிலும் நேர்மையாய் நடப்பதன் வழியேதான் அவன் நாட்டைப் பண்படுத்த முடியும். அவ்வொழுக்கமே உயிர் எனத் தமிழ் போற்றுகின்றது.

'பகையுள்ளும் பண்புள பாடறிவார் மாட்டு' என்ற குறள் என்ன மொழிகின்றது? பகைவனிடமும் தன் பண்பு கெடாமல் நடக்கவேண்டும். அப்படிப்பட்டவன் தன் வாழ்வில் மறைவாக எப்படி மாண்பை மீறுவான்? 'ஓதியுணர்தலும் பிறர்க்குரைத்தலும்' உயர்ந்த அறிவே; ஆனால் அதற்குத்தக, தான் அடங்குதலே பண்பு. அங்ஙனம் நடவாதவன் பெரும் பேதையெனப் பொதுமறை பேசுகின்றது. அப்பேதை நாட்டிற்கு என்ன செய்யமுடியும்? பேரறிவாளிகள் பலர் தமது நாகரீகம், பண்பு யாது என்றறியாமலே 'அறிவாளிகளாய்' வாழ்த்தப்படுகின்றனர், தமது நாகரீகத்தை மறந்தோ மறைத்தோ மடித்தோ பிற நாகரீகத்தைப் பற்றும் இவர்கள் ஒப்புரவால் நாடு உண்மைப் பண்பை உணரமுடியுமா? பிற நாகரீகத்தின் அடிமைகள் என்றுந் தன்னலவாதிகளே.

ஒரு வள்ளல் 'பசிப்பிணி மருத்துவன்' என்றே அழைக்கப்படுகிறான். அவன் பண்பிற் சிறந்த பணியாளன். ஆகையினாற்றான் அவனுக்குப் பசி நீக்குதலாய 'பண்பே' பெயராக வழங்கப்பட்டது.

கடைசியாக உள்ளது உயிர். ஒப்புரவிற்காக நாமே உயிரை விட்டு விடல் கோழைத்தனம். விடவேண்டி நேருமாயின் 'அஞ்சாமல்' நிற்பதே ஒப்புரவு. தனது செல்வம், நேரம், அறிவு, பண்பு யாவற்றையும் பணியாக்கும் ஒருவனும் 'உயிரை' வெல்லமாகக் கருதுகிறான்; அஃதியல்பு. ஆனால் அதனில் வெல்பவனே உண்மைவீரன், வழிகாட்டி குறிக்கோள். ஆவி போனாலும் பெட்டிச் சாவி மட்டும் போகாமல் காப்போர் பல வீரர் உண்டு. அவர் உயிருக் கஞ்சார், அது பணவெறி; அவரைப் பற்றி இங்கு பேச்சில்லை. ஆனால், மிகுந்த சுமையைத் தாங்கினால் வளையாமல் முறியும் கற்றூணைப் போல, வாழ்வில் ஒப்புரவிற்கென இறக்க நேரிடின் அதனைப் புன்னகையுடன் வரவேற்போர் ஓர் குமணன் ஓர் சாக்ரடீஸாகத்தான் இருக்க முடியும்.

அப்படி வீரத்துடன் அவன் சாவினை வரவேற்றால் அவன் செத்தவனல்லன்; வாழ்ந்தவன் அவனே. நம்மால் அப்படிச்செய்தல் இயலாதாகலாம். ஆனால் குறிக்கோளாகப் பற்றத்தக்க வரலாற்றினை அவன் எழுதிச் சென்றான் என்பதில் என்ன ஐயம்! எல்லோராலும் எளிதில் முடிவதொன்றைச் செய்வது புகழா? அதனால் அவனை 'உயர்ந்தவனுகத்தான்' எப்படி மதிக்க முடியும்?

'இழைத்த திகவாமைச் சாவாரை யாரே
பிழைத்த தொறுக்கிற் பவர்'

என்பதில் என்ன கூறுகிறது? 'வாழ்வில் இந்நாட்டை உயர்த்தவே தொண்டுசெய்வேன்' என இறங்கிவிட்டோம் இடையில் இறந்துவிட்டோம், தோல்வியா அல்ல, வெற்றி! வெற்றி!! ஏன்? உண்மையாக எண்ணினோமே பேசினோமே செயலுக்கு முந்தினோமே, அதுவே வாழ்க்கை. தொண்டனாய்ப் பேர்பெற்று, ஆனால் செயலில் ஆயிரங் கொடுமைகளைச் செய்வதினும, அடக்கமாக நாட்டிற்காவதை எண்ணி எண்ணி ஓர் நாழிகை இருப்பவனே உண்மையில் ஒப்புரவாளன்.

முற்கூறிய செல்வம், நேரம், அறிவு, பண்பு, உயிர் இவற்றைக்கொண்டு பணிசெய்வதில் ஒருவரிலும் ஒருவர் உயர்ந்தவரே; நல்லவரே. அவர் உள்ளம் பிறரையே உன்னுமானால் அவர் கடைசி நிலையினை அடைந்தோர் ஆவர். ஆனால் கடைசி நிலையிலுள்ளவரும் தன்னல நஞ்சு கலந்த உள்ளம் பெற்றாரானால் உடனே கீழே படிப்படியாக இறங்கிவிடுவார். முதலில் செல்வத்திற்றான் தொடங்க வேண்டும். அதனாலேயே கொடையின்வழித் தமிழில் 'ஒப்புரவு' உணர்த்தப்படுகிறது. 'உயிரில்' கொண்டு முடிக்கப்படுகிறது.

ஆகவே ஒப்புரவின் முடிந்த எல்லை (தியாகத்தின் சிகரம்) உயிர். அதாவது வாழ்வு முழுவதுமே 'ஒப்புரவாதல் வேண்டும் என்பதே அதன் கருத்தும். செல்வம் நேரம், அறிவு, பண்பு இவையெல்லாம் அதனில் ஈடுபட வேண்டுமெனில், இவற்றிற்கப்பால் வாழ்வென்பதொன்றேது?

மனித வாழ்வின் அறிவே, குறிக்கோளே ஒப்புரவு. எண்ணம் சொல் செயல் யாவும் ஒப்புரவு. இப்படி வாழ்பவன் 'வாழத்தான் முடியுமா' கனவாகவல்லவோ இருக்கிறதெனபர் சிலர். வாழலாம் வாழ்ந்துள்ளனர்; அதுவும், நம்மிலும் நானூறு மடங்கு மேலாக அமைதியுடன் இன்பத்துடன்.

'அல்லல் அருளாள் வார்க்கில்லை,' பாருங்கள் இந்த அறிவுலகமே சான்று!



# நனவாட்சி

அருளாட்சி பொருளாட்சி பற்றியெல்லாம் குறளைப் படிக்கையில் அறிகிறோம். ஆனால் அரசியலைப் பற்றிப் பல பேரறிஞர் உலகில் கனவாட்சி கண்டுள்ளனர். பலவகையான அரசியல் முறையைக் கண்டனர். குடியரசு, ஜனநாயகம், முடியரசு, பொதுவுடைமை யாவும் இக்கனவுகளைச் சேர்ந்தவையே. இவை இப்போது நனவாகிக்கொண்டு வருதலைக் காண்கிறோம். புறநானூற்றிற் காணப்படும் அரசியற் குறிப்புக்கள சில அரசனது தன்மைகளைக் குறிக்கும் முறையான சிறந்தொரு நனவாட்சியையே(நடக்கக்கூடிய) நமக்கு எடுத்துணர்த்துவனவாகும்.

" பொழுதெனவரைதி புறக்கொடுத்திறத்தி
மாறிவருதி மலைமறைந் தொளித்தி
அகலிருவிசும்பினும், பகல்விளங்குதியாற்
பல்கதிர் விரித்தே "

இவ்வரிகள் சூரியனை அரசனொடு ஒப்பிட்டு கதிரவனிடமுள்ள இக்குறைகள் அரசனிடம் இல்லை என்கின்றன. என்றும் உலகில் இருத்தலாகாத அதுவும் வருங்காலத்திற்கறவேயுதவாத அரசியற் குறைபாடுகளை இப்பாடல் போக்குகின்றது. பொழுதென வரைதி யென்பதில் அரசு, ஆட்சிக்கெனக் குறித்த காலத்தைக் கொள்ளாமல் எப்போதும் நாட்டு நலமே ஏக்கமாக இருக்க வேண்டும் எனக் குறிக்கப்படுகிறது. அமைச்சரும், அரசப் பெரும்பதவிப் பொறுப்பாளரும் குறித்த காலத்தேதான் தம் கடமைகளைக் கருதுவது, மற்ற நேரத்தே தம் தனி பொருள்,

தொழில் வளர்ச்சிகளைக் குறித்தலைவது போன்ற செயல்கள் ஆகா, என்றும் நாடே நினைவாக இருக்க வேண்டும். மற்ற அலுவலாளரும் முழு நேரத்தையும் நாட்டிற்காக்கும் படிப்போதிய பொருளும நலனும் அளிக்கவேண்டும். நாட்டுக் கடமைகளில் தம் கடமை ஆழ்ந்துவிட வேண்டும், அல்லது தாமே நிறைவேறும்படிச் செய்துவிட வேண்டும். விருந்தோமபுவான் நிலத்திற்கு, வித்து பிறரால் விதைபடுவதுபோல நாடே அலுவலர் நலன்களை யெல்லாம ஆக்கித் தந்துவிட வேண்டும்.

ஒரு நல்லாட்சியானது எதிர்க்கட்சிக்குப் புறங் கொடுத்து இறந்துவிடககூடாது. அவ்வளவு திறம்பட்ட கோட்பாடுடையதாக வேண்டும. பேருக்கு, பணத்திற்கு ஒரு கட்சியைப படைக்கலாகாது. நாட்டையாளும் கட்சி பிற கட்சிகளால் என்றும் தோற்கடிக்கப்படலாகாது. அது நாட்டிற்கிழிவாகும், நிலைத்த வாட்சியை நடுங்கவைக்கும். அன்று வரை உலகில் அலர்ந்த கொள்கைகளில் உயர்ந்த வலிய கொள்கையைத் தன் (அரசியலுக்கு) கட்சிக்கு உரியதாக்கவேண்டும். தேர்தல் காலத்தே கொடுத்த வாக்குறுதிகளை நிறைவேற்ற முடியாமல் நம்பிக்கையில்லாத் தீர்மானம் முதலியவற்ருல் தோற்றடங்கலாகாது. நிலைத்த மக்கள் ஆதரவையும் நெறியான செயல் முறையையும கோட்பாடுகளையும் உடையதாக வேண்டும் ஆளும் அரசு (கட்சி). இதனை 'மாறிவருதி' என்பது மிகவும் வறபுறுத்துவதாகும். தனது நிலையற்ற தன்மையால் எதிர்க் கட்சி பலவும் தன்னை அடிக்கடி ஏமாற்றவோ, தோற்கடிக்கவோ தக்க நிலையில் இருக்கக்கூடாது. நிலைத்த ஆட்சி (Stable Govt) என அடிக்கடி பேசப்படுவதெல்லாம இது பற்றியே யாம். எதிர்க்கட்சியையும் பெரியோர் கருத்துரிமையையும் மதியாமலும் ஆட்சி நிலை கெட்டுவிடுகின்றது. உயர்ந்த கொள்கையுடையதாயினும் செயலில், மறைமுக

மாகப் பிற்போக்குக் கொள்கையை நிலைப்பிக்க முயல்வதாலும், கட்சியின் நிலை ஆட்டங்காணத் தொடங்கிவிடுகின்றது.

அரசு விரிவடைவதிலுள்ள நீண்டகால பூகோளத் தன்மையான தடையொன்றை 'மலைமறைந் தொளித்தி' என்ற குறிப்பு எடுத்துக்காட்டுகின்றது. மேற்கு மலையில் மறைந்தால் கிழக்கே தோன்றுமென்பதனால் ஆட்சிக்கும் மலைகளும் தொடர்களும் மறுக்கும தடையாகின்றன, உலகில் நாடுகளின் எல்லைகள் மலைகளாகவும் ஆறுகளாகவும் இருப்பதைக் கண்டால் அவற்றிற்குமேல் பரவுவதில் அவை தடையாயிருந்தவெனத் தெரிகிறோம். சேரர் கிழக்கே பரவ முடியாமைக்கும சோழரும் பாண்டியரும் மேல்கரைக்குப் பரவ முடியாமைக்கும் தமிழகத்தின் மேற்குத்தொடர் மலைகளே காரணமெனலாம். பெரும்பாலான வட இந்திய வல்லரசுகள் தென்னாட்டிலும், ஆப்கானிஸ்தானத்தும், மத்திய விந்தியாவிலும் பரவாமைக்கு விந்திய மலைகளும் மேற்கிந்திய மலைகளுமே காரணமெனலாம். இவை போன்ற இயற்கைத் தடைகளே அலெக்சாண்டரையும் அடக்கியவென்னலாம். சைனு, பர்மா, சிலோன் ஆகியவற்றின் அளவு, அங்கிலையினின்றும் பரவாமைக்கும் பெரிதும் மலைமுதலாம் இயற்கைத் தடைகளே காரணமெனலாம் இத்தடைகளை யெல்லாம் மீறிய ஆட்சிமுறை இப்போது. பரவி வருகின்றது. அதற்கு வலிமையன்றி மக்கள் மனங் கவரும் பொருளாதார, அரசியல் கொள்கைகளே-பொதுவுடைமை போன்றவை-காரணமாம். நாடோறும் நாடி, குடிதழீஇக் கோலோச்சும் கோட்பாடுகளால் வேறுபாடின்றி மக்கள் மனதைப் பிணித்தால் இப்பூகோளத் தடைகள் இரிந்தோடும்; பல்வேறுபட்ட மக்கட்கும் பொதுவான உலகவரசுக் கொள்கை உருவாக வேண்டும்.

அகலிருவிசும்பினும் பகல் விளங்குவது பருதி. ஆனால் அரசு அப்பொழுது மட்டுமன்றி இரவிலும் இலங்க வேண்டும். பகலில் விளங்குதல் பலர்க்கும் இயல்பு. ஆனால் இயலாத இரவில் இலங்குவதே ஆற்றல். அதற்கே மக்கள் வலியையெல்லாம் திரட்டிய மக்கட்கு மேலானதோர் ஆற்றல் (ஆட்சி) இருப்பது. வலிய மொகலாய அரசிலும் இரவில் கொள்ளைக்கூட்டத்தினரை எதிர்த்துத் தப்பும் பொறுப்பு கிராமத்தாரிடமே விடப்பட்டிருந்தது. 'உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும், ஆய மூன்றும் நாட்டிற் சேரலாகாவாம். இவையே இரவிற்குறியன. இரவில் பசித் தொல்லையில்லை; பகையும் பிணிகள் பரவுதலும் துன்புறுத்தலும் இரவிற்றான் மிகுதி. திருடர், எதிரிகளின் பயம்வேறு. இவற்றை ஏற்படாமலும் வாராமலும் காப்பதே இரவிலும் விளங்குவதாகும். இன்னும் நாடு வளமாயிருக்கையில் ஆளும் வலியும் விருப்பமுமுடைய கட்சிகள் பல. ஆனால் இரவில் அதாவது துன்பகாலத்தே பொறுப்பேற்று நாட்டைவழிகாட்டி நடத்தும் ஆட்சியே நல்லாட்சி. அவ்வாட்சியே இரவிலும் ஆளவதாகக் கருதப்படும்: இரவிலும ஆண்ட இறையோன் பொற்கைப் பாண்டியனைப் பற்றித் தமிழகம் புதிதாத அறியவேண்டுவதில்லை.

18-ம் பாடல் அரசினது மற்றொரு அருங்கடமையைப் பேசுகின்றது. உணவெனப்படுவது நிலமும் நீரும். இவற்றைப் படைத்த அரசு உடம்பையும் உயிரையும் (மக்களை) படைத்த அரசாம். எனவே நீர்நிலை நாட்டில் பெருகுமாறு ஓட்டங்களையும் ஊற்றுக்களையும் தடுத்ததே உண்மை அரசு எனப் பகர்வது அப்பாடல். நீர்த்தேக்கத் திட்டங்களில் ரஷியாவையும அமெரிக்காவையும் போற்றிப் பின்பற்றுகிறோம். இந்திய ஐந்தாண்டுத் திட்டங்களெல்லாம் அதனையே அடிப்படையாகக் கொண்டன. கங்கையையும் காவிரியையும் இணைத்து இம்மிநீரும் இருங் கடலுள் விழக்

கூடாதெனப் பேசுகின்றனர் பேரறிஞரெல்லாம். இது கனவாகித்தீருமென நவில்கிறார் இன்னும் பலர். ஈராண்டு மழையில்லாவிடில் இந்தியா என்னபாடுபடுகிறதெனா யாவருமறிவர். அமெரிக்காவா, சீனாவா அரிசி உதவுமென அலைகிறது இந்தியா. வடநாட்டிலும் தென்னாட்டிலும் ரயிலில் செல்லும்போது காணும் கரம்புநிலம் கணக்கிலடங்காவகா. அவற்றை வளமாக்க நீர்வளம் மிகவும் தேவை. அதனை நீரும் கிடைத்தால் அப்புறம் ஏது பசியும் பிணியும் ஆசியாவிலேயே கூட. இவற்றையெல்லாம உணர்ந்தடக்கிய இப்பாடல் அரசியலின் ஆணிவேராகும். நெல்லும உயிரன்றே நீரும் உயிரன்றே எனகையிலேயே அவையும் உயிர் என அழகாக விளக்கப்படுகிறதல்லவா?

"நகைப்புறனாக நின் சுற்றம், இசைப்புறனாக நீயோம்பிய பொருளே" இவ்விரண்டடிகளும் குறளின் ஈரடிகட்கும் இறைவனின் அடிகட்குமே இணையாக்கத்தகுவன. அரசியல் மேற்கொள்ளவேண்டிய கலைக்கொளகையும் பொருள் கொள்கையும் இங்கு சுட்டப்படுகின்றன.

மக்கள் எல்லாம் மகிழ்ச்சியுடனிருக்க வேணடும், பொருள் புகழ்ச்சியுடன் இருககவேண்டும. சுற்றமாகச் சுற்றும் உலகு என்பதால் சுற்றத்தை மக்களாகக் கொள்ளலாம். எப்போதும் மகிழ்ச்சியா யிருப்பதென்பதும் இயலாதது; அதனாற் பயனுமில்லை. வெறுஞ் சர்க்கரைப் பொங்கலே உணவாகிவிடாதல்லவா? ஒன்பான் உணர்ச்சிகளும் உயிர்வளர்ச்சிக்கு வேண்டும். அமைதியிலும், அவலத்திலும், வீரத்திலும் மகிழ்வுணர்ச்சியில்லை. பின், என்றும் மகிழ்ச்சியென இப்பாடற் கூறும் பொருளென்ன? அவலம் முதலிய உணர்ச்சிகளும் கலையின் வழியே மனதை அசைக்கும்போது அங்கே மகிழ்ச்சியே ஏற்பட்டு மனமும் வளர்கின்றது. எனவே கலையுணர்ச்சியில் என்றும்

மகிழ்ச்சியிருக்குமென்பது ஏற்படுகின்றது. கலையுணர்வும், இன்பமும் கொண்டு மக்கள் களிக்குமாறு வழிசெய்வதே ஆட்சியின் கடன் என அறைவதே இப் பாடலெனலாம். நாட்டின் கலைகளெல்லாம் கிளைத்தோங்கச் செய்வதே நல்லரசின் செயலாகும். அதற்கு நாட்டில் நல்ல வளமும் பொருட் கொள்கையும் வேண்டும். இதனையே அடுத்த 'இசைப்புறனாக நீ யோம்பிய பொருள்' என்ற வரி எடுத்தோதுகின்றது. இது புறநானூற்றில் பொன்னால் பொறிக்கப்படவேண்டிய வரியாகும்.

பொருள் இசையோடு ஏற்படவேண்டும், வளர வேண்டுமெனில் அரசின் பொருட் கொள்கை சிறந்ததாக வேண்டும். மக்கள் பொருளால் நிறைந்து சிறக்கவேண்டும். பொதுவுடைமை போன்ற பொருட்கொள்கைகள் அரசின் அடிப்படையாகவேண்டும். உண்டியும் உறையுளும் உடையும் இல்லாதவர் இல்லாமல் நாட்டின் பொருட்கொள்கை முதலில் சீர்படவேண்டும். உழைப்போர்க்கு வேலையும் வேண்டும் ஊதியமும் கிடைக்கவேண்டும்.

செஞ்ஞாயிற்று நிலவு வேண்டினும் வெண்டிங்களுள் வெயில் வேண்டினும், காலமன்றியும் மரம் பயன் தரும், பெய்யினும் பெய்யாதாயினும் வளந்தரும் நாட்டினைக் குறிப்பது புறநானூறு. ஆற்றலால் அடைவதாக அன்று எதிர்பார்த்தனரேனும் இன்று இந்நிலைகள் இன்சினீயரிங் முதலாம் அறிவியல் திறன்களால் நனவாகவே காண்கிறோம். லூதர் பார்பாங்க் போன்ற அறிவியலறிஞர் பூவின் நிறத்தை மாற்றவும் பழச்சுவையை மாற்றவும் செய்கின்றனர். காலமல்லாக் காலத்தும் மரம் பயன்தரச் செய்கின்றனர், செய்வர் என்பதிற் றடையில்லை. கொடிய வெய்யிலைக் குளிரவும் குளிரை வெம்மையாகவும் காற்றுச் சமன்முறையால் (Air-conditioning) இன்று ஆக்கிவிடுகின்றனர்.

ஒரு கட்டடம், அறை யளவில் பயனுகும் இம்முறை ஒரு நகரம், ஊரளவில் பயனும் வகையில் செய்யப்படலாம். ஊரைச் சுற்றிக் காற்றுச் சமன் பொறிகளை யமைத்து உள்ளே வரும் காற்றின் வெம்மையை மாற்றினுல் ஞாயிற் றில் தண்மையும் திங்களில் வெம்மையும் கிடைத்ததாக ஏன் கொள்ளலாகாது! இங்ஙனம் இயற்கையை யடிமைப் படுத்தி எதிர்பாராத ஏற்பட முடியாத நலனை யெல்லாம் அரசு ஆக்கிக் கொடுக்கத்தானே வேண்டும். உலகின் ஒவ் வொரு குடிசையிலும் மின் விளக்கு, வானெலி, மின் அடுப்பு, காற்றுச் சமன் அறை ஆயவை ஏற்பட சாதா ரண அரசு இருந்தாற் போதுமா?

'ஏதின் மாக்கள் பொதுமொழி கொள்ளா' தியல வேண்டுமாம் அரசு. மாக்கள் என இவ்வேதிலரைக் கூறி யது மிகப் பொருத்தமே. நாட்டில் மனிதப்பண்பை மடித்து விலங்குத்தன்மை யுடையோரே மாக்கள். அயலோருடைய சிறப்பில்லா மொழிகளைக் கேளாமல் மேம்பட வேண்டும் மாண்புடையரசு. நாடுகளின் பண்பும், மரபும், உறவும், ஒற் றுமையும ஒழியுமாறு பிரிப்பவரே ஏதிலர். இன்று ஆசியா வில் சைனுவில் அமெரிக்கா இவ்வகை ஏதிலர் வினை யையே இயற்றிவருகின்றது. இதனுல் விளையும் இன்னல் இத்தகைத்தென யாவரும் நாளும் உணர்ந்தும் உற்றறிந் தும் வருகிறேம். இந்தியாவில் ஆங்கில, மொகலாய ஆட் சிக் காலத்தும உள்நாட்டு ஏதிலர் பலர் உரைகளால் பண் பிற்கும் மொழிக்கும் பலபல தீமைகள் அடைந்திருக் கின்றன.

அறனிலே திரியா அன்பி னவையத்து
திறனிலொருவனே நாட்டி முறைதிரிந்து'

மெலிகோல் செய்வதை எதிர்க்கிறது தமிழாட்சி. நல் லாட்சி நிலேத்துவந்த நாட்டில் திறனற்ற தூய்மையற்ற கட்சிகளைப் பொருளுக்காகவும் இனநலனுக்காகவும் ஏற்

படுத்திவிடுகின்றனர். அறிவும் ஆற்றலுமுடையோர் இருக்க வேண்டிய விடங்களில் ஒன்றுமற்ற உதவாக்கரை களைத் தேர்ந்து பதவிகளில் அமர்த்திவிடுகின்றனர். ஆட்சியினரும் தேர்ச்சிக் குழுவினரும் (Service Commissions). எத்தகைய சீரிய கட்சிகள் வரினும், உறவும் இனமும் அச்சமும் காரணமாக நிகழும் இத்தகை ஆற்றலற்றோர்க் குப் பதவியும் ஆட்சியும் அளிக்கும் சீர்கெட்ட பழக்கம், இருந்தே தீரும். இது மாறுவதென்பது அவ்வளவு எளிதில் ஆகக்கூடியதன்று. இதனை மாற்றினாற்றான் நல்லாட்சி நிலைக்குமென்பது மட்டும் உண்மை.

மேற்கூறியவெல்லாம் இப்போது முடிந்துகொண்டு தானிருக்கின்றன. குறையாயுள்ளவும் இன்னும் சில நூற்றாண்டுகளிலேனும் முடியக்கூடியவாகவே தோன்று கின்றன. எனவே இவை தமிழர்கண்ட புறநானூற்று 'நனவாட்சி'க்குரிய தன்மைகளாகவே தெளியமுடியும். மக்கள் மனதைப் பிணித்து உலகமுழுவதையும் ஒன்றாக்கி பொருள் அரசியற் கொள்கைகளை வகுத்துப் பேசும்போது இத் தன்மைகள் அவ்வாட்சியில் அமையவியலாக் கனவல்ல. எனவே வருங்கால உலக 'நனவாட்சி' யொன்றையே இப்பைந்தமிழ நூற்குறிப்புக்களிலிருந்து படைக்க முடியுமென்பதில் ஐயமில்லை.



# புலி மகன்

சிற்றில் நற்றூண் பற்றி நின்மகன்
யாண்டுள ேனோவென வினவுதி யென்மகன்
யாண்டுள னாயினு மறியேன் ஓரும்
புலிசேர்ந்து போகிய கல்லளை போல
ஈன்ற வயிறோ இதுவே
தோன்றுவன் மாதோ போர்க்களத் தானே.—புறம்: 86

*புறநானூற்றுள் வீரத்தாயைப் பற்றியும் வீரமகளைப் பற்றியும் பல பாடல்களுள்ளன. புறப்பாடல்களின் ஒரு பகுதி இத்தகையன. ஈண்டு 'புறந்தருதல்' என்ற பாடலின் நோக்கமும் பயனும் இங்கு விளக்கபபடுகின்றன. புறந்தருதல் என்பது பாதுகாத்தலாம். வெறுஞ்சோறிட்டு உடலை வளர்த்தல் மட்டும் பாதுகாத்தலாது. அவன் பருவ இயல்பு (இளங்காளைப் பருவம்) கெடாமற் காத்தலும் பாதுகாத்தலேயாம். இங்கு அவ்வியல்பில் தாய்க்குள்ள நம்பிக்கைப் புலனாகின்றது.*

*விளையாடுஞ் சிறுவனொருவன் மற்றொரு சிறுவனின் குடிசைக்கு வருகிறான். முற்றத்திலிருந்த தூணைப்பிடித்து நின்றுகொண்டு நண்பனின் தாயை நின்மகன் எங்கே யெனக் கேட்கிறான். அதற்குத்தாய் அவன் போன இடம் அறியேன், எனினும் போர்க்களத்திற்றான் தோன்று வான், புலிசேர்ந்து சென்ற கற்குகை போன்று அவனை ஈன்ற வயிறுதான் இதோ என்னிடமுள்ளது என்கிறாள்.*

இக்காலத்தே இளைஞரெல்லாம் போர்க்களத்தே தோன்றுதலுமில்லை, அதனை எதிர்பார்க்கவுமியலாது. எனவே இப்பாடலின் உட்பொருளை எவ்வாறு பொருள் ஆக்குவது என்பதே கேள்வி. மகன் போர்க்களத்தே தோன்றுவது மாற்றானை வென்று நாட்டையழியாமல் அடிமையாகாமற் காப்பதற்கேயாம். அங்கு மகன் உயிரைப் பொருட்படுத்தலில்லை. எனவே நாட்டைக்காக்கும் பணியிலும் ஆக்கும் பணியிலும் தனதென்ற அனைத்தையும் அளித்த நிலையே அவ்விளைஞனிடம் நாடு எதிர்பார்த்ததும் தாயார் புறந்தருதலுமாம். களிறெறிந்து பெயர்தல் காளைக்குக்கடனே எனவே மற்றோரிடத்திலும் கூறப்படுகிறது. இதனையன்றிப் புகழ்தருஞ்செயல் வேறில்லையாகலின் இச்செயலுடன்காணப்படுவானைத்'தோன்றுவன்' என்கிறாள் தாய். புகழொடு காணப்படுதலையே வள்ளுவர் தோற்றம் என்ற சொல்லால் குறிக்கிறார்—தோன்றிற் புகழொடு தோன்றுக.

தோன்றுவன் மாதோ போர்க்களத்தானே என்பதில் போர்க்களத்தானே என்பதனை போர்க்களந்தோறும் எனக் கொண்டால் பொருள் இன்னும சிறக்கும். ஊராளோர் தேவகுலம் என்கையிலும் 'ஊர்தோறும்' எனவே இலக்கணம் கொள்ளுகிறது. எனவே நாட்டிற்குரிய நற்பணிகள் அனைத்திலும் இவன்பங்கு கலந்திருக்கும் எனக்கொள்ளலாம். ஒவ்வொரு போரிலும் வெற்றி பெற்றாலேயே எல்லாப்போரிலும் கலக்கமுடியும். எனவே இவ்வீரன் எடுத்த செயலைச் செம்மையும் வெற்றியும் பெறச் செய்கிறான்; இன்றேல் அப்பணியிலேயே வீழ்கிறான். ஏகாரத்தைத் தேற்றமாகக்கொண்டால்போர்க்களத்திலேயே உறுதியாக அவனைக்காணமுடியும் என்ற நம்பிக்கை அவளுக்கிருந்துள்ளது. மற்ற விடங்களில் இருக்கமாட்டான், போர் முனையிலே இருப்பான் என்ற நம்பிக்கையில் அவன் தன்னைப்பற்றிய குடும்பத்தைப் பற்றிய கடமைகளைவிட

நாட்டைப்பற்றிய கடமைகளையே ஆர்வத்துடன் கருதுகிருனெனவும் தன்னைதவிடப் பிறர்க்கு,அதாவது நாட்டிற்குரியதை வெற்றிபெறச் செய்கிருனெனவும் உணர்கிறேம்' பலர் தன்னலத்தைத் திறம்பெற முடித்துக்கொண்டு பிறர் நலத்தை ஏதோ இயன்றவரையில் செய்துவிடுதலைப் பார்க்கிறேமல்லவா? 'தோன்றுவன்' என்பது இத்தனையையும் உள்ளடக்கியுள்ளது.

ஈன்ற வயிறோ இதுவே என்ற வரி ஏற்றமானதோர் உட்கோளினை உடையதாகும், மக்களை ஈனுதற்கும் அவர்களைப் போர்க்கனுப்புதற்கும் ஒரு பிணைப்பு பேசப்படுகின்றது. புறநானூற்றில் ஈன்று புறந்தருதல் என்ற பாடலில் ஈனலும் களிறெறிந்து காளை பெயர்தலும் குறிக்கப்படுகின்றது. மகன் புறமுதுகிட்டிருந்தால் பாலூட்டிய மார்பை அறுத்தெறிவேன் என்ற கதை அனைவருமறிந்ததாம். பின் அவன் மார்பிற் புண்பட்டிருந்திருத்தலைக்கண்டு பெற்றபோதினும் பெருமகிழ்வுற்ருள் என்றதும் அடிக்கடி பெருமையுடன பேசப்படுவதொரு வீர நிகழ்ச்சியாம். "மண்டமர்க்குடைந்தனனாயின் உண்டவென் முலையறுத் திடுவென் யானெனச் சினைஇ,—பின்—ஈன்ற ஞான்றினும் பெரிதுவந்தனளே," என்பது பாடல்.

இதனால் மக்களைப் பெறுவது புகழுடன் வாழ்வதற்கே, பாலூட்டுவதும் அப்புகழ் வாழ்விற்கே எனப் புறநானூறு கருதுகின்றது. சம்பந்தற்கு ஞானத்திற்காகப் பாலூட்டினள் பார்வதியார். உன்னைப்பெற்றதை ஒருமடி கீரையைச் சுமந்திருந்தாலும் என் உடற்கு நல்லதென உதவாக்கரைப் பிள்ளையைத் தாய் வைதலை இன்றும் காண்கிறேம்.

புகழுடைய மகனையே என் மகனெனத் தாய் பெருமை பேசிக்கொள்கிருள். இன்றேல் இவன் யாரோ என்கிருள்.

புகழுடைய மக்களாலேயே தாய் தந்தையர் பேரும் புகழும் புலப்படுகின்றது. புகழற்ற மகன் பொது மகன், எல்லார்க்கும் தான் பிள்ளையிருக்கிறது. 'நின்மகன்' என்மகன் எனக் குறிப்பிட்டுக் கூறியதன் கருத்ததுவே யாகலாம். அவனால் புகழ்பெற்ற 'நீ பெற்ற மகன்' எனத் தாயின் பேர் அங்கு பரவுவதைக் காண்கிறோம். இல்லாவிடில் சாத்தன் இல்லையா, கந்தன் இல்லையா எனப் பொதுவாகக் கேட்டிருப்பான், நின்மகன் யாண்டுளன்! என வினவியதன் விழுப்பொருள் இதுவேயாம்.

மகன் பிறந்த வயிறு எனக்கூடக் கூறவில்லை, புலி 'சேர்ந்து' போகிய என்கிறாள் அன்னை. தான் வயிற்றில் பிறப்பித்தவன் என்றது அங்கு சேர்ந்து வெளிப்பட்டவன் என்றமையால் அவன், அவனது ஊழால் இவ்வுலகிற் பிறக்க இவ்வயிற்றை இடமாக்கொண்டான்' என்பதாம்; எனவே புகழுடையவனானான். பிள்ளையில்லாதவர்கள் வெறும ஒரு பிளளை உருவைப் பெருதற்கே பெருநோன்பு கொள்கின்றனர். பிள்ளையென ஒன்று பிறந்தாலே அவர்கட்குப் போதும். அது புகழுடையதாகக் கூட வேண்டியதில்லை. அது அவர்கள் வயிற்றில் பெற்றது. ஆனால் இது வயிற்றில் சேர்ந்து போயது என்ற நுட்பத்தை ஆராய வேண்டும். அவன வீடு இது. அவன் தாய் யான் என்னாமல், ஈன்ற தன்மையுடன் அவன் போர்ச் செயலைப் பிணைத்ததனால் மககளைப்பெற்று வளர்த்தல் அவரது பிறப்பொழுக்கத்தைக் காக்கவே யென்பது பல்லாற்றானும புலனாகின்றது. நன்னடை நல்கல் வேந்தர்க்குக் கடன். அவ்வேந்திற்கு (அரசு, நாடு) தனது வாழ்வறத்தை வழிப்படுத்தி விடுவதுதானே உயர்ந்த ஒழுக்கம்! தோன்றிற் புகழொடு தோன்றுக என்ற விடத்தும் இக்கருத்து தோன்றுகிறது. இத்தகையவனையே 'மகன்' என்று தமிழ் கூறுகிறது. மனிதன் என்ற சொல்லுக்கு நேர் தமிழே மகன் என்பதாம், எனவே மனிதத்தன்மையுடையவனையே

மகன் எனத் தமிழ் பேசும். அவன் மகனே தோழி என அகநானூற்றில் தலைவனைக் குறித்துத் தலைவி கூறுகையில் 'சிறந்த தலைமையுடையவனையே' குறிக்கிறாள். மகன் தந்தைக் காற்றுமுதவி என்றவிடத்தும் இவ்வழக்குண்மை காண்கிறோம்.

இவன் இருப்பது சிற்றில். அங்கிருப்பது நற்றாண். சில மயக்கர் அரசினையும் நாட்டையும் தாங்குவோர் பேரில்லிலும் மாளிகைகளிலுமே இருப்போரெனக் கருதுகின்றனர். ஆனால் நாட்டைத் தாங்குவோரும் வாழவைப்போரும் சிறு குடிசைகளில் (இல்) இருப்போரே என்பதனை இப்பாடல் எடுத்துணர்த்துகின்றது. இவ்வேழைக் குடியானவரையே காந்தி ஏற்றமாக மதித்தார். நாட்டைத் தாங்கும், நாகரிகத்தைத் தாங்கும் நற்றாண்களாக இவர்கள் இச்சிற்றில்களில் தோன்றுகின்றனர். சிற்றில் நற்றாண் என்ற சொற்கள் அமைந்த உள்ளப்பான்மை இதுதானே, ஆகலாம்! அரசியலைத் தாங்கும் தூண்கள் செல்வரும், பெரும் பதவியாளரும் என்ற இறுமாப்பை இச்சொற்கள் இடித்தெறிகின்றன வென்றே எண்ண வேண்டும்.

நன்மகனைப் புலியென்னல் தமிழ் வழக்கு. சிங்கம் போன்றவன் என்பதனைவிடப் புலிக்கு வீரனை ஒப்பிடலே இலக்கியப் பெருவழக்காம். புலியின் வீரத்தையே புறம் பெரிதாகப் பேசுகின்றது. விலங்குகளிற்றலைமையான வலியும் வீரமும், அடிக்கப்பட்டு இடம் வீழ்ந்ததை யுண்ணாமல் வலம் வீழ்ந்ததையே யுண்ணும் அறமும், பசித்தாலும் புல்லைத் தின்னாத மானமும் புலியின் தன்மைகளாம். நாட்டையுயர்த்தும் வீரனொருவனிடம் இருக்க வேண்டிய தலைமை, அறம், மானம் இவற்றை நினைத்து மகனை 'புலி'யாச் செப்பியது அணியாம். வீர ஆண் மகனைக் களிறு எனல் இலக்கிய வழக்கு. அக்களிற்றையும்

வெல்லும் வீரம் புலிக்குண்டு, எனவே புலி, வீரத்தின் தலைமைக்கடையாளமாம். அத்தகைய புலி சேர்ந்து போகிய கல்லலையெனத் தன் வயிற்றைக் கூறுகிறாள் தாய். அணுகமுடியாத வீரன் இருக்குமிடத்தைப் புலிதுஞ்சு வியன்புலம் எனப் புறம் வியக்கின்றது.

கல்லலை, செடிப் புதர் போன்று புலிக்குத் தங்குமிடமாக மட்டுமன்றிப் பாதுகாப்பாகவும் இருக்கின்றது. அதன் தன்மைகளெல்லாம் அழியாமல் வளர அது இடமாக விருக்கின்றது. அதுபோல மகனின் மாண்புகளும் இயல்புகளும் மடியாமல் வளர்வதற்குத் தாய் இருப்பிடமாகிறாள். சிவாஜியின் தாய் அவனது வீரத்திற்கு எவ்வளவு காரணமாவாள் என்பதனை இந்திய வரலாறு சான்று பகரும்.

குகையில் புலி, என்றும் குடிகொள்வதுமில்லை, புலியின் இயக்கத்தில் குகைக்கு ஓர் கண்காணிப்போ மேலாட்சியோ இல்லை. அது போற்றான் மகனின் இயக்கத்திலும் தனக்குள்ள தொடர்பெனத் தாய் புலப்படுத்துகிறாள். சிறந்த மக்கள் பெற்றோரினும் பெரும் ஆற்றலும் புகழுமுடையர். எனவே தாய் தந்தையரால் நடத்த முடியாதவராகின்றனர். மோதிலாலை ஒரு கூட்டத்தில் ஜவஹர்லால் எதிர்த்த கதை நமக்குத் தெரியும். சிறந்ததொரு செயலில் பெற்றோர்க்குப் பிள்ளைகள் அடங்காவிடில் குறையில்லை. போரெனிற் புகலும் பொருகழல் மறவர், அங்கு பேசப்படுவோரெல்லாம். பகைவர் தேயம் தொலைவானது எனத் தயங்காதவர், எடுத்த செயலில் இடுக்கணையோ எதிர்ப்பையோ அஞ்சாதவர். "புட்பகைக் கேவானாகலிற் சாவேம் யாமென நீங்கா மறவர் வீங்குதோள் புடைப்ப" (68) என்ற வரிகள் விழுப்புண்படாத நாட்களை வீழ்நாள் வழுக்கினுள் வைக்கும் வீறினை உணர்த்துகின்றது, அதாவது

நாட்டிற்காக வருந்தியுழைக்காத வீணனாகக் கருதுகிறான் வீரமகன்.

வீரன் குறைந்தது பதினாறு வயதுக்கு மேற்பட்டவனாகவாவது இருப்பான், ஆனால் அவனைக் குறிக்கும் தாய் ஈன்ற வயிற்றைக் காட்டி இயம்புவதால் அவனது இளமை புலப்படுகின்றது. அவன் தாய் யான் எனில் இக்கருத்து நம் மனத்திற்பட வேண்டியதில்லை. இளமைக்கும் வீரத்திற்கும் இயைபு காட்டிய பாடல் எத்தனையோ புறநானூற்றில் உண்டு. கரிகாலனையும் சம்பந்தரையும் இளமையிலேயே ஏற்றமுற்றோராகக் காட்டி, இறும்பூதடைவது தமிழ்நாடு. கிண்கிணி களைந்தகால் ஒண் கழல் தொட்டு, குறுந்தொடி கழித்த கை சாபம் பற்றி ஐம்படைத்தாலி களைந்தன்று மிலனே, யெனத் தலையாலங்கானம் வென்ற பாண்டியனை இளமையிலேயே வீரப்போர் செய்தோனைக் குறிக்கிறது புறநானூறு - 77. இவனே, இளையன் இவனென உளையக் கூறிய பகைவரை இன்னது செய்வன் என வஞ்சினங் கூறுபவன். பொருட்டெழினியின் இளமை வீரம் 'திங்கள் நாள்நிறை மதியத்தனையை இருள் யாவணதோ நின்னிழல் வாழ்வார்க்கோ' என மொழியப்படுகின்றது. வீழ்நாள் படாமை நன்றாற்ற வேண்டுமென்பதே இக் கற்பனைகளின் குறிக்கோளாம். அன்றறிவாம், யாம் இளையம் என வாழ்வறத்தை இளமையிற் புறக்கணித்திருத்தலாகாதென்பதே, இவ்வீரரை இத்தனை இளையராகக் காட்டியதன் நோக்கமாகக் காண்கிறோம்.

இளமையினும், நல்ல வயதிலும் தன்னலத்தை வளர்த்துக்கொண்டு ஓய்வுபெறும், அறுபது வயதிற்குமேல் பிறர்க்கும் நாட்டிற்கும் ஆம் பணியில் அகத்தைச் செலுத்துவோர் பலர், அஃது ஆகாது இளமை முதலே பிறர்க்கென வாழும் பேராண்மை ஒப்புரவறமே உயர்ந்த வாழ்வறமென இப் பாடல் எடுத்தியம்புகின்றதெனலாம்.

இவ்வீர மகனைக் கூப்பிட வரும் சிறுவன் விளையாட்டுப் பிள்ளை; உடன் விளையாடவே நண்பனை யழைக்க வருகிறான். நண்பனின் தாய் பிள்ளையை மண்ணில் படிந்து விளையாடும் சிறு விளையாட்டைவிட மண்ணைக் காக்கும் வீர விளையாட்டிலேயே உணர்வூட்டிப் பழக்குகிறாள், இதனை அறிந்தவன் வந்த சிறுவன. எனவே தாய் எங்கெங்கோ அழைத்தேகிப் பையனைக் கெடுத்துவிடுகிறவர்களென இவனை வைவாள் என இவனுக்குத்தெரியும். எனவே தான் அச்சத்துடனும் அடக்கத்துடனும் சிற்றில் நற்றூணைப் பிடித்து நின்று யாண்டுளனோவென வினவுகிறான். சிறந்த தற்காயின் அச்சமின்றி நேரே வந்துநின்று கேட்பர். அச்சமுடையோர் அடங்கிப் பதுங்கி ஒன்றைப் பற்றி ஏதேனும் கேட்பதனை எங்கும் யாம் காண்கிறோம். இது ஒரு நல்ல நாடகக் காட்சி.

யாண்டுளனோவென வினவுதி என்பதில், வினவுதி என்ற சொல் பொருளுடையதாகும். என்னடா, இது தெரியாதா உனக்கு, கேள்வி வேறு கேட்கிறாய் எனத் தாய் இடித்துரைப்பது போன்றது இவ்விடம். வினவுதல் கேள்வி கேட்பதல்லவா? விடையாகவாவது 'போர்க்களத்திற்குப் போயிருக்கிறானா எனக் கேட்டால் வேண்டில் சிறிது அறிவுடையவன் என இவனை நினைத்திருப்பாள் அவள். கேள்வி மட்டுமன்றி உளனோ என ஐயத்துடன் (ஐய ஒகாரம்) கேட்டதிலும் அவட்கு அடங்கா ஆத்திரம். தேற்றமாகப் போர்க்களத்திலிருப்பானென அவன் அறிந்துகொண்டு ஒரு பேச்சுக்காகவே 'யாண்டுளன்' எனக் கேட்டிருக்க வேண்டும். வினவுதி என முன்னிலைப் படுத்தி மொழிவதில், வந்தவனிடம் தாயின் சீற்றம் நன்கு புலப்படுகின்றது. அச்சீற்றத்தில் இங்குதான் இருப்பான் என்ற நம்பிக்கை நன்கு வெளிப்படுவதுடன் மற்றவரும் அதனில் தெளிவின்றி ஐயப்படுகின்றனரே என்ற வெகுளியும் தெரிகின்றது.

யாண்டுளனுயினு மறியேன், என்ற மறுப்புரையிலும் புலப்படுவதொன்றுண்டு:- "அவன் மற்றவிடங்கட்குச் செல்லுமாறு யான் பழக்கவுமில்லை, அதனைப் பற்றிக் கருதுவதுமில்லை, அதில் அதிகப் பிடித்தமுமில்லை. போர்க் களம் செல்வது பற்றித்தான் எனக்குப் பரிவு".

மற்றும், மற்றவிடங்களில் அவன் தோன்றமாட்டான் போர்க்களத்தில் கண்டிப்பாகத் தோன்றுவான் எனத் தெரிக்கிருள் தாய். பொழுதுபோக்கிடங்களிலும் சூதாடு களத்திலும் விளங்கித் தோன்றுவோர் பலர். ஆனல் இவன் விளங்கித் தோன்றுமிடம் 'நாடு செழிக்கும் நற் பணியிடங்களிற்றுன், என்பது இதன் கருத்து. மற்றவிடங் களில் இவன் இருப்பினும் அங்குச் சிறப்பவன் இவனில்லை யாகலின் இவன் விளங்கித் தோன்றுன், ஏதோ ஒரு மூலை யில்' இருக்கலாம். அன்றி இல்லாமலிருக்கலாம. ஆனல் போர்க்களமானல் இவனில்லாமல் அங்கொன்றும் நட வாது, மற்றும இவனிருப்பது தெளிவாகத் தெரியும் என்ப தாம. இருந்தாலும், அங்கெல்லாம் அவனைக் கண்டுபிடிக்க முடியாது, இந்த விடத்திற்குப் போங்கள், மாலை, 5-மணி வாக்கில் வருவான், பிடித்துவிடலாமென இன்றும் வழக் கில் கூறுவதைப் பார்த்திருக்கிறும். இவ்வழக்கையே இவ் விலக்கியச் செய்யுள் இனிதாக எடுத்துக் காட்டுகின்றது.

இன்றிளையம் பின்பார்த்துக்கொள்ளலாம் என்றிரு மாக்கும் இளைஞர் கடன், ஒரு நாட்டு மனிதன் கடன் ஆய வற்றை அழகுபட விளக்கும் நாடகக் காட்சியுடையது இப் பாடல். தமிழ்த் தாயின் தனிப்பெருமையையும் உயர்ந்த மனத் தகுதியையும் குறிப்பது இச்சொல்லோவியம்.



# குறளில் மனம்

திருக்குறளில் மனதைப் பிரித்து ஆராய்வதைவிட திருக்குறளேயே மனமாகக்கொண்டு ஆராய்வதே பொருத்த மாகும். வள்ளுவருடைய எண்ணங்களே குறள். ஏன், உலக மனித இனத்தின் மனமே குறள் எனில் பொருந்தும். அணுவைத் துளைத்து அலைகடலைப் புகட்டி என்பதில் உலக எண்ணங்களெல்லாம் குறளில் புகுந்துள்ளமைப் புலப்படுமன்றோ?

மனிதனே மனம் எனலாம். மனிதன் பிறக்கிறு னெனில், நினைக்கிறுன். இறக்கிறுனெனில் நினைவறு கிறுன். எனவே மனித உயிர் மனம். அவனை மனதன் அல்லது மனசன் என்பது மிகவும் பொருந்தும். 'காந்த்' என்ற ஜர்மானிய தத்துவ ஞானி மனிதன் மிகவும் புல்லி யன் எனவும், அவன் சிறப்பது மனம் ஒன்றினுல்தான் எனவும் கூறுகிறுர். தமிழும் அவனை சில்வாழ்நாள் பல் பிணிச் சிற்றறிவினேன் எனவே கூறுகிறது. ஒத்திட்டும் காலத்தைக் கடந்தும் ஆழ்ந்தும் நினைக்கும் ஆற்றல் இல்லையேல் மனிதன் விலங்கினின்றும் வேறுபட்ட சிறப் பில்லாதவனுவான்.

மனேதத்துவம் என்பது உயர்ந்த கலை. அது தத்து வக் கலையின் (Philosophy) ஒரு பகுதியாம். இத் தத்து வமே உலகின் சமயம், அரசியல், பொருளாதாரம், இலக்கி யம் முதலிய எல்லாத் துறைகளேயும் இயக்கியிருக்கின்றது. பண்டுதொட்டு மனிதப் பண்பும் முன்னேற்றமும் மன

வளர்ச்சியால் மதிக்கப்பட்டுவந்துள்ளது. அனுபவம் எனப் படுவது மனவளர்ச்சியையே குறிக்கும், அதனுலேயே வள் ளுவர் மனித இன மேம்பாடே மனதால் ஆகும் என்பதனை "மனநலம் மன்னுயிர்க்காக்கம்" என்கிருர். அவ்வாக்கமும் மனிதனுடைய சிறப்பும கைகூடுவது, அறிவு உணர்வு ஆகியவற்றுல் என்பது போல "மனத்தானும் மாந்தர்க் குணர்ச்சி, மனத்துள் அதுபோலக் காட்டி அறிவு ஆகும்" எனக் கூறுகிருர். எனவே மனித அறிவும் உணர்வும் ஞானம) மனமின்றி இல்லை எனப் பெறப்படும்.

மன நலத்தின் எச்சம் நன்ருகும் மன நலத்தின் ஆகும் மறுமை என்ற தொடர்களால் மனமே மக்களின் சிறப்பிற்கும், மறு பிறப்பின் மேனமைக்கும் காரணம் என கிருர். மக்களை இந்நூற்ருண்டு எனவும், மறுமையை அடுத்த நூற்ருண்டு எனவும கொண்டால் தவறில்லை. எனவே நூற்ருண்டு நூற்ருண்டாக மனிதன் சிறப்பது மனதினுல்தான் ஆகவல்லது என்பது மிகத் தெளிவாம.

மெய், வாய், கண் செவி முதலிய புலங்களே மன வளர்ச்சிக்குக் காரணம். அறிவிற்கும் மனமே காரணம யானை, குரங்கு, பசு முதலியவற்றிற்கும் ஓரளவு ஒப்பிட்டு அறியும் மனம் உண்டு. இதனுல்தான் தொல்காப்பியரும புலன்களை அறிவு எனக் கூறி, ஓரறிவு உயிர் முதலாக பிரிவுரைத்தார். இதனுலும அறிவிற்கும பெரிதும புலன் களே காரணம் என்பது பெறப்படும். கண்ணின் வழியான கல்வியும். பெரியோர் வாய் அல்லது நூல் வழியாக வரும கேள்வியுமே அறிவிற்குச் சிறந்த காரணமென வள்ளுவர் உட்பட அனைவரும் கூறுவர். ஆனுல் ஆழ்ந்து நினைக்கும அறிவு உணர்வு என்பன மனிதனுக்கே உண்டு. இதனுல் தான் மற்ற புலன்களின செம்மையை விலங்கு, பறவை முதலியவற்றுடன் ஒப்பிட்ட அறிஞர் அறிவை மட்டும் மற்ற உயிர்களின் அறிவுடன் ஒப்பிடவில்லை. மான், குதிரை,

ஓட்டம், கழுகுப் பார்வை என்பன போன்ற உவமை வழக்குகள் இதனைப் போன்ற அறிவு என. இல்லையல்லவா?

மன நூலார் மனதை மேல்மனம் நடுமனம் அடிமனம் எனப் பிரிப்பர். வள்ளுவர் மனம், உள்ளம், நெஞ்சம் என்பதனை அப்பிரிவுகளுக்கு ஒப்பக் கொள்ளலாம். எல்லா எண்ணங்களும் மனதிற்கும், அறிவு உள்ளத்திற்கும், உணர்வு நெஞ்சத்திற்கும் உரியவாக்கொள்ளலாம். மனம், புத்தி, சித்தம் என்றுதான் தத்துவநூல் பிரிக்கும். மனத்துக்கண் மாசிலனாதல் என்பதில் முதலில் கொளளும் எண்ணங்களிலேயே மாசற்றனவாகவே கொள்க என்பது பெறப்படுகிறது. உள்ளம் எண்ணங்களை சலித்து வடிகட்டி வரையறுத்த முடிபுகளை (அறிவை) உடையதாம். அறிவு, அறுதி, அறுத்தல், வரையறை இவை பொருள் தொடர்புடைய சொற்கள். எப்பொருள யார் யார் வாய்க் கேட்பினும் உள்ளத்தாற் பொய்யாதொழுகின், என்பதில் வடிகட்டி வரையறை கண்ட எண்ணமே அறிவு என்பது தெளிவு. அதற்கடியிலும ஆழ்ந்து, தூய்மையும் ஒளியும் உடையது உணர்வாகிய கோட்பாடாம. எப்பொருள எத்தன்மைத்தாயினும் அங்கு கண்ட மெய்பபொருளே உணர்வு; நெஞ்சத்தால் காதலவராக என்கிறார் வள்ளுவர். நுண்மாண் நுழைபுலம் என்பதால் புலங்களின் (மனதின்) ஆழமும் கூர்மையும் அகலமுமே அறிவு உணர்வு எனப் படும்.

வள்ளுவர் குறள் முழுவதிலும் மனதைப் பற்றியே பேசுகிறார் எனலாம். 133 அதிகாரங்களில் 120-க்கு மேல் மனதின் தொடர்பைக் கொண்டுள்ளன. அவை மனப் பயிற்சியாகவோ, மனத் தூய்மையாகவோ மனதின் இன்ப நிலையாகவோ அன்றி அமைதி நிலையாகவோதான் அமைகின்றன. அறத்துப்பால் மனமாசு நீங்கும் தூய்மை நிலையா

யும், பொருட்பாலின் கல்வி, நட்பு, வலியறிதல் முதலிய, அவையறிதல் ஆகிய பிரிவுகள் மனவளர்ச்சி பற்றிய பயிற்சி நிலையாயும் உள்ளவெனலாம். பொருட்பாலின் ஒழிபியல் மனப்பயனாகிய அமைதிநிலையெனலாம்; இதனில் பண்பு, மானம், பெருமை சான்றாண்மை, முதலிய பிரிவுகள் அடங்கும். காமத்துப்பால் மனதின் கலைக்கற்பனை நிறைந்த இன்பநிலை எனலாம்.

சிறப்பாக ஆராயினும் பாயிரம் முழுவதும் மன வழிப் பட்டதாகும். மலர்மிசையேகல், இருளசேர் இருவினைசேரா, பொறிவாயிலைந்தவித்தநிலை, எண்குணம் அறவாழி ஆகிய கடவுள் வாழ்த்துத் தொடர்கள் மனத்தொடர்பின் மிகுதியை குறிப்பவென்பது தெற்றெனப் புலப்படும். நீரின்றமையாது உலகெனின் என்ற தொடரால் மனிதனின் ஒழுக்கமும் மனமும் மழையாலேயே (வான்சிறப்பு) மேம் படும் என்பது உரையாலும் பெறப்படுகிறது. மனதுக்கண் மாசிலனாதல் அறம், குணமென்றும் குன்றேறி நின்றார் என்ற தொடர்கள், அறன் வலியுறுத்தலும், நீத்தார் சிறப் பும் மனப் பெருமையே பற்றியன என்பதை எடுத்துரைக் கும். இல்லறவியலிலும், துறவறத்திலும் மனமாசு நீக்க லும், மனத்தினின்று தீமையை விலக்கலுமே பெரிதும பேசப்படுவன. மனதில் நற்செயற்காம் எண்ணங்களை (ஈகை, ஒப்புரவு போன்றவை) வளர்ப்பது பற்றியும அங்கு பேசபபடுகிறது. அன்பின் விரிவே அருள் எனப்படும. அவை இருவியலிலும் பேசப்படுதல் போன்றே அழுக் காறாமை, வெஃகாமை; புறங்கூறாமை, பயனில் சொல் லாமை போனறவை இல்லறவியலிலும், கள்ளாமை; வாய்மை ஆகிய மேற்கண்டவற்றின் விரிவுகள் துறவியலி லும் பேசப்படுகின்றன. ஏன் இவற்றை ஒரே இடத்து அடக்காமல் இருவியலுள்ளும் பேசவேண்டுமெனில், ஒன்று இடையறாது விலகிக்கொண்டே இருக்கத்தகுவது

(எனவே சூழ்நிலையால் அடிக்கடி நெருங்கும் இயல்புகள்) மற்றொன்று அடியோடு விலக்கத் தகுவது என்பதாம், எனவே அது துறவாயிற்று. இல்லறத்தில் வெஃகுதலும், புறங்கூறுதலும் ஆய இயல்புகள் முற்றும் விலக்க முடியாமல் தானறியாமலும் அடிக்கடி நெருங்குவன. ஆகலின் குளத்தில் நாளும தவிர்க்க முடியாமல் விழும் சருகுகளை விலக்கிக்கொண்டேயிருப்பது போல அவ்வியல்புகளையும் விழிப்புடன் அடிக்கடி விலக்கவேண்டும் நிலை இல்லறம். பொய், கொலை, களவு, முதலிய பஞ்சமாபாதகங்கள் முற்றும் துறக்க வேண்டுவனவாகலின் துறவறவியலில் நின்றன. எனவே துறவறத்தை, மனத்துறவையே கூறும் வளளுவரின் மனைவியொடு கூடிய வானப்பிரத்த நிலையாகவே கொள்ளலாம்.

பொருட்பாலில் தொட்டனைத்தூறும் கல்வி பற்றிய பிரிவில் ஊறும் மனவளர்ச்சியும் அறிவு வளர்ச்சியுமே பெறப்படும். செவி வழியதே கேள்வி, செவி ஓர் புலம அன்றோ. எனவே அப்புலமும் மனமாம். அகநக நட்கும் நட்பும் மன வளர்ச்சிக்கல்லவா? சிற்றினஞ் சேராமையில் மனம் விரிவாய் விளக்கப்படுகிறது. வலியறிதல் முதலிய அரச சூழ்ச்சியிலும் வினைசெயல் பிரிவிலும் மனமே பெருந் தொழில் புரிகின்றது. எண்ணித் துணிக கருமம், அவையறிதல் ஆய பிரிவிலும மனம் அறிதலில் பதிகின்றது, ஒழிபியலின் முற்கூறிய பண்பு, மானம முதலியவெல்லாம் மனதை இடமாகக்கொண்டன வன்றோ?

காமத்துப்பாலில் சுமார் இருபது அதிகாரங்களுக்கு மேல் மனத் தொடர்புள்ளன. கனவுநிலை, நெஞ்சொடு புலத்தல், நீடுநினைந்து இரங்கல், குறிப்பறிதல், புணர்ச்சி மகிழ்தல், புலவி போன்றவெல்லாம மனதைப் பற்றியன என பது சொல்லத் தேவையில்லை இப்பாலே மனதின் கற்பனை இன்பநிலையென முன்பே கூறப்பட்டது. ஒன்பான் உணர்ச்

சியும்கொண்ட மனம் இப்பாலில் நன்கு பொலியக் காண் கிறோம். தகையணங்கு, புணர்ச்சி மகிழ்வு, மடலேறுதல், புலவி, ஊடல் முதலியன வியப்பு, இன்பம், வீரம், இழிவு, சினம் முதலிய உணர்ச்சிகளை மிகச் சிறப்பாக வெளிப் படுத்துகின்றன. கலைக்கு எப்படி பயிற்சி நிலை, இன்பநிலை அதற்கு அடிப்படையான மனத்தூய்மைநிலை, அமைதிநிலை என உண்டோ அதுபோன்று மனதிற்கும், குறள் முழுவ தும் பல நிலைகளாகவே நிற்கின்றன. இது பற்றி முனபும் பேசப்பட்டது. கலைக்கு ஐயந்திரிபு களைதல் போல இல்லற மும்; பிணி வறுமை எதிர்ப்பு ஆயவை கலையை அழிக்காமல் காத்தல்போல துறவியலும்; கலையின் பயிற்சி வளர்ச்சி நிலைபோல அரசு அமைச்சியல்களும்; அதன் கற்பனை அழ கின்பம்போல காமத்துப்பாலும்; கலையாலுறும் அமைதி நிலைபோல ஒழிபியலும் அமைகின்றன. எனவே எங்ஙனம் அகரமானது மெய்யுட்பட்ட எல்லா ஒலிகளிலும் கலந்துள் ளதோ அதுபோன்று மனமும் குறளின் எல்லா இயல் களிலும் கலந்துள்ளது எனலாம்.

இம்மனவளர்ச்சி, பயிற்சி பற்றிப் பெரிதாகக் குறளில் பேசப்படுகிறது. மனம், சொல், செயல் இவற்றுள் மனமே அடியாயது. அதன் தூய்மையும் திறமையுமே நிலையாயது என்கிறார் வள்ளுவர். மனத்தொடு வாய்மை மொழியின் மனத்துக்கண் மாசிலனாதல், தொழுத கையுள்ளும் படை யொடுங்கும என்ற தொடர்கள் மனத்தூய்மையின் இன் றியமையாமையைப் புலப்படுத்துவன. மனிதன் பிறந்தது முதல் இறக்கும் வரை நாளும் பலவான செயல்களைப் புரிந்துகொண்டே இருக்கிறான். செயலின்றேல், மனித வாழ்வில்லை. அச்செயலின் வெற்றி பயன் யாவும் மனம் ஒன்றினால்தான் என்பதை 'வினைத்திட்பம் என்பதொரு வன் மனத்திட்பம்' என வள்ளுவர் திட்பமாக அறிவிக் கிறார். புலன்களையும், மனதையும் அடக்கி வாழ்வதே மனித அறிவு என்பதை 'உரனென்னும் தோட்டியால்

ஓரைந்தும் காப்பான், சென்றவிடத்தால் செலவிடாது தீதொரீஇ எனவெல்லாம் கூறுகிறார். எண்ணத்தைச் சுருக்கி சில வான உண்மைகளையே நினைக்குமாறு, கருதுப கோடியும்அல்ல பல என இடித்துரைக்கிறார். எதனையும் அப் படியே பறவை, விலங்கு போல ஒப்புக்கொள்ளாமல், ஒப் பிட்டு ஆய்ந்து உணரவேண்டுமென எப்பொருள் எத்தன் மைத்தாயினும், யார் யார்வாய் கேட்பினும், அதன் மெய்ப் பொருள் காண்பது அறிவு என்கிறார். இந்நெறிகளையே "சித்தியெலாம் பெற்றாலும், மனமடங்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே" எனத்தாயுமானாரும, "உடம்பெனும மனையகத்தே உள்ளமே தகழியாக" என அப்பரும் விளம புவர். மலர்மிசையேகினன், நெஞ்சம் உமக்கே இடமாக வைத்தேன் என இறைவன் கோயிலாகவே மனதைக் கொண்டதிலிருந்து, மனதின் பெருமையை நன்கு அறிய லாம். இம்மனமே எல்லாம அழிந்தும் உடல் அழிந்தும், தானழியாது மறு பிறப்பிற்கும செல்வதாம். எனவேதான இதனொடு புத்திமுதலாம் அந்தக் கரணங்களை இறைவன தன் தொழிலுக்கு அமைச்சர் போன்றுகொள்கிறான் என சித்தாந்தம கூறுவது போலும்.

ஊனினைச் சுருக்கி உள்ளொளி பெருக்கி என மணி வாசகர் கூறியதில் ஊனைபபற்றிய எண்ணங்களைச் சுருக்கி உள்ளத்தைப்பற்றிய அறிவுணர்வினைப் பெருக்கி எனக் கொள்வது மிகப் பொருத்தமாம். மனித உயிர்க்கே ஆக்க மாயும் அறிவு உணர்விற்கு இருப்பிடமாயும், அவனது வாழும் நூற்றாண்டு, வரும் நூற்றாண்டுகட்கு மேன்மையை வளர் கருவியாகவும் இருந்து மனித வாழ்வையும் இனத் தையும் பரம்பரை பரம்பரையாக உயர்த்தும் மனதைவிட வேறு ஒரு பொருள் மனிதனுக்கு சிறந்ததில்லை என்பது துணிபாம். 'இன்னாமை இன்பம் எனக்கொளின்' எனக் கூறும் இடுக்கணழியாமை அதிகாரம் ஒன்றே மனிதனுக்கு வள்ளுவர் தந்த வரமாம். மனிதனுக்கு மிகுதியாக

நிகழ்வது துன்பம். அது ஒரு உண்மைப் பொருளன்று, மன நிகழ்ச்சியே எனக் கூறி, அத்துன்பத்தை மனிதன் மனதால் இன்பமாக மாற்றலாம், மாற்ற முடியும் என உறுதியூட்டிய வள்ளுவர் நமக்கு ஒரு சிந்தாமணிக்கல்லை (மனம்) தந்திருக்கிறார். அதைக்கொண்டு மனித இனம் தனது எந்த துன்பத்தைத் தொட்டாலும் அதனை இன்பமாக மாற்ற முடியும். மனித உலகமே ஒரு பொன்னுலகு ஆகிவிடும்.

இன நலம் என்பதில் வள்ளுவர் சமூகம், உணவு உடை, இருக்கை, பொருள் முதலிய அனைத்தையும் குறிக்கிறார் எனலாம். சென்ற நூற்றாண்டுவரையில் உலகம், மனிதனது, சூழ்நிலையை (இனத்தை) திருத்துவதன் மூலமே மனதையும் பண்பையும் திருத்த முடியும் என்று கொண்டு அரசியல் புரட்சிகளையெல்லாம் கண்டது. வள்ளுவர் சிற்றினம் சேராமை, நல்குரவு போன்ற அதிகாரங்களில் இக்கோட்பாட்டை ஒப்புக்கொள்ளினும், முடிவாக மனிதன் வெறும் சூழ்நிலையால்மட்டுமன்றி மனத் திருத்தத்தாலேயே மேம்படுவான் என்கிறார். சூழ்நிலை தானே மனதை வளர்த்துவிடாது. மனதை அவனே திறப்படுத்திக்கொள்ள வேண்டும் என்பதே அவரது உட்கோளாகும். எனவேதான் இனநலம் பெற்ற ஒருவனும் தன் மனநலத்தால்தான் மறுமையையும் இம்மையையும் படைத்துக்கொள்ளமுடியும் என்கிறார். இந்நூற்றாண்டில் வளர்வதும், வளரவேண்டுவதும், இக்கோட்பாடேயாகும்.

இவ்வாறாக மனித இனத்திற்கே ஒருமனதை படைத்தவர் வள்ளுவர். மனோதத்துவத்தை உணர்ந்தாலன்றி குழந்தைகள், மாணவர், முதியோர், தொழிலாளர் மற்றும் நம்மை சூழ்ந்தோர் இவர் ஒருவரிடமும் பழகவோ பயன் பெறவோ முடியாது என்பதற்கே குழந்தை மனோதத்துவம் முதலிய தத்துவங்களை அறிஞர் வற்புறுத்துவர். அதனை

யெல்லாம் குறுகிய குறளில் அளித்த குறளைப் பெற்ற நாம் பேறுபெற்றவர்கள். அதனை மனதால் படித்து, மனம் பெற்றுத் தமிழினத்தையும் மனதிற்குப் பொதுவான மனித இனத்தையும் மேம்படுத்த மனங்கொள்வோம்.



# நான்கு வல்லரசு

இன்று உலகை நடத்தும் வல்லரசுகள் நான்கு. ஆனால் என்றும் உலகை நடத்திவரும் வல்லரசுகள் நான்கு உள்ளன. அவை: கள், களவு, சூது, வரைவின் மகளிர் என்பனவாம். இவை நான்கே இன்றைய வல்லரசு களையும் ஆட்டிவைக்கின்றன எனலாம்.

களவு முதலான வல்லரசுகள் என்றேனும் உலகை உயர்த்த முடியுமா? அதே போல 'சரண்டல்' கொள்கை யுள்ளமட்டும் இன்றைய நான்கரசும் உலகை நடத்த முடி யாது. இவை நாகரிகக் கள்ளைக் (பிராந்தி, பீர், ஒயின்) குடித்து மயங்குகின்றன; அரசியல் கட்சி சூதாடுகின்றன. வரன் முறையின்றிக் கண்டவன் மனைவியைக் கட்டித் தழுவி (Ball Dance) யாடுகின்றன. இவை உயிரும் உடலு மாய் நம்மை நடத்தப்பார்க்கின்றன.

நம்மில் மிகப் பலர் கள் குடிப்பதில்லை; திருடன் என்ற பேர் வாங்கவில்லை; சூதாடுவதில்லை; குடிசை நுழை வதில்லை. ஆனால், இந்த நான்குதன்மைகளும் நம்மிடத் தில், நாட்டில் மறைந்து, வேலை செய்வதை மறந்து ஏமாறு கிறோம்.

களவுமில்லை; ஆனால் கள்ள வாணிபம் செய்கிறோம். களவைவிட மிகுந்த செல்வம் சேருகிறது; அச்சமில்லை; துன்பமில்லை; தொழிலாளிக்கு உரிய உழைப்பின் பங்கை யளிக்காமல் திருடுகிறோம்; அரசாங்கப் பாதுகாப்புட னேயே. பிறநாட்டை அடிமையாக்கிச் சுரண்டுகிறார்கள்

பாதுகாப்பளிப்பதாக ஆறுதல் மொழியுடன். நாகரிகத்தின் பெயரால்; சட்டத்திற்குள் மறைந்து; ராணுவந் துணை செய்ய நடக்கும இந்தத் திருட்டு வள்ளுவன் கூறிய திருட்டு அல்லவா?

களவினால் குவிந்த செல்வம் மலைபோற் காணும், மண்ணாய்ப்போகும் என்கிறார். ஆம், மேலை நாடுகள் சுரண்டிய பணம் என்ன ஆயிற்று. குண்டாய் வெடித்துப் போரில் சாம்பலாயிற்று. கள்ள வாணிபத்தால் குவிக்கிறான், அகப்படுகிறான், அனைத்தையும் அபராதங் கட்டி, ஆளின் மானம் போகாதிருந்தால் போதும் என நினைக்கிறான்.

இவர்களிடம் 'அருள்' என்பதே அணுகாது என்கிறார் வள்ளுவர். தொடர்பு கருதாமல், 'உலகமே ஒன்று' என்ற உள்ளமே 'அருள்' உள்ளம். வெள்ளையர், கருப்பர்; மேநாடு, கீழ்நாடு; விஞ்ஞானிகள், அறியாதார் என்ற வேறுபாட்டாலன்றோ இன்று மேல்நாடுகள் மற்ற நாடுகளை அடிமையாக்கித் திருடுகின்றன? அங்கு 'அருள்' விளங்குமா?

சூதாடிக்குச் சோறுகூட மறந்துவிடும; செல்வமெல்லாம் அழியும்; பண்பு என்பது பாழாய்விடும்; என்றும் மனதில் ஏக்கம் எனக் கூறுகிறார். ஆம், அரசியலிற் சூதாடுகிறார்களே (கட்சி வேட்டை; பதவி வேட்டை) இவர்களுக்கும் இதே நிலைதானே. தேர்தல் வந்துவிட்டால், தகுதியற்ற தன்னைத் தலைவனாகக் கருதவேண்டுமென்று எவ்வளவு பொருள் காலம் பண்பைப் போக்குகிறான்; எதிரியை இழித்துரைக்கிறான்! 'பொய்மேற்கொளீஇ' என்றாரே. எவ்வளவு உண்மை! அஞ்சமாட்டேன் என்கிறானே! பொய்க்கதை கட்டுவதற்கு எத்தனை பத்திரிகைகள் துணை! தந் நாட்டிலுள்ள பிறகட்சியினரிடமே இவனுக்கு அன்பில்லையே; உலகிலேயே பெரும் பகைவன் எதிர்க் கட்சி யானாய் விடுகிறானே, இவனிடம் அருள்

எப்படி வளரும்? தேர்தலில் பதினுயிரம் செலவிட்டால் பத்துமடங்கு பின்னர் பெருக்கிவிடலாமென எண்ணு கிருன். ஆனால் அழிவே மிகுதி. ஒன்றெய்தி நூறிழக்குஞ் சூது, உண்மையில் இதுவேயென உணர்கிருன். இந்தச் சூது வெற்றி கிடைத்தாலும் வேண்டாமென்கிருர் வள்ளுவர். நாட்டிற்குத் தொண்டாற்றும கட்சிக்கோ மனமுடையோர்க்கோ அல்ல, ஆனால் தன்னல வேட்டை யாடக் கட்சியிற் புகுகின்ருர்களே அவர்கட்கே இவை கூறுகிறேன்.

கொண்ட மனைவி கற்புடையவள்; அவளை விட்டுக் கண்ட கூத்தியிடம் போகிருன்; பகை, பாவம், அச்சம், பழி இன்னும எத்தனை! அதுபோல, நமது மொழியுண்டு நமது தேசீயமுண்டு; நமது நாகரிகமுண்டு; நமது இசை யுண்டு; நமது வீடுவாசல் நாடுண்டு. ஆனால் இந்த அறிவாளிக்குப் பிடிப்பதில்லை. எல்லாம் பிறருடையதிலேயே இவருக்குப் பித்து! ஆங்கிலம் பேசுவதில் தனியுணர்ச்சி. மேனுட்டார் ஆடையணிவதில் அழகு, தனது நாகரிகத்தை இழித்துரைப்பதிலும் தனியின்பம். ஹிந்துஸ்தானி, தெலுங்கு பாடல் ஒரு தருக்கு. எப்படியும் கைதொட்டுத் தாலிகட்டியவள் கூடாது, அது தானே!

'ஆயு மறிவினரல்லார்க் கணங்கு' என்கிருர். ஆம், நம் நாகரிகத்தை மறந்தவனுக்கு அறிவெப்படி விளங்க முடியும்? பிறர் மயக்கும, வெள்ளிப்பூச்சுந்தான் இவனை மூக்சுத்திணற வைக்கின்றனவே! கடைசியாக, நம்மை மிக இழிந்த (பூரியர்கள) வர்களாக மாற்றி விடுகிறது.

கண்ணுடி போட்டவன் பார்வை, இயற்கையோ முழுமையோ உடையதாகுமா? அதுபோலத் தாய்மொழி மூலம் அறிவை வளர்க்காதவன் முழு அறிவினனுக முடியுமா? ஆதலாற்ருன் இவர்களை 'நிறைநெஞ்சம் இல்லவர்' என்கிருர். ஆம், தம்மைப்பற்றியும

'நிறைவாக'த் தெரியாது; பிறரையும் 'நிறைவாகத்' தெரிந்துகொள்ள முடியாது.

கடைசியாக, கள் குடிப்பவனை யாரும் மதிப்பதில்லை; அவன் அறிவினுக்கஞ்சுவதுமில்லை. மூடப் பழக்கங்கள் பழைய வழக்கங்கள் சமயப்பித்து சாதிப்பித்து உடையோரும் அறிவிழந்து மயங்கித் திரிகின்றனர்; மதிப்பற்றுப் போகின்றனர். இவர் பேரறிவாளியென்று பெற்றபுகழுங் கூடப் பறந்துவிடுகின்றது. அறிஞர் கூட்டம் இவரை அப்புறப்படுத்துகிறது.

எவ்வளவு கூட்டத்தில், நூலில் பிறர் இடித்துரைக்கினும் இவர்க்கு நாணம் என்பது இம்மியளவும் இல்லாமற் போய்விடுகின்றது. பேரறிஞர் நூல்களைப் படித்த பிறகு இவர்கள் இப்படியொழுகுவது 'விளக்கைப் பிடித்துக் கிணற்றில் வீழ்ந்தவன' அறிவுடன்தான் ஒப்பாகிறது. பல போதுகளில் தன்னை மறந்து, பிறனிடம் இப்பிழைகளைக் குறித்துத் திட்டுகிறான; திருத்துகிறான். ஆனால அப்போது தன்னிடமே அவையுள்ளமையைத் தனியே எண்ணினானில்லை. அறுபது எழுபது ஆண்டுகள பேரறிஞரெனப் பேர் பெற்றோருமே இவைகளைத் துறந்தாரில்லை.

நீரில் மூழ்கியவனை அசல் விளக்கைப் புகுத்தித் தேடுவது போலாகும் குடியனைத் திருத்துவது என்றார். ஏன், தண்ணீரில் அமிழ்த்தும் போதேதான் விளக்கு அணைந்து விடுகிறதே! ஆனால் இன்றைய மின்சார விளக்காலாவது வெற்றி காணலாமே! ஆனால் இந்த மூட (பழமை) நம்பிக்கையில் மயங்கிய அறிவாளிகளைத் திருத்த எந்த ஒளியும் இசையாது போலிருக்கிறது.

ஏன், இந்த நான்கு வல்லரசுகள்தாமே உண்மையான உலகின் வேந்தர்கள்! இவர்களை உலகம் வென்றால்தான்

ஜாரையல்ல இவர்களேயழிக்கப் புரட்சி கண்டால்தான், உலகில் நல்லரசு நிலைக்கும். இல்லாவிடில் அமையும் அர செல்லாம் பொல்லா அரசாகவே ஆய்விடும். இந்நான்கர சும் அருளரசிற்குப் பகைவர்கள். இவை அழிந்தால் தோன்றுவது 'அறிவரசு', ஓர் அரசு; அது தான் நல்லரசு.



# தமிழ் வளம்

நிலவளம் கலைவளம்பற்றிப் பேசுகிறோம். அரசு உழவன் இயற்கையுதவி (மழை) இவை கூடி நிலவளமும ஆசிரியர் மாணவன் இயற்கைபுத்தி ஆயவை கூடி கலை வளமும் உண்டாகின்றன. எனவே 'வளம்' வேண்டின் மனித முயற்சிக்கு மேல் இயற்கைத் துணையொன்று இன்றியமையாதாகின்றது, தமிழ்மொழிக்கும் தமிழக மக்கள் மூவரசர் ஆயவருடன் ஆண்டவன் அருளும் இணைந்தமையை உணர்ந்ததாற்றுன "வளம்" ஏற்பட்ட தென்பது பொருத்தமேயாம். தென்மொழியை குட முனிக்கு வலியுறுத்தான் கொல்லேற்றுப்பாகன் என்பதில் மொழி வளத்திற்கும, மனிதனுக்கு மேலாம் ஆற்றல் ஒன்றன் துணை வேண்டும் என்ற உணர்ச்சி மக்கட்கிருந்த மைப் புலனுகின்றது. ஆண்டவனுல் மொழி அளிக்கப் பட்டது, ஆக்கப்பட்டது என்ற கோட்பாடுடைய மொழிகள் உலகில் மிகச் சிலவேயாம்,

பொன்னை வாரியளிக்கும் வண்மையால் வாழ்வு வளம படுகிறது; அருவி நீரிலும் மலை வாழ்விலும் உடல் வளங் காண்கிறோம். காட்டில் மண்டிய மரங்கொடி வளமுண்டு மருதத்தில் பசிய பயிர் வளஞ்செழிக்கிறது. கடலில் முத்து வளம். வள்ளல்களும் மூவேந்தரும் செய்த வண்மையால், அருவியையும் குறிஞ்சியையும் பற்றிப் பெருகிய பாடலால், முல்லை மருதம் இவைபற்றிய அகப்பாடலால், கொற்கை (நெய்தல்) முத்திஞல் சிறந்தது தமிழ். இந்நிலப்பகுதி களில் வளர்ந்தது தமிழ்; எனவே இதன் வளத்திற்குக்

கேட்பானேன். உடலுழைப்பால் பொருட் செலவால் உலகில் வளம ஏற்படக்காண்கிறோம். ஆனால் உயிரையுங் கொடுத்தாற்றான் உண்மைத் தியாகமும் வளர்ச்சியுமாகும் என்பது உலகம். தமிழ் வள்ளல்கள் வேந்தர் பலர் ஆகியோரது உயிரையே உரமாகக் கொண்டு உயிர்த்து உயர்ந்து வளம்பட்டதாகும் தமிழ்.

நீண்ட தலைமுறையாக (காலமாக) சிறப்புற்ற குடியை வளமுற்ற குடியென்கின்றனர். மிகப் பழங்காவியங்களாய இராமயண பாரதங்களிலேயே தமிழகத்தின் குறிப்புள் ளது. எனவே தமிழின் வளத்திற்கு வேறுதாரம் வேண்டா மன்றோ? இழுமென் சொல்லால் விழுமியது பகலும், பழுத்த, இலக்கிய இலக்கணங்களால், செழித்த விழிப் புடைய மொழி தமிழ் என்பதில் தமிழ் வளத்திற்கே அறிகுறியான ழகரம் கலந்த இழும் விழுமிய பழுத்த செழித்த விழிப்பு என்னும சொற்கள வளமுடைய பொருளின் பல்வேறு இலக்கணங்களை எவ்வளவு அழகாக எடுத்துக்காட்டுகின்றன! இழுமென் விழுப்பத்தை குறள் சிலப்பதிகாரம் அகநூல்களிலும் பழுத்த செழிப்பை கம்பராமாயண சங்கப் பாடல் எண்ணிக்கையிலும் விழிப்பை, தமிழ் எண்ணற்ற தாக்குதல்களை எதிர்த்து நின்றமையிலும் இள மாணவரும் இன்றுணர்கின்றனர். தமிழ் இலக்கணங்கூறும் ஆசானிலக்கணமே ஒரு வளம் பெற்றமொழியின் (நூலின்) இலக்கணமெனலாம். மலையின் திண்மையுயர்வும் நிலத்தின் பயனும் பூவின் மகிழ்வும் துலாக்கோலின் நடுநிலையும் ஆசிரியர்க்கிலக்கணமாம். இத்தன்மைகள் ஒரு மொழியின் நூலுக்கும் அமைந்தாற் றான் அது வளமுள்ளதாகும். அம்மொழிப் பாடலைப் படிக்கையில் மக்கள உள்ளம் பூவென மலரவேண்டும்.

மற்றும், கம்பர் கோதாவரியை வருணிக்கையில் வளம் பட்ட மொழியின் இலக்கணத்தைக் குறிக்கிறார். புவிக்கணி

யாய் ஆன்ற பொருளுடையதாய் பலதுறைகளையுமுடைத்தாய் எந்நில மக்கட்கும் (ஐந்திணை) இசைவுடைத்தாகி ஆழமும் அகலமுமுண்டத்தாய் ஆன்றோர் கவியெனக் கோதாவரி செல்வதாகக் கம்பர் கூறுவது மொழியின் தன்மைக்கும் முற்றும பொருந்தும்.

குறளின் பயனும் நடுநிலையும், மணிமேகலையின் பொருளும், எத்துறைபற்றிய தமிழ் நூல்களும், உலக முழுவதற்குமுதவும் உயர் கருத்துக்களும் பிரபந்த உரையகலமும் சங்கப்பாடலாழமும் தமிழுக்கு மேற்கூறிய மொழி வளத்தை யளித்துள்ளனவெனலாம்.

ஒருபொருட் பல சொற்களும் பல திசை மொழிகளும் (Dialects)வளத்தைக் குறிப்பனவேயாம். ஒரு கம்பெனிக்கு உள்ள பல கிளைகளின் எண்ணிக்கை அதன் வளத்தைக் குறிக்கவில்லையா, அதுபோல தமிழ் இன்பமுடையது என்பதுபோய் தமிழ் என்ற சொற் பொருளே இன்பம் என வரவேண்டின் அதுவும் வளத்தைக் குறிப்பதேயாம், தமிழில் இன்பமெனில் ஒரு பகுதியிலும ஒருபகுதியினர்க்குமே கூட ஆகலாம், ஆனல் தமிழே இன்பமெனில் அனைவரும் ஐயமற, சர்க்கரையில் இனிமையைப்போல, அதனை உணரவேண்டும், ஒப்பவேண்டும புலவர்களை மட்டுமன்றி மக்களை யெல்லாம இன்பமயமாக்கவேண்டுமெனில் தமிழுக்கு எவ்வளவு வளமிருக்கவேண்டும், இன்பமென்பது வளந்தானே?

தமிழிலக்கிய வளமே செய்யுள் வளமாம். உலகம் மிகுதியா யறிந்த பாடல்களே எண்ணில, விளம்பரமின்றிக் கிடக்கும் பாடல் அதே அளவிருக்குமெனில் தன் செய்யுள வளத்திற்குச் சொல்ல வேண்டுமோ? மீனுட்சிசுந்தரம் பிள்ளை அவர்களின் புராணப் பாடல்களை எண்ணிறற் போதுமே! காவியங்களும் தமிழில் நிறையவுள்ளன. புலவரே (கூத்தர்) ஒரு தனிப் பிரிவாக வளர்க்கப்பட்டனர்.

தமிழில் நாடகத் தமிழ் தனியே போற்றப்பட்டது. சிலப்பதிகாரம், மணிமேகலை, மனோன்மணீயம், அருணாசலக் கவி இராம நாடகம் இக்கால எண்ணற்ற உரை நடை நாடகங்கள் தமிழ் நாடக இலக்கியங்கட்கு எடுத்துக் காட்டாம். இன்று உரைநடை நூல்கள் அளவுக்கு மேலும் பெருகியுள்ளன. உரையாசிரியர்களின் பழைய உரைகளின் உரை நடையும் வளமுடையனவேயாம்.

நாவல், சிறுகதைத் துறைகளிலும் நிறைந்த அளவில் இலக்கியங்கள் மலிந்துவருகின்றன. எனவே, தமிழ், இலக்கியத்தின் எத்துறையிலும்வளம்பட்டுள்ளதெனவீறுடன் கூறமுடியும். தேவாரம, பிரபந்தம் முதலிய தமிழின மொழிவளத்தை மிகுதிப்படுத்தியுள்ளன. இவ்வகையான பாடல்கள் தமிழுக்கே சிறந்தனவாம். உலகின் வேறெம மொழியிலும் இத்தனைப் பாடல்களைக் காணமுடியாது. அப்பாடலாலும் கடவுட் பாடலாலுமே தமிழ் தனிச் சிறப்புடைகின்றதெனலாம். இலக்கண வளம தமிழுக்கே பேசப்படும் தனிப்பெருமை. பயனுடைய பொருள்களிலேயே 'வளம்' பற்றிப் பேசுகிறோம். எழுத்தைப் பற்றிப் பேசும் தமிழ் பொருளுடைய ஒலியே எழுத்து என்கிறது. எனவே பயனுடைய ஒலியே எழுத்து என வருகின்றது. அதேபோல சொல்லும (சொல்லிலக்கணம்) மனிதப் பண்புடைய மனிதனை அதாவது உயர்திணையைச் சுட்டுவது என்கிறது. எனவே சொல்லிலக்கணம் மனிதனை மனிதனாக்க வேண்டும் என்கிறது. சொல்தானே மொழி. எனவே மொழி மனிதப்பண்பை வளர்ப்பது என்ற மாண்பினை எடுத்துச்சுட்டுகின்றது தமிழ் இக்குறிக்கோளையுடையது தொல்காப்பிய சொல்லதிகாரம்.

பொருளிலக்கணம் அரசு, அமைச்சு (அறிவியல்) ஆண் பெண் உறவு (சமூகம்) ஆகியவற்றை வரையறுப்பது. இவ்விலக்கணம் வேறெம்மொழியிலுமில்லை. இதனால்

தமிழர் வெறும் எழுத்து சொல்லுக்குமட்டுமன்றி வாழ்விற்கே இலக்கணங் கண்டனரென அறிகிறோம். வளம்பட்டு இதனைக் கண்டனர்; கண்டபின் இதனால் மக்கள் வளம்பெறுகின்றனர். புறத்திணையியலில் 'வாகை' ஒன்றை ஆராய்ந்தாலே வளத்தின் மேன்மையறியலாம்.

வெறும், போரில் காணும் புற வெற்றியை மட்டும் வாகையெனத் தமிழ் கூறவில்லை. ஆனால் அதன்பின் வாழ்வில் உயர்பண்புகளை வளர்ப்பதில் தீப்பண்புகளை யழிப்பதிற்காணும் வெற்றியையே வாகையென முடிக்கின்றது. அதாவது பண்புற்ற செம்மையுற்ற வாழ்வை வாழ்வதே வெற்றியென்கிறது. அந்தண வாகை, அறிவன் வாகை, வணிக வாகை எனவெல்லாம் கூறுவதிதுவே. வீரம், பொருள், புகழ், கல்வி இவற்றில் எவரையும் வெல்லும் வாகை சூடிவிடலாம். ஆனால் வாய்மை, மெய்யுணர்வு முதலாம் உயர்பண்புகளைக் கொண்ட வாழ்வினை அவன் வாழாவிட்டால் அவனை வாகை சூடியவனாக (வென்றவனாக) தமிழின் பொருளிலக்கணம் ஒப்புவதில்லை. இதுவே தமிழின் தத்துவ, சிந்தனை வளர்த்திற்கோர் நற்சான்றாகும்.

ஒரு நாடு வளமுற வேண்டில் அந்நாட்டில் மக்களாட்சி (குடியரசு) வேண்டுமென்கிறோம். ஏகாதிபத்திய, சர்வாதிகார, குழு (Aristocratic) ஆட்சியை வெறுக்கிறோம். அதாவது மக்கள் இயல்பறிந்தாளும் ஆட்சி வேண்டும்; மேலேயிருந்து சட்டமியற்றி அதன்படி வாழவேண்டுமெனக் கட்டாயப்படுத்தும் ஆட்சி வேண்டாம் என்பதேயாகும். இம்முறையில், மொழியை நோக்கினால் தமிழ் ஒரு ஜனநாயக மொழியாகும். அது மக்கள் வாழ்வை யறிந்து (இலக்கியம்) அதற்கேற்ப இலக்கணமியற்றியது; இலக்கியம் அறிந்து இலக்கணமியம்பியது. இலக்கணமியற்றி அதற்கேற்பப் பேசவேண்டும் எழுதவேண்டுமென்னவில்லை. அப்

படியானுல் அது, ஒன்று பேச்சிலோ அல்லது எழுத்திலோ இந்நாள் இறந்துபோயிருக்கும். மற்றும் நூலிலக்கணத்திலும் இதன் வளம் புலனுகின்றது. கருத்துக்குரிமை யிருந்தாற்ருனே வளம் ஏற்படும். முதனூலிலிருந்து வழிநூல் (சிறிது) வேறுபடலாம். சார்பு நூலோ பெரிதும் வேறுபடலாம் என்று இடமளித்திருப்பதால் கருத்தும் நூலும் பலவாகப் பெருக இடமுண்டாயுள்ளது. இதுவும் தமிழின் வளத்திற்கோர் சிறந்த காரணமாம். உயிரும் அசைவுமுடையதுதானே வளரும், வளமுறும். பிணமாய், பிண்டமாய் அசைவற்றது உயிரினமையால் வளர்தலும் வளமுறலுமில்லை. இவ்வகையில் மொழியொலி நுட்பத்தை யாயந்தால் எம்மொழியில் உயிரொலி மிக்கும் ஆட்சியுடையதாயும் உயிரும் அசைவுமற்ற மெய்யொலி குறைந்தும அடங்கியுமுளளதோ அம்மொழியிலேயே வளமிருக்கும். தமிழ் உயிர் ஒலி மிக்கது. 'அகர முதல எழுத்தெல்லாம்' என்ற வரி மெய்க்கும்கூட அகரம (உயிர) அசைவுக்கிடனுகிறதெனை வுணர்கிறேம. தமிழில் மொழி முதலில் மெய் நிற்றலில்லை. மேலும் இடையில் இரண்டுமெய் இணைந்து நினருல் ஒன்று உயிரொலி ஏற்கும். அர்த்தம - அருத்தம். மண், கண், பொன், பல் என மெய்யில் முடிவனவும் மண்ணு, கண்ணு, பொன்னு, பல்லு எனவே உயிர் கலந்து வழக்கில் வழங்குகினறன. இங்ஙனம் உயிரொலி சிறந்தது தமிழ், வளி எனருல் காற்று அல்லவா? காற்றென்பது உயிர்தானே. வளி வளம், வள்ளல் என்ற சொற்கள ஒரு பொருட்டொடர்புடையன. எனவே வளிக்கும் வளத்திற்கும தொடர்புண்டு. அதன்படி உயிரெழுத்தை (காற்றை, வளியை) சிறப்பாகக்கொண்டு விளங்கும் தமிழும் வளமுடைய தென்னலாமன்றே!

இசையே தமிழெனலாம். பாவென்ற பரந்துபட்ட ஓசையே வெண்பா முதலிய நால்வகைப்பாடல்கள். பண்ணைத் தமிழும் செந்தமிழும் வளர்ந்ததெல்லாம் பாவி

ஞலேயே, உரைநடையாலன்று. எனவே பாடலாகிய இசையே தமிழெனிற் பொருந்து மன்ரே? மற்றும் பாவகைகளில் சில இசையுடனன்றி பாடவியலாதென்ற பிரிவு மற்ற மொழிகளிற் காண்பதாத் தோன்றவில்லை. பரிபாடல் கலிப்பாடல், தேவபாணி முதலிய இசைப்பாடல் கள். தமிழறிந்தோரை புலவர், பாணர் கூத்தரெனவும் தமிழை இசைத்தமிழுடன் முப்பிரிவாகவும் பிரித்தது கொண்டே தமிழுக்கும் இசைக்குமுள்ள நெருக்கம் புலனும. வேறெம்மொழியுள்ளும் இசைக்கு இவ்வளவு ஏற்றம தந்ததில்லை. தமிழோடிசைபாடல் மறந்தறியேன், நாளும இசையால் தமிழ் பரப்பும் ஞானசமபந்தன என்ற வரிகள் தமிழர் தம்வாழ்வில் இசைகொண்ட இடத்தை எடுத்துக் காட்டுவதாம. கடவுளைப்பற்றிய இசைப் பாடல்களே தமிழ்ச் செய்யுட்களில் சிறப்பனவும் ஒரு கணிசமான பகுதி யாவனவுமாம். இறைவனே "சொற்றமிழ் பாடவென்ருன்" என இறைவனது இசைத்தமிழ் விருபபினைப் பெரிய புராணங் கூறுகின்றது. சம்பந்தர்க்குப் பாடப் பொற்றுள மீந்தான் பொன்னர் மேனியன். பாணருள் நாயன்மாருமி ஆழ்வாருமி பலா. 'ஏழிசைச் சூழல்புக்கோ' இவ்வாறு மெலிந்தாய் எனத் தலைவனைப் பாங்கன் கேட்கிருன். தமிழர் இசையில் எவ்வாறு வயப்படுகின்றனர் என இது புலப் படுத்தும். பிறப்பு முதல் இறப்பு வரை விழிப்பு முதல் உறக்கம் வரைத் தமிழிசை நம் வாழ்க்கையில் இடமபெறு கின்றது. விழிக்கப் பாவைப்பாடல், உறங்கத் தாயின் தாலாட்டு. இறக்கையில் திருவாசகம பிறந்ததும பிறந்த நாள் விழாவிற்குப பேரிசைக் கச்சேரிகள். எனவே நமது இசை முழுமையுடையதாம. மேலும் வாழ்வின ஒவ்வொரு செயலிலும் இசை தமிழகத்தேகொண்ட இடம் வேறெந்த நாட்டிலுமில்லை. செயல் தொடங்கக் கடவுட் பாடலைக்கூட யான் குறிக்கவில்லை; ஏற்றமிறைக்க, நடவு நட, அறு வடை செய்ய, சுண்ணமிடிக்க, வண்டியோட்ட, செத்தால்

ஒப்பாரி வைக்க எல்லாம் இசை, இசை மயமே. குழலும் யாழும் தமிழுக்கே சிறந்த இசைக் கருவிகள். இவை முதலில் கண்டுபிடிக்கபபட்ட முறை தமிழ்ச் சங்க நூல் களில் காணப்படலாம். இவை தமிழர்க்கேயுரிய வென்பதில் ஐயமில்லை. அடைத்த கதவைத்திறந்து ஆண்டவனைக் காணவும் செத்த மகனை யெழுப்பித் தாயை மகிழ்விக்கவும் இவ்விசை பயன்பட்டதெனில் இதன் வளத்தை என்னென் றியம்புவது?

பாடல் அமைந்த மொழிக்கும் பண்ணிற்கும் (ராகம்) பிரிக்கமுடியா உறவைக் காட்டுகிறது தமிழ். இசைக்கு எந்தமொழிப் பாடலானுலென்ன என்ற எண்ணத்தை எதிர்க்கிறது. பண்ணென்னும் பாடற்கியைபின்றேல் என்பது குறள். பாடலுக்கும் பண்ணிற்கும் உறவெனில் பாடற்கருத்திறதும் பாடல் உணர்ச்சிகரும் (அதற்கமையும் ராகத்திற்கும்) உறவென்பதே பொருள். எனவே இரக்கக் கருத்துடைய பாடலை இன்பவுணர்ச்சியை எழுப்பும் பண் ணல் பாடமுடியாதல்லவா? சாகித்ய கர்த்தாவும் பாடற் கருத்தையறிய மொழியறிவுடையனாக வேண்டும். கேட் போரும் பாடற் கருத்துணர்ச்சியை அடைய மொழியறி வுடையராக வேண்டும். இதுவே உண்மைக் கலைத் தன்மையாம். கர்நாடக இசை தமிழ்க்கே யுரியதாம். கர்நாடக ராகங்களின் மேளகர்த்தா ராகங்கள் தமிழ்ப் பண் களுடன் நெருங்கியவை; அவற்றிலிருந்தே தோன்றியவை. தேவாரத்தில் 70 பண்கள் வெளியாகின்றன. சிலப்பதி காரம் முதலிய பழைய நூல்களில் இப் பண்கட்காம் குறிப்பு உள்ளன. விபுலானந்தர் யாழ்நூலே இதற்குச் சான்று. கர்நாடகத்தின் மற்றெம்மொழியிலும் (தெலுங்குட்பட) இப் பண்குறிப்பு பண்டைய அவற்றின் இலக்கியங்களில் இல்லாமையாலும் இந்துஸ்தானி இசைக்கும் கர்நாடக இசைக்கும் வேற்றுமை பெரிதிருப்பதாலும் கர்நாடக இசை தமிழிலிருந்தே தோன்றிப் பரந்ததாகும்.வேங்கடமகி

சாரங்கதேவர் இசை நூல்கள் இதற்குச்சான்று பகர் கின்றனவா யறிகிறேம்.

பொருளில்லார்க்கு இவ்வுலகமில்லை யாதலின் இவ்வுலக அடிப்படை பொருள். குறளில் அப்பொருட்பால் அருளை முதலாகக்கொண்டு மொழியப்படுகிறது. எனவே அருள் பொருட்கு அடிப்படையாகிறது. அருளின் மாறு தலைப் பெயர்த்து அருளை நிலைநாட்டுவது இசை (மறுவின பாலை) எனப் பத்துப்பாட்டுரைக்கிறது. எனவே தமிழ், உலகையே இசையடிப்படையின்மேல் எழுப்புகின்றது. இதனாற்றான் இறைவன் உலகை நாதத்தைக்கொண்டு படைக்கிருனே? சிவன் கையில் உடுக்கை, கண்ணன கையில் குழல் இருப்பது இதையே குறிப்பதாகுமோ? தமிழ்நாட்டுப் பறவையும இசையில்லாவிடில் இறந்து போகப் பார்க்கிறேம். அசுணமா என்ற பறவை இன்னிசை கேட்கும்வரை இன்புற்றிருந்து கடிய பறையொலிகேட்பின் அங்கேயே மயங்கி வீழ்ந்து மடிந்துவிடுமாம். இசை யின்றேல் தமிழ் வாழ்வு வீழ்ந்து விடுகின்றது!

இத்தகைய வளமே இவ்வுலகைத் தன்னிடங் கவர்ந் தது. எத்தனை மொழிகள் தமிழ் நூல்களை மொழிபெயர்த் துக்கொண்டன. எத்தனை மொழியினர் இதனைப்பயிலவந்து வாழ்வையே இதற்காகச் செலவிட்டனர். குமணன் முத லோர் இவ்வளத்திற்காக உயிரைவிடவும் துணிந்தனர். நந்திக்கலம்பகம் நூருவது பாடலுக்காக நந்திப் பல்லவ னின் உயிரை மகிழ்ச்சியோடு தருமாறு பெற்றுக்கொண்ட தல்லவா? செத்தபிறகும் சிதையின் அருகுவந்த புல வர்க்குச் சீதக்காதியின் பிணம் கைவிரலை நீட்டி மோதி ரத்தைப் பரிசாக அளித்ததானல் அக்கொடை யல்லவா தமிழை இன்றைய வளமபெற்ற நிலைக்குக் கொணர்ந்தன!

அறம் பொருள் இன்பத்துள் இன்பப் பாடலை மிகுத் தது சங்க காலம். இடைக்காலம் அறப் பாடல்களையும

அறவாழியனாகிய (ஆண்டவன்) கடவுட் பாடல்களையும் மிகுத்தது. இன்று பொருள் பற்றிய அரசியல், அறிவியல் நூல்கள் பெருகுகின்றன. எனவே எத்துறையும் ஏற்றங் கொள்ள இலக்கியம் மலிந்தது தமிழெனில் அதன் வளத்தை விளம்பவுங் கூடுமோ? ஆங்கிலம் முதலாம் மொழிகளிற்போல, கலைக் களஞ்சியம் இல்லையே என்ற குறையும் இப்போதகன்றுவிட்டது. ஐக்கியநாட்டு சங்கக் கலைப் பிரிவினர் (Unicef) கம்பராமாயணத்தையும் குறளை யும மொழிபெயர்த்துலகிற்களிக்கத் திட்டமிட்டுள்ளன ரெனில் இதனை வளஞ் சிறந்ததென் றறிந்தல்லவோ?

மேலும் நந்தமிழை வளமாக்கச் சில கூறவேண்டு மென்பதென்னவா? இந்தியாவும் உலக நாடுகளும் இனி தன் மொழி கலை பண்பு என்ற அளவிலேயே மகிழவோ மற்றவற்றைப் புறக்கணிக்கவோ முடியாது. மற்ற மொழி களைப் பற்றி ஆராயாவிட்டால் இனித் தமிழ் வளராது. உலகின் எம்மொழி பற்றியும அறிய இரண்டொரு மொழி களே இன்று தகுதியுடையவாயிருக்கின்றன. அவற்றுள் ஆங்கிலம் சிறந்தவொன்றும்; நம்முடன் உறவும் ஊன்று தலும் ஏற்றதாம்.

எனவே ஆங்கில அறிவு இனித்தான் நமக்கு மிகமிக இன்றியமையாததாம். உலக மொழியியல், இலக்கியம் எல்லாவற்றையும் இனித் தமிழன் இவ்வாங்கிலத்திலேயே கற்கவேண்டும், கற்க முடியும். ஒவ்வொரு மொழியையும் படித்துக்கொண்டிருக்கவியலாது, தமிழ் இலக்கியம், இலக் கணம் எல்லாவற்றையும் ஆங்கிலத்தில் பெயர்த்தளித் தல் வேண்டும். இதனில் நூற்றுக்குப் பத்துப் பங்குகூட இன்னும் நிறைவேறவில்லை. மொழிவளத்திற்காம் முதல் வேலை இதுவேயாகும்.

அடுத்தது ஆட்சியில் தமிழ் அரியணையேற வேண்டும். தமிழ் மாகாண அமைச்சர் யாவரும் தமிழறிவும் உணர்ச்சி

யும் ஓங்கியவராக வேண்டும். இந்திய மத்ய ஆட்சியில் பெரும்பதவியல் உள்ள தமிழர் யாவரும் தமிழுணர்வுடை யோராகவேண்டும். மத்திய, மாகாண ஆட்சிகளில் பதவி வகிப்போரனைவரும் தேர்ச்சியடைய வேண்டிய துணை மொழித் தேர்வில் (additional Languese Tesh) தமிழை வித்வான் அளவிறகுத தேர்ந்தாக வேண்டுமென்ற கட்டாயம் ஏற்பட வேண்டும். இது பேராசையோ, வீணாசையோ தேவையில்லாததோ அன்று. தமிழில் எவ்வளவுககெவ்வளவு தேர்ச்சி கூடுகிறதோ அவ்வளவு பதவியிலும் அவர்கட்கு உயர்வு கூடும்படிச் செய்ய வேண்டும்.

இனி B. A., M. A. முதலாம் தேர்வுகட்கு தமிழ் மொழிப் பகுதித் திட்டத்தைத் (II பகுதி) தாமுயர்த்தி இன்னும் நல்ல நிறைந்த அறிவும் தேர்ச்சியுமுடையதாக்க வேண்டும். அவர்கட்கு அதிகமாகச் சொல்லிக்கொடுத்து அதாவது கேள்விச் செல்வத்தை மிகுதியாக்கி, தேர்வில் கேட்பது குறைவாக இருக்கவேண்டும். செல்வத்தை நாட்டிறகுப் பொதுவாக்குவதற்குமுன் எண்ணத்தையும் கருத்தையும் எழுத்தாளர் அறிவையும் நாட்டிற்குப் பொதுவாக்கவேண்டும்.எத்தனையோபேர் எழுதிவைத்துக் கொண்டு வெளியிட்டு நூலாக்கமுடியாமல் வெளியிடுவதில் ஏற்படும் பல்வகைத் தடைகளால் ஏங்கி மங்கிக்கிடக் கின்றனர். இதனால் அவர் எண்ணுந்திறனும மேலும் எழுதுந்திறனும் நாளடைவில் மங்கிப்போகின்றது. இந் நிலை மாற, எண்ணிய எழுதிய நற்கருத்தெல்லாம் உதவி வெளியிடப்பெற்று உடனே நாட்டிற்குரித்தாகவேண்டும். நலலெண்ணமொன்றும வெளிவராமல் ஆசிரியனொருவ னிடமே தேங்கவிடலாகாது. அதற்கு அரசாங்கமோ, செல்வவள்ளல்களோ முன்வர் வேணடும். எல்லாவற்றிற் கும் ஆட்சி துணையாவதெனபது இன்று முடியப்போவ தில்லை. எனவே இன்றும் எண்ணற்ற குமணர், பாரி, சீதககாதிகளின் தோற்றத்திற்குத் தேவையுள்ளது. பொருளுள்ளோர் முந்திக்கொண்டு இப்பணியினை ஏற்று நடத்தவேண்டும். அப்போது தமிழ் வேண்டிய அளவிற்கு வளமடையும்.

# தமிழ்ப் பெண்மை

சிறப்பாக ஆணின் தன்மைகள் ஆண்மை எனப் படும். பெண்ணின் தன்மைகள் பெண்மை. உலகை ஆளத் தக்க இயல்பு ஆண்மை. மக்கள் விரும்பத்தக்க இயல்பு பெண்மை. 'ஆளுதல்' என்பதிலிருந்து ஆண்மையும். 'பெட்பு' என்பதிலிருந்து பெண்மையும் பிறக்கும் சொற்க ளாம். 'இவற்றால், ஒருவர் இயல்பு மற்றவரிடம் ஆகா தென்பதன்று. ஆண்மையற்ற பெண் அடிமையாவாள். பெண்மையற்ற ஆண் அரக்கனாவான். ஆனால் ஒவ்வொரு வரிடமும் பூனைத்து நிற்க வேண்டுவது அவரவர் தன்மையே. இங்கு ஆராய முயல்வது தமிழ்நாட்டில் இது வரை வளர்ந்துவந்த பெண்ணியல்பினை. அதனைத் தமிழ் இலக்கியங்களைக் கொண்டுதானே அறியமுடியும்? பெண் ணியல்பென்பது தனித்தது ஏதோ கூடப்பிறந்ததன்று. அந்தச் சமூக மக்களும் சிறப்பாக அறிஞரும் எவற்றைப் பெண்ணியல்பென ஏற்படுத்துகின்றனரோ, ஏற்கின்ற னரோ அவையே பெண்ணியல்பாம். நாட்டிற்கேற்ப, காலத் திற்கேறப் பெண்ணியல்பு மாறுபடும்.

இந்திய நாட்டில் ஒருகாலத்தில்-ஏன், இன்றும் மலை வகுப்பாரிடம்-ஒரு பெண் பல ஆடவரை மணத்தல் பெண்மை (கற்பு) யெனப் போற்றப்பட்டதைப் பாரதம் கூறும். இன்று, மேனாட்டில் ஒருவன் மனைவி பிற ஆட வரைத் தழுவி நடனம் ஆடுதலைப் பெண்மையாகவே ஒப்பு கின்றனர். ஆனால், இன்று நம் நாட்டில் இவை யிரண்டும் பெண்மைக்கு மாறெனப் பேசப்படுவன. பிற ஆடவனைக்

காமக்கண் கொண்டு பார்ப்பதே குற்றமாம். இவற்றால் பெண்மை, ஒழுக்கம் என்பனவெல்லாம் குறிப்பிட்ட, நிலையானவையாக ஒப்புக்கொள்ளப்பட்டனவல்ல எனவே உணர்கிறோம். நாட்டின் பொருளாதாரம்; மக்கள் பெருக்கம்; அறிவுயர்வு இவற்றிற்கேற்ப ஒழுக்கம் வளர்வதும் ஓதப்படுவதும் போலும!

மூன்று நிலைகள் :- நன்று. தமிழகத்தில் பெண்மை எப்படிப் பேசப்பட்டு வந்தது போற்றப்பட்டு வந்தது? அதனில் ஏதும மாறுதலுண்டா வளர்ச்சியுண்டா?

மாறுதலுண்டு; ஆகவே வளர்ச்சியுமுண்டு. தமிழ்ப் பெண்மை மூன்றுபடிகளைக்கொண்டது; எனவே மும்முறை மாறுதலடைந்துள்ளது. ஆனால் மேல்நோக்கித் தான, உலகுடன் ஒன்றித்தான்; எனவே வளர்ச்சியே பெற்ற மாறுதலின் பயன் எனலாம்.

அடக்கம், வீரம், அறம் எனபனவே அம்மூன்று நிலைகள். சங்க காலம்வரை 'அடக்கம்' பெண்ணியல்பாய் அமைந்திருந்ததெனலாம். கண்ணகி காலத்தில் 'வீரம்' பெண்ணியல்புடன் பிணைக்கப்பட்டது. உடனே, மணிமேகலைக் காலத்தில் சிறப்பாக 'அறம்' முன்னிரண்டியல்புடன் மொழியப்பட்டு, மகளிர் இயல் மூன்றாயினவெனலாம்.

பண்டைக் காலத்தே 'பெருங்கோப்பெண்டு' என்ற தமிழ் மகள் ஒருத்தி, நல்லறிவுடையவள்; பாடல் இயற்றும் பெருமையுடையவள். அவள் கணவனை இழந்தாள். தீபாய்ந்து இறக்க முற்படுகிறாள். அறிஞர் பலர் தடுக்கின்றனர். 'ஈம விறகின் எரிச்சல் பிறர்க்குத் துன்பமாகட்டும், ஆனால் அது எனக்குக் குளிர்ந்த தாமரைப் படுக்கை போன்றது' எனப பாடுகிறாள்.

இந்தியாவில் 'பெண்டிங்' காலம்வரை உடன்கட்டையேறும் வழக்கம் இருந்ததல்லவா? அன்றும் கைம்மை கொடிதென்பதனை அவள் பாடல் அறிவிக்கின்றது.

அன்று அடக்கமே சிறந்த பெண்மை என்ற காலம். கைம்மைத் துன்பத்தைப் பொறுத்தலே 'கற்பு' என்றனர். அறிவிருந்தும் அக்காலக் கொள்கைக்கு அடங்கினர். மற்றோர் பெண் ஆற்றில் மிதந்துவந்த மாம்பழமொன்றை எடுத்துப் புசித்துவிட்டாள; குற்றமில்லை. ஆனால், நன்னன் என்ற அரசன, ஏனோ அவளைக் கொன்றுவிட்டான். ஆடவரை எதிர்த்து, அரசரைத் திருத்தும் அறிவிருந்தும் அடக்கத்தால் உயிர்விட்டாள். வீரமிருந்தால், பெண்கள் மட்டும தனிமை கொடுமைக்குட்படமாட்டோம் என எதிர்த்து நின்றிருப்பர்.

கண்ணகி வீரம்: அந்த 'வீரம்' கண்ணகியிடம் காண்கிறது. அரசன் முறைதவறினால் அவன ஆட்சியைச் சிதைப்பது பெண்மை; கணவன் இறந்தால் கைம்மை நோற்று மூலையில் முடங்கிக் கிடப்பதல்ல பெண்மை எனக் கண்டாள்; சீறி எழுந்தாள்; வீரங்கொண்டாள; சமூகக் கட்டுத் தகர்ந்தது; அவளை அடக்க முடியவில்லை. ஆனால் அதுவும் பெண்மைதான் என அணைத்துக்கொண்டனர்; அறிஞர் ஒப்பினர். இளங்கோ இலக்கியம் பாடிப் போற்றினன்.

அன்றுவரை அடக்கமும் வீரமும் பெண்மையாய் அமைந்தன. அறம் பிணைக்கப்படவில்லை. அறம் இணைந்திருந்தால் கண்ணகி கணவனையே நினைந்து ஏங்கி இறந்திருக்கமாட்டாள் ஆம், சேரநாட்டில் வேங்கைமர நிழலில் 'தேவரும் கணவனும்' வந்து அழைத்தேகினர் என்பது கற்பனை, காவியச்சுவை. ஆனால் அவளைப் பிரிந்தாற்றமல் உண்ணா நோன்பில் உயிர்நீத்தாள் என்பதே உண்மை. அவள், தான் கண்ட பெண்மை வீரத்தை நாடு முழுவதும் பரப்பிப் பணிசெய்து வாழ்ந்திருந்தால் நாடு நற்பயன் பெற்றிருக்கும.

அந்த அற (தொண்டு) வாழ்வு அவள் மகள் மணிமேகலைக் (மாதவி மகள் கண்ணகிக்கும் மகள்தானே)

காலத்தே பெண்மையுடன் மலர்ந்து, அடக்கம்-வீரம்-அற மென மூன்ருக ஒன்றிய காட்சியளித்தது.

இன்பக்கேணி: தனிமை வாழ்க்கையைத் துன்பத்தி லாழ்த்தாமல், ஆழ்ந்து மடியாமல், நாட்டிற் குழைத்து நல்லறமோதி வாழ்வை இன்பக் கேணியாக்கிய இனனற மும் அவளிடம் முழுமையடைந்தது. உண்மைப் பெண்மை அவளிடத்தே ஓங்கியது. அந்த நிலை இன்றும் பரவவில்லை; ஆனல் சிலரிடத்தே உண்டு. உலகமுழுதும் உணரப்படு கின்றது. அடக்கம் பொதுவாக உலகில் அமைந்துள்ளது. தம் உரிமைக்குப் போராடவும அதனைக் காத்துக்கொள்ள வும் வேண்டிய வீரம் மேனுட்டாரால் தூண்டப்பட்டுள்ளது. அறத்தின் மேன்மையை இன்று காந்தியடிகள் வற்புறுத்தி வருகிருர்.

அடக்கம் தவிர, பெண்களுக்கு ஆண்மையூட்டி வீரங் காட்டிய கண்ணகிகள் உலகில் பலருண்டு. பத்மினி, ஜோன் ஆப் ஆர்க், அல்லி இவர்களின் போர்வீரம் போற் றப்படுவதாகும். பெண்ணுரிமையைத் திண்மையுடன் காக் கும கமலாதேவி, அருணு ஆசப் அலி போன்ருேர் உறுதி பெண்கட்கு வேண்டும. அந்த உறுதி, அடங்கிக் கிடக்கும் தனிமைத்துயர் அறுத்து உரிமைக்குப போராடும். இன்று இந்திய கிராமங்களிலுள்ள பெரும்பாலான பெண்கட்கு இவ்வுரிமை வீரம் வேண்டும்.

அத்துடன் அறமும் வேண்டும். இனி ஆடவர்க்கு மிக்க அலுவலுண்டு. பெண்கள ஆசிரியராக வேண்டும. கைம்மை நோற்றுக் கருத்தழிந்து 'தனிமையில் புழுங்கு வதை விட நாட்டின் நலத்தில் நாட்டம் வைத்து, தனித் துத் துவளும் மனதிற்குத் தொண்டினைக் கொழுகொம பாக்கி விடவேண்டும. இனறு விதவைகள் ஆசிரியரானல் கல்வி நன்னிலையடையும. விஜயலக்ஷ்மி ஐக்ய நாடுகளின் முன் அறம்பேசி ஆரவாரிக்கிருர். சரோஜினிதேவி நல்லறங் களை நயமுடைய பாடலாக்கி நாட்டிற் களிக்கும கவியாய் விட்டார். அவர்கள் உள்ளம் செழித்து விட்டது. கணவனை இழந்தோர் யாவரும் அவரைப் பின்பற்ற வேண்டும். இங் ஙனம் பெண்மையில் 'மூன்றும்' பிணைந்தால் இன்பமும உரிமையும் ஏற்றமும் எழில்பெறும், நாடும் நலம்பெறும், ஏன், ஞாலமே வளமடையும.

# தமிழ் நடை

நாட்டிற்கு உரிமை வந்ததாம். இனி மொழி வளருமல்லவா? தமிழ்ப் பேச்சு நடை பற்றி எழுதவேண்டிய கடமை வந்துவிட்டது. மக்கள் பேச்சானது அறிந்தோர் தெரிந்தோராது எழுத்து நடையையொட்டியே அமைகின்றது. மொழியைத் தனிப்பாடமாகப் படித்தவன் இன்னும் தமிழை ஆராய்பவன் என்ற உரிமையில் என்னுடைய கருத்துக்கள வெளியாகின்றன.

இதுவரை அடிமை நாடு மொழி (கல்வி) யறிவில்லாத பெரும்பான்மையோர் நாடு. தமிழ் நடையைப்பற்றி யாராய்வோரோ, நினைத்ததெல்லாம் கூறினர். தமிழுணர்ச்சியற்றவன், தமிழ்ச்சுவை யறிந்த பிறமொழி மோகத்தில் மயங்கியவன், எல்லாம தன் கையிலிருப்பதாக எண்ணிய அரசியற் கட்சியைச் சேர்ந்தவன அனைவரும் கூறினர். சோற்றைப்பற்றியே கவலைகொண்ட மக்கள், மொழியறிவில்லாத மககள் சொன்னதையெல்லாங் கேட்டனர். உரிமை வந்த பிறகும் அங்கில உதவுமா? நாகரீகத்தை நினைக்கிறோம்; மொழிவாரி நாட்டைப் பிரிக்கிறோம். இப்போது உண்மையான தமிழ் நடை என்ன என அறியத் தானே வேண்டும்.

•

எல்லோருக்கும் உரிமை: ஒரு பொருளைப் பற்றிக்கருத்துரைப்பது வேறு. முடிவுகட்டிச் செயல் முறைக்குக் கொண்டுவருவது வேறு. எல்லோருக்கும் கருத்தையுரைக்கும் உரிமையுண்டு. முடிவுகட்டும் உரிமை அந்தத் துறையில் தேர்ந்த அறிஞர்க்கேயுண்டு. அடிமை நாட்டில்

ஆங்கில அறிவு கற்ற நம்மிடம் ஒரு நன்மையும் ஒரு தீமையும் தோன்றின. உரிமைக்குப் போராடவும் கருத்தை யார்க்கும் அஞ்சாமல் வெளியிடுவதுமான துணிவு கொள்ளவும் நேர்ந்தது நன்மை; ஒரு துறையிற்பெற்ற அறிவாற் செருக்கி எல்லாத்துறையிலும முடிவுகட்டிச் செயலாற்ற முந்தொடங்கும் வறட்டுத் துணிவே தீமை. அரசியலில், ஆராய்ச்சிக்குழு அமைக்கிறார்களே! சரித்திரத்துறைக் கென்றால் சரித்திரப்பேராசிரியர்கள், அதில் நல்ல அறிஞர்கள் இவரையே அந்தக் குழுவில் அமைக்கிறார்கள். பொருளாதாரப் பேராசிரியனையோ. அறிஞனையோ அதில் அமைப்பதில்லை. அப்படித்தான் பொருளாதாரத்திற்கும். உலகில் எதற்கும் இப்படித்தான்.

சென்னை துணி 'மில்' கொள்கை வெளியானபோது எல்லோரும் அதைப் பற்றி எடுத்துரைத்தனர். ஆனால் முதலமைச்சர், பொருளாதார அறிஞர்கள் 'மில்லை' நடத்தும் பழகிய அறிவுடையவர்கள் என்ன கூறுகின்றனர் எனத்தான் உற்றுப்பார்க்கிறார். அமைச்சர் திட்டமும காந்திஜி திட்டமும், அகர்வால் போன்ற பெரிய பொருளாதார ஆசிரியரால் போற்றபபட்டதேயாம். நான் மொழியில் தேர்ந்த அறிஞன் என்பதனால் எனக்கு அத்தகைய குழுவில் இடங் கேட்பதா, கொடுத்தாலும் போவேனா? ஆனால் மொழியில் மட்டும் யாரும் எதுவும கூறுகின்றனர்; முடிவுகட்டி நடத்துகின்றனர், நாமும் பின்பற்றுகிறோம். அரசியலில் அறிந்தவன் ஆங்கில அறிஞன என்பதற்காக அவனைத் தமிழிலும் சிறந்தவனாக ஏற்கமுடியுமா? தமிழிலும் தன்னை மெய்யறிஞனாகக் கருதுவது முறையா? இன்னொரு வியப்பு, மொழியறிஞர் கூறுவது மூடத்தனம் எனவும் புறக்கணிக்கிறோம்! முற்காலத்தே அரங்கேற்றம இருந்தது. இக்காலத்தே உரிமை நாடுகளில் அரசாங்கக் 'கட்டுப்பாடுகள' உண்டு. இந்த நாட்டில் ஒன்று மில்லை. தான் நினைப்பதெல்லாம் நடையாம். செய்தித்தாள

யாவினாலும் பரவிற்று, மனம் போனபடி எழுதுகிறான், பதிப்பித்துத் தள்ளுகிறான். யாருக்கும் நாலுபேர் இருப்பார்களே புகழ்வதற்கு! தலைகால் தெரியவில்லை. மொழி நூலை ஆராயும் சிறந்த அறிஞர்களெல்லாம் கூறுவதற்கு முற்றும் முரணாயிருப்பதனாற்றான் இவ்வளவும் சொல்லுகிறேன்.

எது தமிழ்: எது தமிழ் நடை? மக்கள் பேசுவதே தமிழ் அதுவே நடை! அவர்கள் நான் பேசியபோது கை தட்டினார்கள், ஆகவே நான் எழுதுவதே நடை. மக்கள் குழந்தைகள் மாதிரி: அறிந்தோரும் தெரிந்தோரும் சொல்லுகிறபடியெல்லாம் ஆடுபவர்கள். அதுவும் அடிமை நாட்டில் எழுத்தறிவற்றவர்தானே! பாணிக்கிரஹண சுப முகூர்த்தம்' எனப் பதிப்பித்தபோதும் ஏற்றுக்கொண்டார்கள். இன்று 'திருமண அழைப்பிதழ்' என்றாலும் ஏற்கின்றனர். இராவணனா, இராமனா யார் ஆண்டாலென்ன என்று பேசினாலும் கைதட்டினர்; ஆங்கிலேயன், நாங்கள் ரயில், தபால், ஏற்படுத்தினோம், ஒற்றுமைப்படுத்தினோம் என்றானே அப்போதும் கைதட்டினர்; நேரு இந்தியாவை வேற்றவர் ஆளவிடோம், நமக்கு யாவருக்கும் சோறும் உடையும் வீடுந் தேவை என்றாலும் கை தட்டுகின்றனர். 150 ஆண்டு அடிமையைப் பொறுத்திருந்தவர்கள் கள் குடித்துக்கொண்டிருந்தவர்கள் முதலாளியிடம் மண்டியிட்டுக், 'கிடந்தவர்கள்! மக்கள் விரும்பிய வாழ்க்கையென அடிமையை ஏற்கிறோமா, கள்ளை ஒழிக்காமல் இருக்கிறோமா, பொதுவுடைமையை நிறுத்தி வைக்கிறோமா? இவைகளிலெல்லாம் அவர்களைத் திருத்தவேண்டும்; மொழியில் மட்டும் இருப்பதை அப்படியே ஏற்றுக்கொள்ள வேண்டுமோ? அமெரிக்காவின் மாதொருத்தி இந்தியத் தாய் (Mother India) என்ற நூலையும் யாரோ ஒருவன் இந்தியாவின்மேல் தீர்ப்பு (Verdict on India) என்ற நூலையும் எழுதிய

போது எவ்வளவு எதிர்த்தோம்; வெறுத்தோம். அடிமை மக்களை அறிவில்லாத மக்களை, அவர்களுடைய வாழ்வை வைத்து மதிப்பிட்டது மடத்தனம் எனவெல்லாம் கண்டித்தோமல்லவா? மொழிக்கு மட்டும் அவர்களை வைத்து முடிவுகட்டுவதில் என்ன முறையுண்டு நெறியுண்டு?

காரணம், நமக்கே மொழியிற் போதிய அறிவில்லை. பிற மொழி யறிவே மிகுதி. நாட்டுப் பற்றுடையோருகக் காட்டிக்கொள்ளவேண்டும். கேட்டது, ஆறுவதுவரை படித்துப் பேசுவது, இவற்றையே வைத்துக்கொண்டு அதற்கோர் கொள்கை வகுத்துக்கொண்டு அதற்கோர் கூட்டம் கூடிக்கொண்டு தன்கையில் ஒரு செய்தித்தாளை வைத்துக்கொண்டு நடக்கிறோம். அதன் பெயர் மக்கள் மொழி. திண்டாட்டமும் எதிர்ப்பும் தோல்வியும் கிட்டும் போது, மேலை நாட்டு அரசாங்கங்கள் 'இது உள்நாட்டுத் தகராறு, மற்ருேர் குறுக்கிடவேண்டாம்' என்பர். அது போல இவர்கள் அறிந்த அரைகுறை மொழி யறிவை வைத்துக்கொண்டு 'இதுவே மக்கள் தமிழ்' என்கின்றனர்.

சகல பாடத்தையும் தமிழிற் கற்பிக்கவேண்டும் என்று கூறியபோதும், தமிழிசை தமிழ் மக்கட்கு வேண்டும் என்றபோதும் எதிர்த்தோருடைய உணர்ச்சியே இங்கும் அடிப்படையாக உள்ளது. மொழியுணர்ச்சியில்லாமையும், இருப்பதைக் கொண்டே தலைமைதாங்க வேண்டுமென்ற வீணாசையும், நாட்டுநலன்கருதி விட்டுக்கொடுக்காமையும் சிறிது முயன்று மேலறிவுபெற முடியாத சோம்பலுமே இதற்கெல்லாம் காரணம். இரண்டு ஆண்டுத் திட்டத்தில் நல்ல தமிழ் நடையை மக்கள் புரிந்துகொள்ளச்செய்ய முடியும். திருக்குறளைச் சொன்னவுடனே கருத்தைப் புரிந்துகொள்ளுமளவில் ஐந்தாண்டுகளில் முன்னேற்றக் கூடும். எல்லோருக்கும் பரவும் செய்தித்

தாளும், அரசும் ஒத்துழைக்க வேண்டும். ஐந்தாண்டில் அணுவைக் கண்டுபிடிப்பேன், 'காஸ்மிக்' கதிரைக் (Cosmic Ray) காண்பேன் என்கிறான் மனிதன். நல்ல நடையைப் பழக்குதலா ஒரு பெரிய வேலை! மனம் மாற வேண்டும் அவ்வளவுதான்!

தமிழின் வரி வடிவில் இருப்பது தமிழென நினைக்கிறோம். வாட்இஸ்யுவர்நேம் (What is your name) இது தமிழா? சொற்கள் தமிழாக தமிழ்ச் சொல்தான் எனத் தமிழறிஞர் ஒப்புவதாக மற்ற மொழியறிஞர் 'ஆம்' என விட்டுக்கொடுப்பதாக இருக்கவேண்டாமா? பாணிக்கிரஹண சுப முகூர்த்தத்தை வடமொழிப் பண்டிதர் இவை தமிழ்ச் சொற்களென விடவும் மாட்டார்; தமிழறிஞர் கூறவும் மாட்டார். இன்றைக்கு 'ஹெல்த்' (Health) ரொம்ப 'பாட்' (bad) சார். இவற்றை ஆங்கிலேயர் விடுவாரா? இவையே மக்கள் பேசுவது, இவை தமிழா?

இலக்கணம் வேண்டாம். இஃதோர் கட்சி? கணக்கில் 4, 5 வாங்குவோன் கணக்கே வேண்டாம் என்றால், அவன் கட்சியிது! கணக்கில்லாவிடில் 'என்ஜினீயரிங்' விஞ்ஞானம் என்ன ஆகுமோ அதேபாடுதான் இலக்கணமில்லாத மொழியும்! நாட்டிற்குச் சட்டமில்லாமலும், சட்டத்திற்கு முறையை நினையாமலும் நடத்த முடியுமானால் அக்காலத்தே மொழியை இலக்கணமின்றி நடத்தலாம். சட்டத்தையோ, முறையையோ எல்லோரும் படித்தா வாழ்கின்றனர்; கொத்தனெல்லாம் கல்லடுக்குகிறான்? தலைவர் அறிந்திருப்பர்; வழிகாட்டுவர்; தலைமைக் கொத்தன் ஆணியடித்திருப்பான்; திருத்துவர்; அதன்படி, மற்றோர் நடப்பர். அவ்வளவுதான்! சட்டமும் முறையும் பிடிக்காவிடில், புரிந்துகொள்ள முடியாவிடில் ஏற்றபடி அமைத்துக் கொள்ளலாம்; அது வேறு. அதற்கெனச் சட்டமே வேண்டாமெனில், நாடும் மொழியும் நாசமாய்ப் போக வேண்டியதுதான்.

எந்த எழுத்தானலென்ன! 'ர' போட்டாலென்ன 'ற' போட்டாலென்ன! இது 'ரயில்வே' தமிழின் மூளை! சில சீர்திருத்தக்காரர் மூளை! அ'ற'த்திற்கு அரம் எழுதினல் குறளைப் படிப்பதை விட்டுக் கொல்லன் கடைக்குப் போய் விடுவான், அரம் வாங்கிவர. அரத்திற்கு (வாள் கூராக்கும் அரம்) அறம் எழுதினல் குறளைப் படித்துக்கொண்டிருந்து வாளைக் கூராக்காமலே விட்டுவிட்டு மரம் அறுபடாமல் உதையும் வசையும் வாங்குவான் அவ்வளவுதான். இந்தச் சீர்திருத்தத்தை யெல்லாம் ஆங்கிலேயரிடம்-இங்கிலாந்து போகிறார்களே-காட்டமாட்டேனென்கிறார்களே, அவர்களாவது கொஞ்சம் திருத்திவிடுவார்கள்! பையா, 'Pad' (கீழே வைத்தெழுதும் அட்டை) எழுதென்றபோது அவன் எந்த எழுத்துப்போட்டா லென்னவென்று 'Bad' என்று எழுதினல் அவன் மூளை Bad (பழுதாக) ஆய்விட்டதெனத் தானே கருதுவர்கள் அறிஞர்!

இது கடுநடை, விளங்க வில்லை மக்கட்கும் விளங்க வில்லை இந்த நூல்களைக் கடலில் எறிந்து விடவேண்டும் இது ஒரு சட்டம்! ஷேக்ஸ்பியரும், சாசரும் எல்லோருக்கும் விளங்குகின்றதா? பி. ஏ., எம். ஏ. படித்த ஆசிரியரும் திண்டாடுகின்றனர்; ஆங்கிலத்தையே சிறப்பாக எடுத்துப் படிப்போரும் திணறுகின்றனர். 'இண்டர்' அறிவில்லாமல், கருத்தைக்கூட விளங்கிக்கொள்ள முடியாது. அவற்றையும் கடலில் எறிந்து விடுவோமா? ஷேக்ஸ்பியரை விளங்கிக் கொளளத் தனி இலக்கணம்; அகராதி!

நடையிலும் அப்படித்தான். வெல்ஸ், ஷா, பேகன் இவர்கள் நடை சிறிது கடுமைதான். விவேகானந்தர் ஆங்கில நடை எளிது. அதற்கென அவற்றைத் தேம்ஸ் நதியில் எறிந்துவிட்டார்களா? பூதநூல் (Physics) படிக்கத் தொடங்கியதும் ஈன்ஸ்டீன், இராமன் அணுமுறைகளெல்லாம் அறிந்துவிடவேண்டுமா? அறிவு வளர்வது; பலதரப்

படிகளுடையது: மேல்த்தரத்தானுக்குக் கீழ்த்தரத்தான் அறிவு வெறுத்துவிட்டது; பிடிக்காமலிருக்கலாம். கீழ்த் தரத்தானுக்கு மேலான அறிவு விளங்காது. அவரவர்க் குரியது கொடுத்தால்தான் பிடிக்கும். அணுவை ஆராய்ப வனுக்கு நான்காம் 'பாரத்'தின் பூதநூல் இன்பமளிக் குமா? இவனுக்கு அணுவாராய்ச்சி விளங்குமா? எல்லோ ரையும் ஒரே நிலையில் வைப்பதென்றால் அறிவு வளர்வதாக இருக்க முடியாது; மரக்கட்டையாகத்தான் இருக்கும். கீழுள்ளவர்களைச் சிறப்பாக உயர்த்தும் வழியில் எழுதத் தான் வேண்டும். அதற்கென எல்லோரும் எதனையும் அப்படியே எழுத வேண்டுவதில்லையே! வீண் தகராறு செய்யும் இவர்கள் சண்டையைவிட்டு அவர்கட்காக எழுதி னாலே ஆயிரம் ஆயிரம் எழுதலாமே! இன்று நாட்டில் பெரும்பாலும் அப்படி எழுதத்தக்க அறிவுதானே உள் ளது! விஞ்ஞானத்தில் அணுவையாராயும் அறிவு, இன்று தமிழ் மொழியில் நால்வர்க்குக்கூட இராதே!

ஆங்கிலம் எப்படி வளர்ந்தது? அதைப்போல பிற மொழியிலுள்ள எந்தச் சொல்லையும் சேர்த்துக்கொண் டால்தான் தமிழ் வளரும் என்பது ஒரு கட்சி. ஆங்கில நாகரிகத்தையும் (உள்ளம்) செயலையும (ஏகாதிபத்தியம்— செயல்) வெறுக்கும் நாம் அவர்கள் மொழி (சொல்) யை மட்டும் ஏன் முன்னேற்றத்திற்கடிப்படையாக வைக்க வேண்டுமோ தெரியவில்லை. ஒருவனது உள்ளமும் செய லும் ஒன்றாகவும சொல்மட்டும் வேறாகவும் அமையுமா? அவர்கட்குப் பணமும் வாணிபமும் முதன்மை. அவர்க் கென ஒரு மொழி கிடையாது. எப்படிச் சுரண்டி, எந்த வழி யிற் பணம் வந்தாலும் ஏற்றுக்கொண்ட மாதிரி, எந்த மொழியிலுமிருந்தும் சொல்லை ஏற்றுக்கொண்டார்கள். அவர்க்கென பழமையான நாகரிகமா, பண்பா, ஒரு மொழியா, எது உண்டு? எல்லாம் இப்போது வளர்ந்தது தானே! அதையுந்தான் அறிந்துவிட்டோம். ஹெகல்

உலக நாகரிகத் தத்துவம் (Philosophy of World Civilisation) எழுதினான், அதில் ஆங்கில நாகரிக முண்டா?

கடன் வாங்குதல்: ரோம், கிரீஸ், ஜெர்மன் இவற்றைப் பற்றிக் குறித்திருக்கிறான். இவை மறந்தபின், மாறியபின் லத்தீன், ஹீப்ரூ, கிரீக் முதலிய மொழிகளிலிருந்துதான் கிட்டத்தட்ட 70 சத வீதம சொற்களை ஆங்கிலம் கடன் வாங்கியதாகச் சொல்கின்றனர்; அதன் அடிப்படை ஸாக்ஸன்மொழி; அதுவே சொந்தம்; அந்த மொழிச்சொற்கள் 30 சத வீதம் தானும்.

இப்படி தம் கருத்தை வெளிப்படுத்தப் போதிய சொல் லின்றிக் கடன் வாங்கியது ஆங்கிலம்; நம்மிடம் போதிய சொற்கள் இருக்கவும் கடன் வாங்கவேண்டுமா? இல்லாத சொல்லென எடுத்துக்காட்டி எத்தனையும் கொடுக்கட்டும், தமிழ் நன்றியுடன் வாங்கிக்கொள்ளலாம். ஆனால் அந்தச் சொற்கள் தமிழில் இல்லையெனத் தமிழறிஞர்கள் ஒப்ப வேண்டும். நம்முடைய பஞ்சை ஏற்றிவிட்டுப் பிற நாட்டி லிருந்து அதே பருத்தித் துணியை வாங்கினால் எவ்வளவு இழிவாக, பொருளாதாரக் கேடாக எண்ணுவோமோ, அதைவிட இழிவு நமது மொழியிற் சொற்களிருக்க அதே சொற்களைப் பிறமொழியிலிருந்தும் கடன் வாங்கி எழுது வது. இல்லையா, உண்டா என்பதைப் படித்தறியலாம்; இல்லாவிடில் அறிந்தோரைக் கேட்டறியலாமே!

தமிழிலுண்டு: கற்புடைய மனைவியைப் பெற்றவன் அவள் ஒருத்தியோடமைவான், பிறன் மனைவியை எப் போது விரும்பினானோ கணக்கா உண்டு, எத்தனை பேரை யும் விழைவான்! அதுபோல, ஆங்கிலம் அரைகுறை மொழி, அதற்குப் பிறமொழி உதவி தேவையிருந்தது; பிறமொழியென்றால் எல்லாம் பிறமொழியாகவே, வேண் டிய அளவு சொற்களை வாங்கிக்கொண்டது.

நமக்கு ஒரு நாகரீகமுண்டு; பழமையான மொழியுண்டு; போதிய சொற்களுண்டு; உணர்ச்சியுண்டு,

விஞ்ஞானச் சொற்கள தமிழிலுண்டா? எந்த மொழியில் தான் உண்டு? விஞ்ஞானந் தோன்றுமுன் எந்த மொழியிலுமில்லை. ஆகவே அது தனிக்கலை. அதைத் தவிர்த்து, உலக மொழிகளில் உள்ள நடைச்சிறப்பெல்லாம் தமிழிலுண்டு. இன்று விஞ்ஞானம் புதிது; வேண்டிய சொற்களைப் படைக்க முடியும்; முடியாத சொற்களை அப்படியே எடுத்துக்கொள்ளலாம். ஜெர்மன் ஜப்பான் முதலிய நாடுகள் இன்று விஞ்ஞானச் சிறபபுற்ற, தெல்லாம் அவற்றின் மொழியிற்றான்; ஆங்கிலத்திலல்ல. ஆங்கிலமும் தமிழும் தீர ஆராய்ந்த தமிழ் அறிஞர் பலருண்டு. அவர்களைக் கேட்டால் கலைச்சொற்கள் எவ்வளவும் ஆக்கித்தருவர்; நன்றாக முடியும்,

இளமைத் துடிப்பு: நமது நாகரீகத்திலிருந்து நமது சொற்கள் தோன்றின: அவற்றில் உணர்ச்சியுண்டு. வாலிபர் என்கிறோம், இளைஞர் என்கிறோம், காளை எனப் புறநானூறு கூறுகிறது. கட்டமைந்த உடல், நிமிர்ந்த நடை, கட்டுக்கடங்காத துடிப்பு, இவற்றைக் 'காளை' என்ற சொல் நினைவூட்டுகிறது. இளமைத் துடிப்பு, உணர்ச்சி; எத்தனையும் அறியவேண்டுமென்ற ஆவல் இவற்றை இளமை குறிக்கிறது. கரம் என்பதை விட, 'கை' என்றால் ஒழுக்கம், உழைப்பு, முயற்சியென்ற பொருளை நினைவூட்டுகிறது. இதனால், தமிழர் கை, ஆண்டவனாற் கொடுக்கபபட்டது உழைத்துப் பிழைக்கும் ஒழுக்கமே கடமையாக வாழ்வதற்குத்தான், என உணர்ந்தனர் என்ற நாகரீகம் புலனாகின்றது. நமது மொழியாகையாலே, இளமை, காளை, இவற்றின் அடிப்படை, பொருள், மூலச் சொற்கள் நமக்குத் தெரியும்; விளங்கும். கரம் வாலிபன் என்றால் என்ன தெரிகிறது. தெரிய பாணினி

இலக்கணம் படிக்கவேண்டும்; தமிழைப் பிறந்து பாணினியைப் படிப்பதா முதல் வேலை?

வாலிபன் என்றால் இளைஞன்; கரம் என்றால் கை யெனத் தெரிகிறதென்றால், குழந்தைக்கு ஒருமுறை யானை (பொம்மை)யைக் காட்டி 'யானை' எனச் சொல்லிக் கொடுத்தால், பின் அது பார்க்கும்போதெல்லாம் அதனை 'யானை' என்பது போலத்தான், 'கரம், வாலிபன்' என்ற சொற்களும். மற்றப்படி இளமையின் அடிப்படையாய் இளைஞன் அமைந்தது, ஒழுக்கம், முயற்சி என்ற பொருளில் 'கை' அமைந்தது என்பதுபோலக் காரணத்துடன் அவை வழங்கவில்லை? சொன்னால் விளங்கவும் மாட்டாது. ஆகவே தான் நடையில்நமது மொழிச் சொற்களையே ஆளவேண்டு மெனக் கூறுகிறோம். இவைதான் தனித் தமிழ் என்பத னுடைய கருத்து. கலைகளை வேண்டாமென்பதோ, தன் னிடமில்லாத சொற்களை வேண்டாமெனத் தள்ளுதலோ அல்ல அவர்கள் கொள்கை; அதிற் பகையுமில்லை. ஆங்கிலத்தை வேண்டாம் என்பதிற் பகையில்லையானால், இதில் மட்டும் பகையுள்ளதாகக் கருதுவானேன்?

பெயரும் புகழும்:- இன்றைக்கு நடை விளங்கவில் லையா; கடுமையாக உள்ளதா? எளிய தமிழ்ச் சொற்கள் எவ்வளவோ உண்டே எடுத்துத் தருகிறேன். அதற் கெனப் பிறமொழிச் சொற்கள் ஏன்? கியாதியும் வேண் டாம் கீர்த்தியும் வேண்டாம். இசை, சீர் இவை கடுஞ்சொற் கள், அவையும் வேண்டாம். 'பேர்போன', 'புகழுடைய' என்ற சொற்களைப் போட்டெழுதலாமே. இப்படியே எல்லா இடங்களிலும் நல்ல நடையில் விளங்கும் நடையில் எழுத முடியும். இன்றும் பெரும்பான்மையான கிராம மக்களிடம் நல்ல சொற்கள் காணப்படுகின்றன. நாம் வழங்கும் வட சொற்கள் அவர்களிடம் மிகக் குறைவு. மிகச் சிறுபான்மை யான நகரத்தை, அங்கு வாழும் மக்களைக்கொண்டே நாம்

சொற்களைப் பற்றிப் பேசுகிறோம்; முடிவுகட்டுகிறோம், மொழியைப் பொறுத்தமட்டில் இன்னும் மேல்நாட்டார் போலவே இருக்கிறோம். அவன் இங்கு வந்தால் நகரத்தின் ஒரு பகுதியைக் கொண்டு இந்தியாவைப் பற்றி மதிப்பிட்டுப் போகிறான்; நாமும் அப்படியே செய்கிறோம். இது மொழிக்குக் கெடுதல். ஆங்கிலத்தையும் பிறமொழிச் சொற்களையும் ஏற்றுக்கொண்டாற்றான் தமிழ் வளரும்; இல்லாவிடில் இறந்துபோம் என்கிறோம். தமிழிற் சிறந்த இலக்கியங்கள்,- சிலப்பதிகாரம் மணிமேகலை காலம்வரை நல்லநடையில்தான் சிறந்தன; நாடும் சிறந்தது.

வடமொழிச் செல்வாக்கு:- அதன்பின் அரசும் மாறி சமஸ்கிருதச் செல்வாக்கு மிகுந்து அச்சொற்கள் மிகுதியாகக் கலந்தமையாற்றான், மலையாளம், கன்னடம் முதலிய மொழிகள் தோன்றின. 800 ஆண்டுகட்கு முன்னேதான் இவை தோன்றின. அதற்குமுன் அங்கெல்லாம் தமிழ் (சேர) அரசாட்சியே தமிழ் மொழியே வழங்கி வந்தன. அங்கு வழங்கிய தமிழ், மலையாள கன்னடமாக மாறப் பெரியதோர் காரணம் பிற சொற்களை மிகுதியாக ஏற்றுக் கொண்டதுதான்.

வட வேங்கடம்வரை பரவியிருந்த தமிழ் சென்னையை நோக்கி வந்துகொண்டிருக்கிறது. ஏன்? நெருங்கிய தொடர்புடைய தெலுங்கு தமிழ் உறவை மறந்தேபோவதன் காரணம்! பிறமொழிச் சொற்கள் மிகுதியாகக் கலந்துபோனால் தனது நாகரிகமானது உறவு மறந்தும் மறைந்தும் போகிறது.

அதன்பின் வந்த சில நூல்களும் நல்ல நடையில் எழுதியவையே. இனியேனும், நல்ல நடையைக் காப்பாற்றினாற்றான் தமிழ்நாடு இன்றைய அளவிலேனும் நிலைக்கும்; நல்ல நூல்கள் வெளிவரும்.

●